







# பூவைப் போல...
# உங்கள் மேனியை
## மலரச் செய்வது
# ரெக்ஸோனா








ரெக்ஸோனா சோப்பில் இருப்பது கேடில் — சருமத்திற்கு ஊட்டமளித்து உங்கள் இயற்கையழகை வெளிக் கொணரத் துணைபுரியும் எண்ணெய்கள் கலந்த விசேஷத் தைலமே கேடில்!

**கேடில் கலந்துள்ள சோப் இது ஒன்றே**

RP. 148-50 TM

ரெக்ஸோனா ப்ரொப்ரைடரி லிமிடெடுக்காக இந்தியாவில் தயாரித்தது

# கல்கி பொருளடக்கம்



"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்கள் ; சம்பவங்களும் கற்பனையே.



மலர் 16 | இதழ் 48

தமிழ்த்திரு நாடு தன்னைப் — பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா — *பாரதியார்*

ஹேவிளம்பி | ஆனி 16

# வாழ்க, தமிழ் எழுத்தாளர்கள்!

நாடு சுதந்திரம் பெறுவதற்கு முன்னால் நமது செந்தமிழ் நாட்டில் ஒருவழக்கம் இருந்து வந்தது. எந்தக் காரியத்துக்கும் "வடக்கே பாருங்கள்!" என்று சொல்லி வந்தார்கள். அரசியல், இலக்கியம் எல்லாவற்றுக்கும் அதையே சொல்லி வந்தார்கள். "சிறுகதையா? வடநாட்டிலேதான் நல்ல சிறுகதைகளைக் காணலாம். தமிழ்நாட்டிலே அதன் மொழிபெயர்ப்புகள்தான்!" என்பார்கள், "தாய்மொழி அபிமானமா? எல்லாம் தமிழ்நாட்டுக்கு அப்பால்தான்! வங்காளத்தைப் பாருங்கள்! ஆந்திர நாட்டைப் பாருங்கள்! தமிழ் நாட்டிலே தமிழ் மொழி அபிமானம் ஏது?" என்பார்கள்.

இது மாதிரிதான் மற்றக் காரியங்களும். வீர புருஷர்களா? தமிழ்நாட்டில் கிடையாது! தியாகிகளா? தமிழ் நாட்டில் கிடையாது! சங்கீதம், சித்திரம், சிற்பம், நாடகம், நடனம் முதலிய கலைகள் ஒன்றுகூடத் தமிழ்நாட்டில் கிடையாது! நல்ல பத்திரிகைகள் கூடத் தமிழ்நாட்டில் கிடையாது! எழுத்தாளர்கள், நாவலாசிரியர்கள், ஆராய்ச்சியாளர்கள் இவர்களில் யாருமே தமிழ்நாட்டில் கிடையாது. எல்லாமே வடநாட்டில் தான்! தமிழ்நாட்டில் பின் என்ன இருக்கிறது? ஒற்றுமைக் குறைவு. வெறும் வறட்டு மூளை, அசூயை, சுயநலம், துவேஷம் இவைகள்தான் இருக்கின்றன!

மேற்கண்டவாறெல்லாம் தமிழர்களே தமிழ்நாட்டைத் தாழ்த்திச் சொல்லிக் கொண்டிருந்த காலம் மலையேறி விட்டது. "எங்கள் தமிழ் நாடு!" என்றும், "எங்கள் தமிழ் மொழி!" என்றும், "நாங்கள் தமிழர்கள்!" என்றும் மார்தட்டிக் கொண்டு சொல்லும் எண்ணம் இப்போது தோன்றி வளர்ந்து வருகிறது.

இந்த உணர்ச்சியைத் தமிழ்நாட்டில் உண்டாக்கி வளர்ப்பதற்கு மகாகவி பாரதியார் நாளிலிருந்து எத்தனையோ எழுத்தாளர்கள் பாடுபட்டு வந்திருக்கிறார்கள் என்பதைப் பற்றி அபிப்பிராய பேதமே இருக்க முடியாது. பாரதியார், திரு வி. க., பேராசிரியர் கல்கி போன்ற எண்ணற்ற எழுத்தாளர்களின் எழுத்துக்கள் தமிழ் மக்களுக்கு அத்தகைய சுய நம்பிக்கையையும் சக்தியையும் அளித்தன.

சென்ற முப்பது ஆண்டுகளில் தமிழ் நாட்டில் அரசியல், இலக்கியம், கலை ஆகிய எல்லாத் துறைகளிலும் அபிவிருத்தி ஏற்பட்டிருக்கிறது. எல்லாவற்றுக்கும் மேலாக வசன இலக்கியத் துறையில் நல்ல முன்னேற்றம் ஏற்பட்டிருக்கிறது.

முப்பது ஆண்டுகளுக்கு முன்னால் நல்ல முறையில் வசனம் எழுதியவர்களை விரல்விட்டு எண்ணி விடலாம். சென்ற இருபது வருஷங்களிலோ தமிழ் எழுத்தாளர்கள்—நல்ல வசன நடை எழுதுகிறவர்கள் அமோகமாக வளர்ந்து விட்டார்கள். சென்ற பத்து ஆண்டிலோ நல்ல சக்தி வாய்ந்த தமிழில், வேகமும் விறுவிறுப்பும் கொண்ட அருமையான சிறுகதைகளையும், நாவல்களையும், இலக்கியக் கட்டுரைகளையும் ஓரளவு விஞ்ஞானக் கட்டுரைகளையும் எழுதும் திறமை பெற்ற எழுத்தாளர்கள் நூற்றுக்கணக்கில் ஏற்பட்டு விட்டார்கள்.

இந்தியாவில் வேறு எந்த மாகாணத்தைக் காட்டிலும் தமிழ் நாட்டிலேதான் ஏராளமான கதைகளும் கட்டுரைகளும் நாவல்களும் எழுதப்படுகின்றன: பத்திரிகைகள், சஞ்சிகைகள் ஆகியவற்றின் வளர்ச்சி அபரிமிதமாக ஏற்பட்டிருக்கிறது. புத்தகப் பிரசுரங்களும் நல்ல வளர்ச்சி யடைந்து வருகின்றன. பாரத நாட்டில் உள்ள வேறு எந்தப் பத்து மாவட்டங்களைக் காட்டிலும் தமிழ் நாட்டில் உள்ள பத்து மாவட்டங்களில்தான் இன்று பத்திரிகை—புத்தகம் படிப்போர் அதிகமாக இருக்கிறார்கள்.



திரு சம்பந்த முதலியார்

தமிழ் நாட்டில் எழுத்தறிவும் பத்திரிகை — புத்தகம் படிக்கும் வழக்கமும் பரவி வருவதற்குத் தமிழ் எழுத்தாளர்கள் ஆற்றி வரும் தொண்டு அபாரமானது. மேலும் சிறந்த முறையில் மக்களுக்குத் தொண்டாற்றுவதற்காக அவர்கள் தங்களுக்குள் இருந்து வந்த 'எழுத்தாளர் காய்ச்சல்' என்னும் நோயை அடித்துத் துரத்திவிட்டு எழுத்தாளர்களுக்குள் ஒற்றுமை உண்டு பண்ணவும், எழுத்தாளர்களின் உரிமைகளையும் நலன்களையும் பாதுகாக்கவும், மூத்த எழுத்தாளர்களைப் போற்றிப் பாராட்டவும், மற்றும் பல அரிய காரியங்களைச் செய்யவும் ''தமிழ் எழுத்தாளர் சங்கம்'' என்று ஒரு சங்கம் அமைத்திருக்கிறார்கள். அது எழுத்தாளர்களுக்கு நல்லபலனையும் அளித்து வருகிறது.

மேற்படி தமிழ் எழுத்தாளர் சங்கத்தின் ஐந்தாவது மகாநாடு இம்மாதம் 22, 23 தேதிகளில் சென்னை ராஜாஜி மண்டபத்தில் நடந்ததை நேயர்கள் அறிந்திருப்பார்கள். அதுவும் சாதாரணமாய் நடைபெறவில்லை. பிரமாதமான வரவேற்புகள், உபசாரங்கள், ஊர்வலங்கள், விருந்துகள் ஆகிய விமரிசைகளுடன் வெகு சிறப்பாக நடைபெற்றது. பழமையில் வேரூன்றி, புதுமையில் நிலைத்து, தாங்கள் அனுபவித்த இன்பங்களைத் தமிழ்ச் சமூதாயத்துக்கு இலக்கியங்களாக வழங்கிய இரு பெரும் பெரியோர்களான நாடகப் பெரும் புலவர் பம்மல் திரு சம்பந்த முதலியார், நாவலர் டாக்டர் திரு ச. சோமசுந்தர பாரதியார் ஆகியவர்களைப் பாராட்டிக் கேடயங்கள் வழங்கினார்கள். அவர்களையும், அவர்கள் இயற்றிய நூல்களையும் அலங்காரமான மோட்டார்காரில் ஏற்றிவைத்து ஊர்வலமாக அழைத்து வந்தார்கள். முன்னால் யானை கட்டியம் கூறிக்கொண்டு செல்ல, மேளவாத்தியம் முழங்க, எண்ணற்ற எழுத்தாளர்கள் புடை சூழத் திருவல்லிக்கேணி பார்த்தசாரதி கோவிலிலிருந்து மகாநாடு நடைபெற்ற ராஜாஜி மண்டபம் வரையில் ஊர்வலம் வந்த காட்சியைப் பார்த்துத் தமிழ்த்தாய் மனம் பூரித்துப் போனாள்.

தமிழ் நாட்டைத் தட்டி எழுப்பிய மகாகவி பாரதியாரின் பால்யத் தோழர் நாவலர் சோமசுந்தர பாரதியார். அரசியல், இலக்கியம், சமூகம் ஆகிய துறைகளில் பாரதியாரின் கொள்கையே தம்முடைய கொள்கையாகக் கொண்டவர். அவருக்கு மகாகவி பாரதியாரிடம் உள்ள பற்றுக்கு ஒரு உதாரணம் காட்டினார், அவரைப் பாராட்டிப் பேசிய திரு இ. ஆ. பெ. விசுவநாதம் அவர்கள். ''மூன்று வயதில் சம்பந்தர் எப்படித் தேவாரம் பாடினார் என்ற சந்தேகம் டாக்டர் சோமசுந்தர பாரதிக்கு இருந்தது. அத்தகைய சந்தேகத்தைத் தம்முடைய ஏழாவது வயதிலேயே வெண்பாவைப் பாடிக் காட்டிப் போக்கி வைத்தார் மகாகவி சுப்பிரமணிய பாரதி'' என்றார். தமிழனும் 'நான் தமிழன்' என்ற கர்வமும் நாவலர் திரு சோமசுந்தர பாரதியார் அவர்கள் இரத்தத்தில் ஊறிக் கலந்த விஷயங்கள்.

திரு சோமசுந்தர பாரதியாரைப் போலவே நல்ல தமிழ் அன்பும் தமிழ் உணர்ச்சியும் கொண்டவர் நாடகப் பேராசிரியர் பம்மல் சம்பந்த முதலியார். தமிழ் நாட்டில் நாடகக் கலையின் மறுமலர்ச்சிக்காகத் தம்முடைய வாழ்நாளையே அர்ப்பணித்த பெரியார். சுமார் எண்பத்தைந்து நாடகங்கள் எழுதித் தமிழ் நாடகத்துக்கு ஏற்றம் அளித்தவர்.

இவர்கள் இருவருக்கும் இந்த ஆண்டு எழுத்தாளர் மகாநாட்டில் கேடயங்கள் வழங்கிப் பாராட்டியது மிகப் பொருத்தம் என்பதில் சந்தேகமில்லை. இந்த இருபெரும் புலவர்களும் இன்னும் பல்லாண்டு காலம் வாழ்ந்து தமிழ் இலக்கியத்துக்கும், தமிழ் மக்களுக்கும் தொண்டாற்றத் தமிழ்த்தாய் அருள் புரிய வேண்டும் என்று பிரார்த்திக்கிறோம்.

** ** **

இந்த மகாநாட்டை நமது தலைவர் ராஜாஜி அவர்கள் திறந்து வைப்பதாக இருந்தது. அவர்கள் உடல் நலக் குறைவு காரணமாக மகாநாட்டில் கலந்துகொள்ள முடியவில்லை. அவருக்குப் பதிலாகப் பழைய இந்திய பெடரல் கோர்ட்டில் நீதிபதியாக இருந்து புகழுடன் விளங்கிய திரு எஸ். வரதாச்சாரியார் அவர்கள் மகாநாட்டை ஆரம்பித்து வைத்தார். ''தங்கள் எழுத்தின் மூலமாக மக்களை உயர்த்திச் சமூகத்துக்கு நன்மை செய்ய வேண்டும். சமூக சீர்திருத்தமே எழுத்தாளர்களின் லட்சியமாக இருக்க வேண்டும்'' என்று தமது திறப்புரையில் வற்புறுத்தினார். இந்த யோசனையை எழுத்தாளர்கள் எடுத்துக் கொண்டு கடைப்பிடிப்பார்கள் என்பதற்குச் சாட்சி கூறுவது போலிருந்தது சபையில் எழுந்த கரகோஷம்.

காரியத்துக்குத் தகுந்த மனிதர் கிடைப்பது அருமை; மனிதருக்குத் தகுந்த காரியமும் கிடைப்பது அருமை. ஆனால் இரண்டும் பொருத்தமாகச் சேர்ந்திருக்கும் சம்பவம் தமிழ் எழுத்தாளர் சங்கத்தில் நிகழ்ந்திருக்கிறது. தமிழ் எழுத்தாளர் சங்கத் தலைவராக திரு ஏ. ஜி. வெங்கடாச்சாரியார் தேர்ந்தெடுக்கப்பட்டிருக்கிறார். அவருடைய தலைமையில்தான் இந்த ஆண்டு மகாநாடும் நடைபெற்றது. திரு ஏ. ஜி. வெங்கடாச்சாரியார் தமிழ் எழுத்தாளராகி இருபத்தைந்து வருஷங்களுக்கு மேலாகிறது. பல வகையான எழுத்துத் துறையில் அனுபவப்பட்டவர். முக்கியமாக அரசியல் துறையில் வெட்டு ஒன்றும் துண்டு இரண்டுமாக எழுதுவதில் பெயர் பெற்றவர். அவர் தம்முடைய தலைமைப் பிரசங்கத்தில் எழுத்தாளர்கள் கடமையைப்பற்றிப் பிரஸ்தாபித்தார். தமிழ் மரபுக்கு ஏற்ப இலக்கியங்களைப் படைக்க

# பாலம் நிற்குமா?

பூர்வாங்க சர்வகலாசாலைப் பரீட்சையின் முடிவுகளின் விளைவாகக் கலைக்கல்லூரிகளில் மாணவர் தொகை பெரிதும் குறைந்திருப்பதாகப் பேசிக் கொள்கிறார்கள்.

வேண்டும் என்று கேட்டுக் கொண்டார். அவர் வேண்டுகோளைத் தமிழ் எழுத்தாளர்கள் ஏற்றுக் கொள்வார்கள் என்பதில் அபிப்பிராய பேதம் இருப்பதற்கில்லை.

தமிழ் எழுத்தாளர் மகாநாட்டுக்குக் காரசாரமான பிரச்னை ஒன்று வேண்டும் என்பதற்காகவே, திரு கி. வா. ஜகந்நாதன் தலைமையில் ஒரு விவாத அரங்கு நடத்தினார்கள். சிறு கதையின் இன்றைய நிலையைப் பற்றிப் பதினன்கு எழுத்தாளர்கள் மிகுந்த ஆவேசத்துடன் வாதமிட்டார்கள். இந்த விவாத அரங்கு ஆரம்பமாவதற்கு முன்பாகவே திரு தேவனின்படத்தைத் திறந்து வைத்த திரும.பொ. சிவஞானகிராமணியார் அவர்கள் சிறுகதை எப்படி எழுதவேண்டும் என்பதைப்பற்றி மிக அழகாக எடுத்துச் சொன்னார். சிறுகதையின் இலட்சணத்துக்கு அயல்நாட்டைப் பார்க்காமல் நமது தமிழ்ப் பண்பாட்டுக்கு ஏற்ப இருக்க வேண்டும் என்று வற்புறுத்தினார். ஆனால் விவாத அரங்கில் பேசிய டாக்டர் ஏ. சிதம்பரநாதச் செட்டியார் அவர்கள் மேல்நாட்டுச் சிறுகதையோடு ஒப்பிட்டுக் கூறும் சிறுகதை தமிழில் இல்லை என்று கூறினர்.

''அப்படியானல் டாக்டர் செட்டியார் இப்பொழுது பத்திரிகைகளில் வெளியாகி வரும் சிறு கதைகளைப் படிப்பதில்லையோ?'' என்றுதான் எண்ணவேண்டியிருக்கிறது.

இலக்கிய விஷயத்தில் அபிப்பிராய பேதங்கள் இருக்கத்தான் வேண்டும். அவற்றை வெளியிடுவதுதான் இலக்கிய வளர்ச்சிக்கு இன்றியமையாத சாதனங்கள். அதற்காக இன்று வெளிவந்து கொண்டிருக்கும் மிகச் சிறந்த சிறு கதைகளைப் படித்துப் பார்க்காமல் அபிப்பிராயங்களை வெளியிடுவது சிறுகதை வளர்ச்சிக்கு உதவி செய்வதாகாது.

இவ்வாறு எழுத்தாளர் மகாநாட்டில் நடைபெற்ற அபிப்பிராய பேதங்கள் ஒருபுறம் இருக்க எழுத்தாளர்கள் அபிப்பிராய பேதமில்லாமலும் பல காரியங்கள் செய்தார்கள். அதைப் பாராட்டத்தான் வேண்டும். காரசாரமான பல விவாதங்களுக்கு மத்தியில் தீர்மானங்களை நிறைவேற்றினர்கள். அகில இந்திய ரேடியோவில் தமிழ் மொழிக்குச் சரியான அந்தஸ்து கொடுக்க வேண்டும் என்றும் கட்டுரை, கவிதை, நாடகங்கள் முதலியவற்றுக்கு இப்பொழுது வழங்கி வரும் சன்மானத்தை இன்னும் கொஞ்சம் அதிகப் படுத்த வேண்டும் என்றும் தீர்மானங்களைக் கொண்டு வந்து நிறைவேற்றினர்கள். இதைத் தொடர்ந்து இன்னும் சில தீர்மானங்கள்—சென்ற ஆண்டில் நிறைவேற்றிய தீர்மானங்களே இந்த ஆண்டும் நிறைவேற்றப் பட்டன. இந்தத் தீர்மானங்கள் வெறும் தீர்மானங்களாக, ஏட்டுச் சுரைக்காயாக இல்லாமல் பயனளிக்க வேண்டுமானல் தமிழ் எழுத்தாளர்கள் எல்லாம் ஒற்றுமையாக முயற்சி எடுக்க வேண்டும். அப்படி எடுத்தார்களானல் மகத்தான வெற்றியை யடையலாம் என்பதில் சிறிதும் ஐயமில்லை. தமிழ் நாட்டுக்கும் தமிழ் எழுத்தாளர்களுக்கும் நன்மையான காரியங்களைப் பேரு முனையினல் சாதித்த பெருமை அவர்களைச் சாரும்.



திரு சோமசுந்தர பாரதியார்

தமிழ் எழுத்தாளர் சங்கம் செய்த எல்லாத் தீர்மானங்களையும் நாம் முழு மனத்துடன் வரவேற்று ஆதரிக்கிறோம்.

மொத்தத்தில் தமிழ் எழுத்தாளர்களின் ஐந்தாவது மகாநாடு தமிழ் எழுத்துலகில் ஒரு பெரிய திருப்பத்தையே ஆரம்பித்திருக்கிறது. இந்த மகாநாட்டின் வெற்றிக்குப் பாடுபட்ட தமிழ் எழுத்தாளர் சங்கத் தலைவர் திரு ஏ. ஜி. வெங்கடாச்சாரியார், பொதுச் செயலாளர் திரு அழ. வள்ளியப்பா, வரவேற்புக் குழுத் தலைவர் திரு ந. சிதம்பர சுப்பிரமணியம் இன்னும் சங்க நிர்வாகிகள், எழுத்தாளர்கள் எல்லாரையும் மனம் உவந்து பாராட்டுகிறோம். தமிழ்நாடும், தமிழ்மொழியும், தமிழ் எழுத்தாளர்களும் பல விதங்களில் மகோன்னதத்தை அடையப் போகிறார்கள் என்னும் பரிபூரண நம்பிக்கையோடு ''வாழ்க, எழுத்தாளர்கள்!'' என்று வாழ்த்துகிறோம்.

# உண்மையை இழந்து விடலாகாது

**ராஜாஜி**

கீழ்க்கண்ட கடிதம் ஒரு நல்லவர் சமீபத்தில் எனக்கு எழுதினார். இதைப் படித்து வருத்தப்பட்டேன். அவர் மேல் அல்ல; இப்படியெல்லாம் பயப்படுகிறார்களே என்று வருத்தம் அடைந்தேன்.

"பூஜ்ய ராஜாஜி அவர்களுக்கு,

அநேக நமஸ்காரம். க்ஷேமம். கிட்டத்தட்ட அரை நூற்றாண்டுக்கும் மேலாக நம் தாய்நாட்டுக்கும் குறிப்பாக, தமிழ் நாட்டுக்கும் செய்து வந்த மகத்தான தொண்டுகளுக்குச் சிகரம் வைத்தாற் போல் இந்து சநாதன தர்மத்துக்கு விளக்கம் தந்து அதிலிருந்து ஒதுங்கி நின்றவர்களையும் உணரச் செய்து வரும் தங்கள் தற்கால சேவை மகத்தானது. கிறிஸ்துவத் தத்துவத்தைச் சொல்லி அந்தப்பெரியவரும் நிலையான சநாதன தர்மத்தையே வற்புறுத்தி வந்திருக்கிறார் என்பதை நிரூபிப்பதும் பாரபட்சமற்ற ஒரு ஹிந்து செய்ய வேண்டிய வேலையாக மதித்தே தற்போது ஒரு கிறிஸ்துவத் துறவியைப் பற்றிக் 'கல்கி' பத்திரிகையில் எழுதி வருகிறீர்கள் என்று நினைக்கிறேன்.

சுமார் ஒரு வருஷத்துக்கு முன்பு தாங்கள் 'கல்கி'யில் எழுதியிருந்த ஹிந்து சாஸ்திர உண்மையைப் பற்றிப் படித்த ஒரு கிறிஸ்தவர், தம் மத சாஸ்திரங்களில் "ஹிந்து சாஸ்திரத்தில் தாங்கள் எடுத்துக் காட்டியது போல் தெளிவாய் ஒரு உண்மையும் இல்லாததால்" தம் மனம் சஞ்சலப்படுவதாகத் தங்களுக்கு எழுதியிருந்தார். தாங்கள் அவருக்குக் கொடுத்த மறுமொழியில், அவர் நினைப்பது போல் கிறிஸ்துவ சாஸ்திரத்தில் ஒன்றுமில்லாமல் இல்லை என்றும் அவரவர் மத சாஸ்திரங்களை ஊன்றிப் படித்தால் ஹிந்து சாஸ்திரங்களில் கண்ட உண்மைகளை அதிலும் காணலாம் என்றும் எழுதியிருந்தீர்கள். அவர் கேள்வியையும், அதற்குத் தாங்கள் அளித்த பதிலையும் 'கல்கி'யில் படித்தேன்.

எல்லா மதங்களையும் மதித்து நடப்பது ஹிந்து தர்மம் என்று தாங்கள் நினைக்கலாம். பூர்ண மத சுதந்திரம் கொடுத்து நமது சுதந்திர அரசியல் நிர்மாணம் செய்யப்பட்டிருக்கலாம். ஒரு ஹிந்துத் தலைவர் கீதையையும் குரானையும் வைபிளையும் ஹிந்துக்களே மிகுந்துள்ள கூட்டங்களிலும் பிரார்த்தனை கீதங்களாய் முழங்கலாம். ஆனால் ஹிந்து தவிர மற்ற மதத்தார் மறந்தும்கூட அவர்கள் பிரார்த்தனைக் கூட்டங்களிலோ, மற்ற சந்தர்ப்பங்களிலோ ஹிந்து சாஸ்திரங்களையோ, அதன் வாடை வீசும் பாடல்களையோ ஸ்மரிப்பதுகூடக் கிடையாது என்பது தங்களுக்குத் தெரியுமோ என்னவோ?

சர்வ சமய சமரச நோக்கத்தோடு தாங்கள் செய்யும் காரியங்களில் அவர்களுக்குச் சாதகமாக உள்ள பாகங்களை மட்டும் பொறுக்கி எடுத்து, தாங்கள் அவர்கள் சாஸ்திரத்தை எவ்வளவு உயர்வாகச் சொல்லியிருக்கிறீர்களோ அதைப் பன்மடங்கு பெருக்கிச் சொல்லி, தங்கள் பிரசாரத்தைஹிந்துக்களுக்கே விரோதமாக உபயோகித்துக் கொள்கிறார்கள் என்பது தங்கள் காது வரை எட்டிக்கூட இராது.

தாயுமானவரும், மாணிக்கவாசகரும், பட்டினத்தாரும் பாடியுள்ள பாடல்களில் குறிப்பான இரண்டொரு பதங்களை மாற்றி அதற்குப் பதில் 'ஏக-பரமபிதா' என்று ஏதோ இரண்டொரு பதங்களைப் போட்டுப் பூர்த்தி செய்து, கிறிஸ்துவ மார்க்கத்தை மேலே சொன்னவர்களும் ஆதரித்திருப்பதாகச் சொல்லித் திரிபவர்களும் தங்களை இலகுவில் விட்டு விடுவார்களா?

தங்களைப் போன்றவர்கள் கிறிஸ்துவர்களைப் பற்றிக் குறைவாக ஒன்றும் சொல்ல வேண்டாம். அதோடு தயவுசெய்து அவர்களின் சாஸ்திரத்தைப் பற்றிய உயர்வைச் சொல்லாமலும் இருக்க வேண்டுகிறேன். உயர்த்திச் சொன்னால் தங்கள் பெருந்தன்மையின் உயர்வை அவர்கள் நினைப்பதுமில்லை; நினைக்கவும்மாட்டார்கள். தாங்கள் சொன்னதைத் திரித்துக் கூறி எத்தனை ஹிந்துக்களை அவர்களுடைய 'ஞான'த்துக்குக் கொண்டு வர முடியும் என்றே பார்ப்பார்கள். இந்தக் கெட்ட எண்ணம் அவர்கள் உடம்போடு ஒட்டியது. அவர்கள் எப்படிச் செய்தாலும் நாம் பாரபட்சமற்ற முறையில் நடந்து கொள்ள வேண்டும் என்று செய்வது நமக்கே நாம் கெடுதி செய்து கொள்வதாகும்.

தங்களைப் போன்றவர்கள் உண்மை நிலை உணர்ந்து நம் முன்னோர்கள் தந்த சாஸ்திரங்களை எல்லோரும் உள்ளது உள்ளபடி உணரச் செய்து வருகிறீர்கள் என்று எவ்வளவோ மகிழ்ந்திருந்தேன்.

தாங்களும் திடீரென்று சமரச ஞானம் புகட்ட வந்து கிறிஸ்தவர்கள் சாஸ்திர விமர்சனம் செய்ய வந்தது மனத்துக்கு மிகுந்த வேதனை தருகிறது......"

மற்ற மதத்தினர் நம்முடைய பக்திப் பாடல்களைப் பாடுவதில்லையே, நாம் ஏன் அவர்களுடைய சமயங்களிலுள்ள நல்ல கருத்துக்களை எடுத்துக் காட்ட வேண்டும்? நம்முடைய பிரார்த்தனைக் கூட்டங்களில் ஏன் அவர்களுடைய சம்பிரதாயப் பிரார்த்தனைகளைச் சேர்த்துக் கொண்டு குழப்ப வேண்டும் என்று கேட்கிறார். பிற மதத்தினரைப் பார்த்தா நாம் நம்முடைய மதத்தைக் கையாள்வது? எல்லா மதங்களையும் மதித்து நடப்பது ஹிந்து தருமம். இதைப் பற்றிச் சந்தேகமில்லை. இதைத்தான் ஹிந்துக்களாகிய நாம் பின்பற்ற வேண்டும். பிறர் குற்றங்களைக் கண்டு நாமும் அவர்களைப் போல் செய்வது ஹிந்து தருமம் ஆகாது. அவ்வாறு செய்தால் நம் தருமத்தை விட்டுவிட்டு அவர்கள் தருமத்தில் சேர்ந்து விட்டவர்களாவோம்.

நம்முடைய மதத்தைப் பற்றி நாம் பயப்படுகிறோம். பயத்துக்குக் காரணமாயிருக்கிற குறைகளை நாம் கவனித்துக் கொள்ள வேண்

டுமே யொழிய, பிற மதங்களைக் கண்டு பயந்து பயந்து சாகலாகாது. அறியாமையை விலக்கி ஹிந்து மதத்தில் மக்களுக்கு நம்பிக்கையும் பற்றுதலும் உண்டாக்க வேண்டும். அதற்கு வழி ஹிந்துக்களா யிருப்பவர்கள் நம்பிக்கையும் மதிப்பும் சம்பாதிக்கும் வழியில் வாழ்க்கை நடத்த வேண்டும். ஹிந்து தருமத்தின்படி வாழ்க்கை நடத்திக் கௌரவம் சம்பாதிக்க வேண்டும். காவலும் கட்டும் பயன் இல்லை. எல்லாத் துறைகளும் ஆண்டவனை அடையும் என்று நம்முடைய சமயாச்சாரியர்கள் நமக்குத் தந்திருக்கும் விலையற்ற உண்மையைப் பயந்து போய் இழந்து விடலாகாது. அது போனால் ஹிந்து மதத்தில் வேறு என்ன இருக்கிறது? சடங்குகளும் முப்பத்திரண்டு சமய பேதங்களுமே நிற்கும். தற்சமயம் ஹிந்து மதத்துக்கு உலக மக்கள் அனைவரும் கௌரவம்செலுத்துவதற்குக் காரணம்இந்தப் பேருண்மையானது ஹிந்து தருமத்தில் இடம் பெற்றிருப்பதினாலேதான். அதை விட்டால் ஹிந்து தருமத்துக்கு நஷ்டம் உண்டாக்கினவர்கள் ஆவோம்.

# தாழி உடையுமா?

சில மாதங்களுக்கு முன்பு ஐரோப்பிய நாடுகளில் ஒன்றான ஹங்கேரியில் பெரும் குழப்பமும் கலவரமும் ஏற்பட்டன.

ஹங்கேரி ரஷ்ய சார்புள்ள நாடு. கம்யூனிஸ்ட் ஆட்சி நடைபெறும் நாடு. அதனாலே மேற்கத்திய நாடுகளுக்கு, ஹங்கேரியில் குழப்பம் என்றவுடன் பெரும் சுவாரஸ்யம் தட்டி விட்டது. அங்கே கலவரம் நடைபெற்றதன் காரணங்களும் விவரங்களும் தெரிந்து கொள்ள வேண்டும் என்று விரும்பினர். ஆனால் ஹங்கேரியோ இரும்புத் திரைக்குள் இருக்கும் நாடு. அந்நாட்டிலிருந்து தகவல்கள் வெளிவருவது அவ்வளவு சுலபமாக இருக்கவில்லை. அதனால் ஐ. நா. சபையின் சார்பில் ஒரு தூதுகோஷ்டி ஹங்கேரிக்குச் செல்லவேண்டும் என்று முடிவு செய்யப்பட்டது. ஆனால் கலகம் நடந்து கொண்டிருக்கும்போதே ஒரு தூதுகோஷ்டி ஹங்கேரிக்குள் செல்ல ரஷ்ய சர்க்கார் அனுமதிக்கத் தயாராக இல்லை. ஹங்கேரியில் சமாதான நிலை ஏற்பட்ட பின்னரே விசாரணைக் கமிட்டி வரவேண்டும் என்றனர். அதன்படியே ஹங்கேரியில் எழுந்த கிளர்ச்சி அடங்கிய பின்னர் தூதுகோஷ்டியினர் உள்ளே நுழைந்து பரிசீலனை செய்தனர். நூற்றுக்கணக்கான ஹங்கேரி மக்களிடம் கிளர்ச்சியைப் பற்றி விசாரித்தனர். அந்த விசாரணையின் பயனாக, ஹங்கேரி மக்கள் ஆளும் கட்சியை எதிர்த்துக் கிளர்ச்சி செய்தனர் என்றும், அதை ரஷ்ய சர்க்கார் பலமான ராணுவ நடவடிக்கை எடுத்து அடக்கி விட்டனர் என்றும் அவர்கள் கண்டனர். இந்த முடிவுகள் சென்ற வாரம் பத்திரிகைகளில் வெளியாகி யிருக்கின்றன.

''வெண்ணெய் திரண்டு வரும் வேளையில் தாழி உடைந்தது'' என்று சொல்வார்களே, அதைப்போல், இந்த ஹங்கேரி அறிக்கை அமெரிக்கா ரஷ்யா ஆகிய இரண்டு வல்லரசுகளிடையே சமீபத்தில் ஏற்பட்டுள்ள ஓர் நல்ல சூழ்நிலையைக் கெடுத்து விடுமோ என்று உலக மக்கள் ஐயுறுகின்றனர்.

சில நாட்களுக்குமுன் அணுகுண்டு சோதனைகளைப் பற்றி ரஷ்யா ஒரு யோசனை வெளியிட்டது. அதாவது குறைந்த பட்சம் மூன்று வருஷ காலத்துக்காவது அணுகுண்டு சோதனைகளை நிறுத்தி வைக்க ஒப்பந்தம் செய்து கொள்வோம் என்று வல்லரசுகளுக்கு ரஷ்யா யோசனை கூறியது. இந்த யோசனையை அமெரிக்க ஜனாதிபதி மிகுந்த உற்சாகத்தோடு வரவேற்றார்.

இதைப் படித்த உலக மக்கள் அனைவரும் உள்ளம் மகிழ்ந்தார்கள். அணுகுண்டு சோதனைகளால் உலகில் பரவும் விஷக் காற்றும் விஷ நீரும் மூன்று வருஷங்களுக்காவது தடைபடுமே என்று சந்தோஷப் பட்டார்கள். மூன்று வருஷங்களுக்கு நிறுத்தக்கூடியவர்கள் இன்னும் மேற்கொண்டு நிறுத்தி விடவும் கூடும் என்று பகற்கனவு கண்டு வந்தார்கள். இந்தச் சமயத்தில் ஐ. நா. சபையின் ஹங்கேரி அறிக்கை வெளியானது பெரும் கவலையை உண்டாக்கி விட்டிருக்கிறது. ஏற்பட்டிருக்கும் நல்ல சூழ்நிலையைக் கெடுத்து விடுமோ, எண்ணியவை யெல்லாம் உண்மையிலேயே வெறும் பகற்கனவாகி விடுமோ என்று ஐயுறும்படி செய்து விட்டது.

ஏனெனில் ஐ. நா. விசாரணைக் கமிட்டியின் ஹங்கேரி அறிக்கையைப் பற்றி ரஷ்யா மிகவும் கோபமடைந்துள்ளது. மிகவும் பாரபட்சமான அறிக்கை, நடுநிலைமையில் நின்று பேசப்படவில்லை என்று ரஷ்யா, அறிக்கையைப் பற்றிக் குற்றம் சாட்டுகிறது. ரஷ்யாவைப் பற்றி உலக நாடுகளிடையே துஷ்பிரசாரம் செய்ய அமெரிக்கா கையாண்ட மிக மட்டரகமான தந்திரம் இது என்று ரஷ்யா குறை கூறுகிறது.

இந்தப் போக்கினால் ரஷ்யா அமெரிக்காவினிடையே சமீபத்தில் ஏற்பட்ட சிநேகபாவம் மீண்டும் கெட்டுவிடுமோ என்று உலகிலுள்ள நல்லவர்கள் பயப்படுகிறார்கள்.

ரஷ்ய அமெரிக்க பகைமையினால் லாபம் பெறும் சில சுயநல ராஜ தந்திரிகள் இந்த ஹங்கேரி அறிக்கை வெளியானது பற்றி மகிழ்ச்சி யடைகிறார்கள். அவர்கள் மீண்டும் இந்தப் பகைமையை வளர்த்து விட்டு, உலகைப் பழைய நிலையில் இருத்தவே முற்பட்டிருக்கிறார்கள்.

ரஷ்யத் தலைவர்களும், அமெரிக்க ஜனாதிபதியும் இந்தச் சுயநலவாதிகளின் வார்த்தைகளுக்குச் செவி சாய்க்காமல், உலக மக்களின் நலனுக்கு உதவி புரிவார்கள் என்று எதிர்பார்க்கிறோம். இன்றைய மக்கள் மட்டுமல்ல, எதிர்கால மக்களின் நலனையும் கருதி, அணு சோதனை நிறுத்த ஒப்பந்தத்தில் கையெழுத்திடுவார்கள் என்று உலக மக்கள் எதிர்பார்க்கிறார்கள். ஹங்கேரி விஷயம் இந்த நல்ல பணியில் குறுக்கிடாது என்று நம்புகிறோம்.

# சபையில் சண்டித்தனம்

கொழும்பு, ஜூன் 22உ.

இலங்கைப் பார்லிமெண்டின் சரித்திரத்தில் இதற்கு முன் வேறு எப்பொழுதும் ஏற்பட்டிராத மாதிரியான ஒரு பெரிய பரபரப்பு இவ்வாரம் ஏற்பட்டது. வட இலங்கையிலுள்ள வவுனியா தொகுதியின் பிரதிநிதியான ஸ்ரீ ஸி. சுந்திரலிங்கம் என்பவர் சென்ற ஒரு வருட காலமாகவே பார்லிமெண்டுக்கு ஒழுங்காக வருவதில்லை. தனிச் சிங்களச் சட்டம் இயற்றப்பட்ட பின்னர் பார்லிமெண்டைப் பகிஷ்கரிப்பதாகச் சொல்லிக் கொண்டு சபைக்கு வராமல் இருந்தார். ஆயினும் தமது ஸ்தானத்தை இழந்து விடாமல் இருப்பதற்காக மூன்று மாதங்களுக்கு ஒருமுறை சபையில் ஒரு வாசல் வழியாக நுழைந்து மறு வாசல் வழியாகப் போய் விடுவார்.

இப்படிச் செய்து வந்தவர் இவ் வாரம் சிம்மாசனப் பிரசங்கத்தின் மீது அதி முக்கியமான விவாதம் நடைபெறுகையில் இரண்டு நாள் விவாதத்துக்கு வராமலிருந்து விட்டுக் கடைசி நாள் விவாதத்தின் பொழுது சபைக்கு வந்தார். அந்த விவாதத்தில் யார் யார் எவ்வளவு நேரம் பேசுவது என்பதைப் பற்றிச் சகலகட்சிகளுடன் கலந்து ஒழுங்கு செய்யப்பட்டிருந்தது. திடீரென்று வந்த ஸ்ரீ சுந்திரலிங்கம் தமக்கு இரண்டு மணி நேரம் பேச அனுமதி வேண்டுமென்று கேட்டார். சபா நாயகர் நிலைமையை விளக்கிச் சொல்லிய பிறகும் கூட அவர் பிடிவாதமாக இரண்டு மணி நேரம் பேச அனுமதி வேண்டுமென்று கேட்டுக் கொண்டு நின்றார். சபாநாயகர் உட்காரச் சொல்லியதையும் அவர் கேட்கவில்லை. இதன் மீது ஸ்ரீ சுந்திரலிங்கத்தை வெளியேற்றச் சபாநாயகர் கேட்டுக்கொண்டபடி சபை ஒருதீர்மானத்தை நிறைவேற்றியது. இதன் பிறகும் ஸ்ரீ. சுந்தரலிங்கம் வெளியேற மறுத்து விட்டார். இதன் பின்னர் போலிசாரைக் கொண்டு ஸ்ரீ சுந்திரலிங்கம் அவர் உட்கார்ந்திருந்த நாற்காலியுடன் அப்புறப் படுத்தப் பட்டார்.

இந்த நாடகம் இதோடு முடிந்துவிடவில்லை. ஸ்ரீ சுந்திரலிங்கத்தைப் போலிசார் சபைக்கு வெளியே நடைபாதையில் கொண்டு போய் விட்டார்கள். அவர்கள் விட்ட இடத்திலேயே அவர் உட்கார்ந்து கொண்டு நகர மறுத்து விட்டார். அவரைச் சுற்றி ஒரு பெருங் கூட்டமும் கூடி விட்டது. இதையொட்டி வகுப்புக் கலகங்கள் ஆரம்பிக்குமோ என்று அஞ்சிய போலிசார் அவரைக் காரில் போலீஸ் ஸ்டேஷனுக்கு அழைத்துப் போய் அங்கு விடுதலை செய்தார்கள். ஆனால் அவர் போலீஸ் ஸ்டேஷனை விட்டுப் போகாமல் உட்கார்ந்து கொண்டார். நள்ளிரவில் அவரைக் காரில் ஏற்றிக் கொண்டு போய் அவருடைய வீட்டின் அருகில் விட்டார்கள். அவர்கள் விட்டுப் போன நடு ரஸ்தாவில் அப்படியே உட்கார்ந்து கொண்டு, "என்னைப் போலிசார் எந்த இடத்திலிருந்து அழைத்து வந்தார்களோ அங்கு கொண்டு போய் விட வேண்டும். அது வரையில் நகர மாட்டேன்" என்று சொல்லி உட்கார்ந்து கொண்டார். அவரைச் சுற்றிப் பல சிங்கள தெருச் சிறுவர்களும் உட்கார்ந்து கொண்டு கலாட்டா செய்ய ஆரம்பித்தனர். இதன் பின்னர் வேறு வழியில்லாமல் போலிசார் மறுபடியும் அவரைப் போலீஸ் ஸ்டேஷனுக்கே அழைத்துச் சென்று விட்டனர்.

சென்ற மூன்று தினங்களாக அவர் போலீஸ் ஸ்டேஷன் விடுதியிலேயே இருந்து வருகிறார். சாப்பாடு, படுக்கை எல்லாம் அங்கேயே. போலிசாரைக் கேட்டால் "ஸ்ரீ சுந்திரலிங்கத்தை நாங்கள் கைது செய்யவில்லை. இஷ்டப்பட்ட இடத்துக்கு அவர் போகலாம்!" என்கிறார்கள். ஸ்ரீ சுந்திரலிங்கத்தைக் கேட்டால் "என்னைப் பிடித்துக் கொண்டு வந்த இடத்துக்குக் கொண்டு போய் விட்டாலொழிய நான் நகர மாட்டேன்" என்கிறார். அவர் நடத்தும் காரணமற்ற விசித்திரமான சத்தியாக்கிரகம் ஆகஸ்டு மாதம் தாங்கள்



நடத்தப் போகும் சத்தியாக்கிரகத்தைக் கேலி செய்வதைப் போலிருப்பதாக சமஷ்டிக் கட்சியினர் வருத்தத்துடன் கூறுகின்றனர். பல தமிழ்த் தலைவர்கள் நேரில் போய் மன்றாடியும் கூட ஸ்ரீ சுந்திரலிங்கம் போலீஸ் ஸ்டேஷனை விட்டு நகர மறுக்கிறார்.

சபாநாயகரின் உத்தரவுக்கு ஸ்ரீ சுந்திரலிங்கம் பணிய மறுத்ததைப் பொதுவாக எல்லோரும் பலமாகக் கண்டிக்கின்றனர். நீண்ட காலமாகச் சபைக்கு வராமலிருந்தவர் திடீரென்று வந்து தான் இஷ்டப்பட்ட நேரம் பேச அனுமதி வேண்டுமென்று கோரித் தகராறு செய்ததை யாரும் ஆதரிக்கவில்லை. மிகப் படித்த மனிதரும் பிரபல வக்கீலுமான ஸ்ரீ சுந்திரலிங்கத்தின் இந்த விநோதமான போக்கு பெரும்பாலான தமிழர்களுக்குத் துக்கத்தையே கொடுத்து வருகிறது. —ரஜனி

## ஈழ நாட்டுப் பிரயாணம் 25

கண்டியைக் காதல்நகரம் என்றும், ரதியும் மன்மதனும் பவனி வரும் பட்டணம் என்றும் சொல்லலாம் என்றால் ரதியும் மன்மதனும், இந்திரனும் இந்திராணியும் இன்னும் தேவ லோகத்தில் உள்ளவர்கள் எல்லோருமே கொலு வீற்றிருக்கும் தோட்டம் என்று சொல்லத்தக்க ஒரு இடமும் கண்டி நகருக்குச் சமீபத்தில் இருக்கிறது. அதுதான் புகழ் பெற்ற ''பெரதேனியா தோட்டம்.'' இந்தத் தோட்டத்துக்குள் சென்றால் நாம் திடீரென்று தேவலோகத்துக்குச் சென்று விட்டதை உணர்வோம். இத் தோட்டத்தில் போகும் இடங்களில் எல்லாம் சூரியனின் ஒளிக் கதிர் செய்யும் ஜால வித்தைகளையும், புல் வெளிகள் தோறும் இளம் பெண்களும் அவர்கள் அருமைக் காதலர்களும், குழந்தைகளும், பெரியவர்களும் ஆயிரம் விதமான போகங்களிலே பொழுதைக் கழிக்கும் காட்சிகளையும் காணலாம். பாடுகின்ற குயில்கள், மலர் குலுங்கும் மரங்கள், கூடி விளையாடும் புள்ளினங்கள், ரீங்காரமிடும் வண்டுகள், மிருதுவான மகரந்தத் தூளைக் கொண்டுவரும் இனிய தென்றல் எல்லாம் ''இது தேவலோகம்தான்! இது தேவலோகம்தான்!'' என்று சொல்லிக் கொண்டிருக்கும். இது போன்ற அற்புதத் தோட்டங்கள் உலகத்திலேயே இரண்டொன்றுதான் இருக்கின்றனவாம்.

பெரதேனியா தோட்டத்துக்குள் செல்லும் வாசலில் அழகான தூண்கள் நிறுத்திய வாசற்படி இருக்கிறது. அதைத் தாண்டி உள்ளே சென்றால் ஒரு கணம் நமக்கு ஒன்றும் தோன்றாது. மூன்று அடி தாண்டியதுமே இவ்வளவு மாற்றமா என்று வியந்து போவோம். அந்த வியப்பு கலைந்தவுடன் சற்று நகர்ந்தால் ஒரு சிறு மண்டபமும் இந்தத் தோட்டத்தைக் கட்டிக் காத்த தோட்டக் கலை நிபுணர்களின் பெயர்கள் எல்லாம் பொறிக்கப் பட்டு வைத்திருக்கும் பெரிய புத்தகமும் இருப்பதைக் காணலாம்.

மிக நீளமான அந்தத் தோட்ட சூப்பிரண்டெண்டு ஜாபிதாவில் ஒரு இந்தியரின் பெயரையோ, ஒரு இலங்கையரின் பெயரையோ காண முடியவில்லை. எல்லாம் வெள்ளைக்காரர்களின் பெயர்கள்தான்; ஆனாலும் இந்தத் தோட்டத்தை ஒரு கண்டி மன்னர்தான் உண்டாக்கி இருக்கிறார் என்பதைத் தெரிந்து கொண்டு சற்றுப் பெருமைப்பட முடிகிறது. மூன்றாவது விக்கிரமபாகு மன்னன் ஆயிரத்து முந்நூற்று எழுபத்தோராம் ஆண்டிலேயே இந்த அருமையான தோட்டத்தை அமைத்திருக்கிறார். அவர் காலத்திலிருந்து கொஞ்சம் கொஞ்சமாக வளர்ந்து இன்று நூற்று

# பெரதேனியா



# தோட்டம்

பகீரதன்

ஐம்பது ஏக்கரா நிலப்பரப்பில் பரந்து விரிந்து கிடக்கிறது இந்தப் பேராதேனியா தோட்டம். தோட்டத்தின் அமைப்பே தனி அழகுடன் இருக்கிறது. கோழி முட்டை போன்ற வடிவமாக அமைந்திருக்கிறது. சமுத்திர மட்டத்திலிருந்து சுமார் ஆயிரத்து அறுநூறு அடி உயரத்தில் அமைந்துள்ள இந்தத் தோட்டத்தின் ஒரு பக்கத்தில் இலங்கையின் மிகப் பெரிய நதியான மாவலி கங்கை ஓடுகிறது. அது ஓடும் பாவத்தை இன்றெல்லாம் பார்த்துக்கொண்டிருக்கலாம். ஒரு சமயம் பார்த்தால் பேராதேனியா தோட்டத்தை ஆசையோடு கட்டித் தழுவிக் கொண்டு ஓடுவது போலிருக்கிறது. மற்றொரு சமயத்திலோ பேராதேனியா தோட்டத்து அழகில் மயங்கி, ஓடுவதையும் மறந்து நிலைத்து நிற்பது போலிருக்கிறது. இன்னொரு சமயத்திலோ கம்பீரமான இசைவெள்ளத்தை வாரி வழங்கிக் கொண்டு பேராதேனியா நங்கையின் காதலைப் பெறுவதற்காக நடனமாடுவது போலிருக்கிறது. நாம் இந்தக் காட்சிகளைப் பார்த்து அனுபவிக்க ஆரம்பித்து விட்டோமானால் தோட்டத்துக்குள் செல்லவே மனம் இருக்காது. இந்தக் காட்சிகளையே பார்த்துக் கொண்டு இருந்து விடுவோம். ஆகையால் மாவலி கங்கையையும் அதன் அழகையும் மறந்து விட்டுப் பேராதேனியா தோட்டத்துக்குள் செல்லுவோம்.

இந்தத் தோட்டத்தைக் காரில் ஏறிக் கொண்டும் பார்க்கலாம்; காலால் நடந்தும் பார்க்கலாம். நடந்து சென்று பார்த்தால் தான் பேராதேனியா தோட்டத்தின் அழகு முழுமையும் அனுபவித்து மகிழலாம். ஆகையால் நாம் நடந்தே செல்வோம். தோட்டத்தின் மத்தியில் முதல்தரமான சாலை அமைந்திருக்கிறது. அந்தச் சாலையின் இருபுறமும் மரகதக் கற்களால் படிகள் கட்டியது போலப் பசும் புற்கள் வளர்ந்திருப்பதைக் காண்கிறோம். இன்னும் கொஞ்சதூரம் செல்கிறோம். பொன் மயமான மூங்கில் வேலி போட்டது போலச் சாலையின் இருபுறமும் விதம்விதமான மூங்கில்கள் வளர்ந்திருப்பதைப் பார்க்கிறோம். அடாடா! இந்த மூங்கில்களில்தான் எத்தனை விதங்கள். ஒன்றில் கூட முள்ளைக் காண முடியவில்லை. இன்னொரு சாலைக்குப் போகிறோம். அதன் இருபுறமும் ராணுவ வீரர்கள் அணிவகுத்து நின்று நமக்கு மரியாதை செய்வதுபோல் கமுகு மரங்கள் வானோங்கி நிற்கின்றன. அதைத் தாண்டி அப்பால் செல்கிறோம். ஒரு கொடி வீடு நம் கவனத்தைக் கவர்கிறது. வாடாத செடிகளாலும் கொடிகளாலும் ஆன கொடி வீடும், அதனருகில் ஆடும் துளிருடன் விளங்கும் அழகான மரமும் இன்னும் பலவிதமான வண்ண மலர்கள் பூத்துக் குலுங்கும் அபூர்வ மரங்களும் இருக்கின்றன. அவற்றின் மத்தியில் மரகதத்தால் செய்தது போல மனத்தை மயக்கும் பச்சைப் பசேல் என்ற மேஜைகளையும் நாற்காலிகளையும் பார்க்கிறோம். சற்றுக் கூர்ந்து பார்த்த பின்னர்தான் இவை எல்லாம் சாதாரண சவுக்க மரங்கள் என்பதை அறிகிறோம். சவுக்க மரம் வளர வளர இவ்வாறெல்லாம் பல்வேறு உருவங்களில் அதை வெட்டிவிட்டிருக்கிறார்கள் என்பதைத் தெரிந்து கொண்டு ஆச்சரியப்படுகிறோம்.

இந்தக் காட்சிகளை எல்லாம் பார்த்துக் கொண்டு அந்த அந்த இடத்தில் அப்படி அப்படியே மூக்கின்மீது விரலை வைத்துக் கொண்டு நின்று விடுகிறோம். உடன் வந்த

நண்பர் "இன்னும் நாம் பார்க்க வேண்டியது ஏராளமாக இருக்கின்றன. கிளம்புங்கள்!" என்று நம்மைத் தள்ளிக் கொண்டு போனார். ஆங்காங்கு வரிசை வரிசையாகவும் வட்டவடிவமாகவும் பலவித மலர் குலுங்கும் செடிகள் இருக்கின்றன. அவைகளுக்கு மத்தியில் பல்வேறு கோணங்களில் தண்ணீரை வாரி வீசும் பொங்கு புனல் குழாய்கள் இருக்கின்றன. அவைகளிலிருந்து பொங்கி வரும் ஜலத்திரள்கள் இந்திர ஜாலமகேந்திர ஜால வித்தைகளைக் காட்டி நம்மை மயக்கிக் கொண்டிருக்கின்றன.

இவற்றையெல்லாம் தாண்டி அப்பால் சென்றால் ஒரு இடத்தில் குலை குலையாகப் பழுத்துத் தொங்கும் பழத் தோட்டத்தைப் பார்க்கிறோம். இன்னொரு பக்கத்தில் நெருக்கமாகப் பூத்துக் குலுங்கும் இளம் மரக் காவைக்காண்கிறோம். மற்றோர் பக்கத்துக்குச் சென்றாலோ கிழங்கு வகைகளும், காய்கறி வகைகளும் உற்பத்தியாகும் விவசாயப் பண்ணையைப் பார்த்து மகிழ்கிறோம். வேறோர் பக்கத்துக்குப் போனால் விதம் விதமான மருந்துச் செடிகள் பயிரிடப்பட்டிருக்கின்ற காட்சி நம்முடைய கவனத்தைக் கவருகிறது. அது "மனித குலத்துக்கு இடையூறு விளைவித்து வரும் கொடிய நோய்களைக் கொன்று ஒழிப்பேன்" என்று மௌனமாக முரசு கொட்டிக் கொண்டிருப்பது போலத் தோன்றுகிறது.

இந்த மாதிரி காட்சிகளைப் பார்த்துக் கொண்டே சென்றோமானால் சிற்சில இடங்களில் இளங் காதலர்கள் இன்புற்றிருந்து விளையாடுவதற்கு வசதியான எழில் மிக்க சோலைகளைக் காணலாம். வண்ணக் கிண்ணங்களை வைத்து அமைத்திருப்பதைப் போல அழகிய மலர்கள் குலுங்கும் செடிகளையும் அங்குள்ள மணிவாவிகளில் பூத்துக் கிடக்கும் பொற்றாமரை மலர்களையும் பார்த்து இன்புறலாம். இடையிடையே மரகதக் கம்பளத்தை விரித்து விட்டது போன்ற அருமையான புல்வெளிகள். அந்தப் புல்வெளியைப் பார்த்தால் அதில் சற்று நேரமாவது காலை நீட்டிப் படுத்துக் களைப்பாறத் தோன்றும். அவ்வாறு அந்தப் புல் வெளியில் படுத்துக் கொண்டு பெரதேனியா தோட்டத்தைப் பார்த்தால், காவியங்களிலே, இதிகாசங்களிலே, கவிஞர்கள் கற்பனையிலே வர்ணித்திருக்கும் சக்கரவர்த்திகளின் அரண்மனைத் தோட்டங்கள்தான் நமது நினைவுக்கு வரும். ஆனால் அந்தப் புல் வெளியிலிருந்து எழுந்திருந்து மேலே தோட்டத்தில் நடக்க ஆரம்பித்து விட்டால் தேவலோகம் பூமிக்கு வந்து விட்டதோ என்று எண்ணத் தோன்றும். "இயற்கையே தெய்வம், தெய்வமே இயற்கை" என்று ஒரு ஞானி சொல்லியிருக்கிறார். அது எவ்வளவு அனுபவ பூர்வமான வார்த்தை என்பதைப் பெரதேனியா தோட்டத்தின் ஒவ்வொரு பகுதியிலும் காண முடிகிறது.

ஆகா! இந்த மகத்தான தோட்டத்தை நடந்து நடந்து, பார்க்கப் பார்க்க, — ஏன்? கால்களைத்தான் வலிக்கிறது. எவ்வளவு நீளம்! எவ்வளவு அகலம்! எத்தனை விதமான மரங்கள்! உலகில் உள்ள அத்தனை விதமான மரங்களும் அல்லவா இங்கு இருக்கின்றன! இத்தனை பெரிய தோட்டத்தை இப்பொழுது நினைத்தால் யாராவது உண்டாக்கிவிட முடியுமா? சுமார் அறுநூறு வருஷத்துத் தோட்டமல்லவா இது! அறுநூறு வருஷங்களுக்கு முன்னால் இது எந்த மன்னனுடைய உள்ளத்தில் தோன்றியதோ? அப்படிப்பட்ட அவனுடைய உள்ளம் எத்தனை பெரியதாயிருந்திருக்க வேண்டும்? இலங்கைத் தீவில் இயற்கையும் செயற்கையும் எல்லாமே அற்புதம்தான்! இலங்கைத் தீவே வலம்புரிச் சங்குபோல இருக்கிறது! வலம்புரிச் சங்கு என்ன சாமான்யமாகக் கிடைக்கக் கூடியதா? இங்குள்ள இயற்கையின் திருவிளையாடல்களோ எண்ணற்றவை! இங்குள்ள தேயிலைத் தோட்டங்கள் பெரியவை! புத்தர் விக்கிரகங்கள் இருக்கின்றனவே அவை எல்லாம் பெரியவை! அற்பமாகவும் சின்னதாகவும் எதுவுமே இலங்கைத் தீவில் இல்லை.

இப்படிப்பட்ட அற்புதங்கள் கொண்ட ஈழநாடு, எத்தனையோ மகா மன்னர்கள் வாழ்ந்து அரசு புரிந்த இலங்கைத் தீவு இப்போது எவ்வளவு சிறுமை அடைந்திருக்கிறது? கேவலம், செய்த நன்றியைக்கூட அல்லவா மறந்து விட்டது! தமிழ் மக்களுக்கு நியாயமாகக் கொடுக்க வேண்டிய பிரஜா உரிமையைக்கூட அல்லவா இரக்கமின்றிப் பிடுங்கிக் கொண்டது! வெட்கம்! வெட்கம்!

இவ்வாறு எண்ணமிட்டுக் கொண்டே புல் வெளியிலிருந்து எழுந்திருந்தேன். "அதோ, தொங்கும் பாலம் பார்த்தீர்களா?" என்றார்



ஆத்தூர் 'கல்கி' ஏஜண்ட் திரு பி. ஏ. கந்தசாமி ஜூன் மாதம் 9-ந் தேதி திருமதி வேதாம்பாளை மணம் புரிந்து கொண்டார். மேட்டூரில் இவர்கள் திருமணம் விமரிசையாக நடந்தேறியது.



பாலக்காடு டிப்டி தாசில்தாரும் இரண்டாவது வகுப்பு மாஜிஸ்திரேட்டுமான திரு கே. எ. செல்லப்பாவுக்கும் திருமதி சீதாவுக்கும் பங்களூரில் சென்ற மாதத்தில் சிறப்பாக விவாகம் நடந்தேறியது.

நண்பர்: ஆம். மாவலி கங்கையில் ஒரு சிறு பாலம் தெரிந்தது. அது ஆகாயத்திலிருந்து தொங்கிக் கொண்டிருப்பது போலவும், காற்றிலே இலேசாக அசைந்து அசைந்து ஆடுவது போலவும் தோன்றியது. ஆனால் அது ஆகாயத்தில் இருந்து தொங்கவும் இல்லை. காற்றில் அசைந்து ஆடவும் இல்லை. பாலம் அமைக்கும் இன்ஜினியர்கள் செய்திருக்கும் விந்தைப் பாலம் இது. பெரதேனியா தோட்டத்திலிருந்து மாவலி கங்கையின் மறுகரையில் அமைந்துள்ள அரசாங்க விவசாயப் பண்ணைக்குச் செல்வதற்காக அமைத்துள்ள சிறிய இரும்புப் பாலம். இதில் மனிதர்கள் மட்டும்தான் போகலாம். அதிலும் ஒரு சமயத்தில் ஐந்து பேர்கள்தான் சேர்ந்தாற் போல் போக வேண்டும். அப்படிப் போகும்போது அவர்களுடைய கனம் தாங்காமல் அவர்கள் நடையின் அதிர்ச்சியால் பாலம் இலேசாக ஆடிக் குதிக்கிறது. அப்படி ஆடுவதை அனுபவிப்பதற்காகவே பலர் இந்தப் பாலத்தில் அடிக்கடி போய் வருகிறார்கள்.

பாலத்தின் நடுவிலே ஆற்றிலிருந்து எந்த விதமான தாங்கும் தூண்களும் இல்லாமல் மாவலி கங்கையின் இக்கரையிலிருந்து அக்கரை வரையில் ஒரே பாலமாக அமைத்திருப்பதால் அதைத் தொங்கும் பாலம் என்று கூறுகிறார்கள். அவ்வளவுதான்!

இப்பொழுது இந்தத் தொங்கும் பாலத்தில் நடந்து சென்று அதன் மையம் வரையில் வருவோம். இங்கிருந்து இருபுறமும் பார்க்கலாம். நுங்கும் நுரையுமாகச் செல்லும் மாவலி கங்கையின் அழகைப் பார்க்கிறோம். அதிலிருந்து நாம் ஆற்றின் நடுமத்தியில் நின்று கொண்டிருக்கிறோம் என்பதைச் சந்தேகமறத் தெரிந்து கொள்கிறோம். இந்தச் சமயத்தில் பாலமே முறிந்து விழுவது போன்று ஏதோ ஒருவிதமான சத்தம் கேட்கிறது. சற்றுத் திடுக்கிட்டுத் திரும்பி எதிரே பார்க்கிறோம். என்ன ஆச்சரியம்! ஏழெட்டு யானைகள் மாவலி கங்கையில் இறங்கிக் குளிக்கின்றன. அவை மாவலி கங்கையின் நீரில் விழுந்து புரளும் சத்தம்தான் நம்மை அவ்வாறு திடுக்கிடச் செய்து விட்டது.

தமிழ் நாட்டில் பல இடங்களில் ஆற்றுக்கு ஆடுமாடுகளை ஓட்டி வந்து குளிப்பாட்டுவதை நேயர்கள் பலர் பார்த்திருக்கலாம். அது போலவே யானைகளைக் கொண்டு வந்து மாவலி கங்கையில் குளிப்பாட்டுகிறார்கள். குன்றுபோல இருக்கும் அந்த உருவம் சின்னஞ்சிறு மனிதன் சொன்னபடியெல்லாம் கேட்டு ஆற்றில் குளிப்பதைப் பார்க்கும்போது மனிதனின் ஆற்றலை எண்ணி வியக்கத்தான் வேண்டி இருக்கிறது. திடீரென்று ஒரு யானை ஆற்றுத் தண்ணீரில் எதிர் நீச்சல் போட்டுக் கொண்டு பாலத்தை நோக்கி வருகிறது. நாம் அதற்குமேல் அந்தத் தொங்கும் பாலத்தில் நிற்க விரும்பாமல் 'தப்பித்தோம் பிழைத்தோம்' என்று பாலத்தை விட்டுத் தோட்டத்துக்குள் வந்து விடுகிறோம்

பெரதேனியா தோட்டத்துக்குப் போகிறவர்கள் குறைந்த பட்சம் ஒரு நாளாவது அங்கு இருந்து அதன் அழகையும் இயற்கைக் காட்சிகளையும் பார்த்து அனுபவிக்க வேண்டும். அந்தத் தோட்டத்திலிருந்து பார்த்தால் வானத்து மேகங்கள் எல்லாம் காதல் புரிகின்றன. தூரத்தில் தெரியும் மலைச்சிகரங்கள் மரகத மயமாகக் காண்கின்றன. இவைகளுடைய சோபைகளையெல்லாம் அதிகப் படுத்திக் கொண்டு நம்மைச் சுற்றிலும் பலவித நிறங்களில் பூத்துக் குலுங்கும் மரங்கள் காட்சி தருகின்றன. இவ்வாறு எத்தனை எத்தனையோ இன்பங்களை நாள் முழுதும் அனுபவித்து மகிழலாம். தாவர ஆராய்ச்சியில் விருப்பம் உள்ளவர்கள் இந்தத் தோட்டத்துக்குள் சென்று விட்டால் பிறகு வாழ்நாள் முழுவதும் திரும்பி வரமாட்டார்கள்.

இந்தப் பெரிய தோட்டத்தின் ஒரு சிறு பகுதியைத்தான் நடந்து பார்க்க முடிந்தது! மற்றப் பகுதிகளைக் காரிலிருந்தபடியே ஒருவாறு சுற்றிப் பார்த்து முடித்தோம்.

மறுபடியும் ஒரு முறை சாவகாசமாக இலங்கைக்குச் சென்று உலகப் புகழ்பெற்ற இந்தப் பெரதேனியா தோட்டம் பூராவையும் பார்த்துவிட வேண்டும் என்று எண்ணிக் கொண்டே தோட்டத்தை விட்டுப் புறப்பட மனமில்லாமல் புறப்பட்டோம்.

## இலங்கை சர்வ கலாசாலை

கண்டி நகரை விட்டுப் புறப்படுவதற்கு முன்னால் இன்னும் ஒரு இடத்தை அவசியம் பார்த்துவிட வேண்டும். அதுதான் இலங்கை சர்வகலாசாலை. இயற்கையின் எழிலுக்குப் பெரதேனியாபோன்ற சிறந்த இடம் இலங்கையில் இல்லை என்றே கூறிவிடலாம். அத்துடன் இலங்கைத் தீவுக்கு மத்திய இடம் கண்டிமா நகரம்தான். கண்டி நகருக்கு அருகில் இருக்கும் பெரதேனியாவில் சர்வகலாசாலை அமைப்பதுதான் மிகப் பொருத்தம் என்று எண்ணி இங்கு இலங்கை சர்க்கார் சர்வகலாசாலையை அமைத்திருக்கிறார்கள் போலும். இலங்கை சர்வகலாசாலை நீண்டகாலமாகக் கொழும்பு நகரில்தான் இருந்து வந்தது. சமீபத்தில்தான் அதைப் பெரதேனியாவுக்கு மாற்றி யிருக்கிறார்கள். கங்கைக் கரையில் காசி சர்வகலாசாலை அமைந்திருப்பதுபோல மாவலி கங்கைக் கரையில் எழில் மிக்க இயற்கையின் சூழ்நிலையில் இலங்கை சர்வகலாசாலை அமைந்திருக்கிறது. ஏற்கெனவே பெரதேனியா தோட்டத்தினால் புகழ் பெற்றிருக்கும் பெரதேனியா இப்பொழுது இந்தச் சர்வகலாசாலை மூலம் மேலும் புகழ்பெறும் என்பதில் ஐயமில்லை.

இலங்கை சர்வகலாசாலைக் கட்டடங்களைத் தூரத்திலிருந்து பார்க்கும்போதே மனத்தில் ஒருவிதமான பக்தி உணர்ச்சி உண்டாகி விடுகிறது. இவற்றைப் பார்த்ததும் "ஆகா! சர்வகலாசாலை என்றால் இதுவல்லவா சர்வகலாசாலை. இதுபோன்ற இடத்தில் அல்லவா கலைமகள் வாசம் செய்வாள்" என்று எண்ணினேன். அவ்வாறு எண்ணியதை ஒரு தரம் வாய்விட்டும் சொன்னேன்.

உடன் வந்த நண்பர் "பொதுவாக இலங்கைத் தீவுக்கு வரும் யாத்திரீகர்கள் எல்லாம் இலங்கைத் தீவையும், இந்தச் சர்வகலாசாலையையும் பிரமாதப் படுத்துகிறார்கள்" என்று சொல்லி அலுத்துக் கொண்டார்.

"உலகின் பல தேசங்களில் பிரயாணம் செய்து அனுபவப்பட்டவர்களுக்குப் பல விஷயங்கள் தெரியும். அவர்கள் இதயம் கலை உணர்ச்சியுடன் இருக்கும். ஆகையால் அவர்கள் தாங்கள் பார்க்கும் பொருள்களில் உள்ள நல்ல கலை அம்சங்களை மட்டும் பார்த்து அனுபவிப்பார்கள். அதை மற்றவர்களுக்கும் எடுத்துச் சொல்லி மகிழ்வார்கள். ஆனால் இலங்கையிலேயே இருப்பவர்களில் சிலருக்கு இலங்கையின் அருமை பெருமைகளைப் பற்றித் தெரிந்து கொள்ள முடிவதில்லை. அவர்கள் சமுத்தின் மலைகளைப் பார்க்கிறார்கள்; இங்கு இருக்கும் மாடமாளிகைகளைப் பார்க்கிறார்கள். ஆனால் அதில் இருக்கும் கலையை அறிந்து அநுபவிக்கும் சக்தி அவர்களுக்கு இல்லை. அப்படி அறிந்து அனுபவித்துச் சொல்கிறவர்களையும் 'இவர் வீணாக எல்லாவற்றையும் பிரமாதப் படுத்துகிறார்' என்று அலட்சியமாகச் சொல்லி விடுகிறார்கள். அதற்கு நாம் என்ன செய்ய முடியும்?" என்றார் உடன் வந்த சென்னை நண்பர்.

இப்படியாக அவர்கள் ஒருவருக்கொருவர் பரிமாறிக் கொண்டதைக் கேட்டுக் கொண்டிருக்கும் போதே இலங்கை சர்வகலாசாலைக் கட்டடங்களுக்கு அருகில் வந்து விட்டோம்.

ஏதோ சர்வகலாசாலைக் கட்டடங்கள் தானே! செங்கல்லும் சுண்ணாம்பும் கொண்டு கட்டியதுதானே! சென்னையிலும், பம்பாயிலும், தில்லியிலும் இல்லாத பெரிய கட்டடங்களா இவை என்றெல்லாம் எண்ணிக்கொண்டு இந்தச் சர்வகலாசாலைக் கட்டடங்களைப் பார்ப்பதில் பயனில்லை. உண்மையிலேயே கண்டியின் கட்டடக் கலை நுணுக்கப் பாணியில் இலங்கையின் பண்பு கெடாமல் அமைத்திருக்கும் உயர்ந்த கட்டடங்கள் என்று எண்ணி அந்தச் சர்வகலாசாலைக் கட்டடத்துக்குள் பிரவேசிக்கலாம், வாருங்கள்!

இலங்கை சர்வகலாசாலைக் கட்டடங்கள் கலைமகள் கோயில் கொண்டு எழுந்தருளுவதற்கு உகந்த கலைக் கோயில்களாகும். சர்வகலாசாலைக் கட்டடத்துக்குள் நுழைந்ததும் அதன் கம்பீரமும், அழகும், கலை உணர்ச்சியுடன் கூடிய கட்டடச் சுவர்களும் நம்முடைய கவனத்தைக் கவருகின்றன. மேலே அண்ணாந்து நோக்கினால் அந்த மண்டபத்தின் விசாலமும் அழகிய வேலைப்பாடுகளும் காட்சி தருகின்றன. இந்தக் காலத்தில் வேறு இடங்களில் உள்ள சர்வகலாசாலைக் கட்டடங்களுக்குள் சென்றால் நமக்கு ஏதோ ஒரு புது உணர்ச்சி ஏற்படுகிறது. நம் தமிழ் நாட்டிலேயோ, அல்லது பாரத நாட்டிலேயோ உள்ள சர்வகலாசாலைக் கட்டடங்களுக்குள் இருக்கும்போது நாம் இந்தியாவில் இருப்பது போன்ற உணர்ச்சி ஏற்படுவதில்லை. எங்கோ அமெரிக்காவிலோ, இங்கிலாந்திலோ இருப்பது போன்ற பிரமைதான் ஏற்படுகிறது. அந்த மாதிரியான சர்வகலாசாலைக் கட்டடங்களுடன் இலங்கை சர்வகலாசாலைக் கட்டடங்களையும் ஒப்பிட்டால் "ஆகா! இலங்கையில் கல்விப் பணிக்குத் தொண்டாற்றும் பெரியவர்கள், அதற்காக வேண்டிய நல்ல சூழ்நிலை ஏற்படுத்துவதற்காகக் கட்டடங்களை அமைத்திருக்கும் முறையை எண்ணிப் பாராட்டாமல் இருக்க முடியாது. அவர்கள் கல்விக்கும் கலைக்கும் எவ்வளவு முக்கியத்துவம் கொடுத்திருக்கிறார்கள், எவ்வாறு போற்றி யிருக்கிறார்கள் என்ற வியப்பு நிச்சயம் உண்டாகும்.

சர்வகலாசாலைக் கட்டடங்களுக்குள் பிரவேசித்ததும் அங்கிருந்த சில மாணவர்கள் முதலில் தங்கள் கல்லூரி மாணவர் விடுதியின் சமையல் அறைக்கு அழைத்துச் சென்றார்கள்.

"எல்லாவற்றையும் விட்டு விட்டு முதன் முதலில் சமையலறைக்கு அழைத்து வந்தீர்களே, ஏன்?" என்று கேட்டேன்.

"மற்ற இடங்கள் எல்லாம் இதர சர்வகலாசாலைகளில் உள்ள கட்டடங்களைப்போல்தான் இருக்கும். ஆனால் சமையல் விடுதியில் மட்டும் தனி வசதியுடன் கூடிய பல அபூர்வமான இயந்திரங்கள் இருக்கின்றன. அதை நீங்கள் பார்க்க வேண்டும்" என்றார்கள்.

ஆமாம்; அந்த மாணவர்கள் கூறியது உண்மைதான். சமையல் விடுதியில் கண்ட

காட்சிகள் எல்லாம் ஒரே ஆச்சரியமாக இருந்தன. பல நூறு மாணவர்களுக்குச் சமையல் நடக்கும் இடத்தில் பெரிய பெரிய அடுப்புகள் இல்லை. அதிகமான சமையற்காரர்கள் இல்லை. புகை சூழ்ந்த சுவர்கள் இல்லை. ஏழெட்டுச் சமையற்காரர்கள் நன்றாக உடை உடுத்திக் கொண்டிருந்தார்கள். பளபளவென்று சுத்தமாக இருந்தது சமையல் அறைச் சுவர்கள். பெரிய பெரிய எவர்சில்வர் பாத்திரங்கள் ஆங்காங்கு இருந்தன. அவ்வளவுதான்! இவற்றைப் பார்த்ததும் "இது என்ன சமையற்கூடமா? அல்லது இங்கிருக்கும் எவர்சில்வர் பாத்திரங்களை அலங்காரமாக வைத்திருக்கும் இடமா?" என்றுதான் எண்ணத் தோன்றியது. இருந்தாலும் அந்த உணர்ச்சியை வெளியில் காட்டிக் கொள்ளாமல் அங்கிருந்த ஒரு பெரிய எவர்சில்வர் பாத்திரத்தைக் காண்பித்து "இது என்ன?" என்று கேட்டேன்.

"இது சமையல் செய்யும் பாத்திரம்" என்று கூறி அந்தப் பாத்திரத்தைத் திறந்து காண்பித்து அதை எப்படி உபயோகிப்பது என்பதையும் விளக்கினார் அங்கிருந்த சமையல்காரர்.

அந்தத் தவலையில் ஆறு மரக்கால் அரிசியையும் அதற்கு வேண்டிய தண்ணீரையும் ஊற்றி விட்டு அருகில் இருந்த மின்சாரப் பித்தானை அமுக்கி விட்டுக் கடிகாரத்தைப் பார்த்துக் கொண்டிருந்தார். நாற்பது நிமிஷங்கள் ஆனவுடன் இன்னொரு பித்தானை அமுக்கினார். அந்தத் தவலை ஏதோ மந்திரத்தால் மாய வித்தை காட்டுவதுபோல் அப்படியே ஆகாயத்தில் கிளம்பி அருகில் இருக்கும் பெரிய எவர்சில்வர் தொட்டிக்குப் பக்கத்தில் சென்றது. பின்னர் அதன் மூடி திறந்தது. அடுத்த கணம் அந்தத் தவலையை யாரோ தூக்குவதுபோல் இருந்தது. ஆனால் யாரும் தூக்கவில்லை. தானாகவே கிளம்பி அந்தத் தொட்டிக்குள் சாதத்தைக் கொட்டி விட்டுத் திரும்பி விட்டது. இதுபோலவே இட்டிலிகள் செய்ய, இடியப்பம் செய்ய, தேங்காய் திருக, வெந்த உருளைக்கிழங்குகளின் தோலை உரிக்க எல்லாவற்றுக்கும் இயந்திரங்கள் இருக்கின்றன. அது வேலை செய்யும் போது பார்த்தால் மாயாபஜார் சினிமாவில் காரியங்கள் நடப்பது போன்ற விந்தைக் காட்சியாகத்தான் இருக்கிறது. பல நூறு மாணவர்களுக்குச் சமையல் செய்யும் இடத்தில் ஒரு தூசிகூட இல்லாமல் சுத்தமாகச்சமையல் நடைபெறும் இடத்தை இலங்கை சர்வகலாசாலையில்தான் பார்த்தேன்.

இந்தச் சர்வகலாசாலையில் உள்ள நாற்காலிகள், மேஜைகள் எல்லாமே கண்டியின் மர வேலைப்பாடுகளுடன் மிளிர்கின்றன. நாற்காலிகள் எல்லாம் சாதாரணமாக இருந்தாலும் சாய்ந்து கொள்ளும் இடத்துக்கு மேலும் கைப்பிடிகளிலும் இரண்டிரண்டு குமிழிகளைக் கடைந்து வைத்துக் கண்டியின் கலைப்பண்பைக் காப்பாற்றி யிருக்கிறார்கள். அது போலவேதான் ஒவ்வொரு பொருளிலும் எப்படியாவது தங்கள் நாகரிகம் மிளிரும் வகையில் ஏதாவது செய்திருக்கிறார்கள்.

பெண்களுக்கென்று தனியாகக் கட்டும் கலாசாலைக் கட்டடங்களைப் பார்க்கும்போது, "அடாடா! இந்தக் கலாசாலையில் படிப்பதற்காவது அடுத்த ஜன்மத்தில் பெண்ணாகப் பிறக்கலாமா" என்று தோன்றியது. அவ்வளவு அழகுடன் அந்தக் கட்டடத்தை அமைத்திருக்கிறார்கள். இவைகளை எல்லாம் பார்த்துக் கொண்டிருக்கும்போதே இன்னும் பார்க்க வேண்டிய இடங்கள் நிறைய இருப்பதாகவும் அங்கெல்லாம் அழைத்துப் போகப் போவதாகவும் மாணவர்கள் கூறினார்கள். ஆனாலும் அன்று மாலையில் இன்னொரு முக்கியமான கூட்டத்துக்குப் போகவேண்டி யிருந்ததால் அவர்களிடமிருந்து விடைபெற்றுக் கொள்ள வேண்டியதாகி விட்டது. விடைபெற்றுக் கொள்ளும்போது "இந்தச் சர்வகலாசாலைக் கட்டடத்துக்கு இவ்வளவு சிறந்த முறையில் பிளான் எழுதிக் கொடுத்த இன்ஜினியர் யார்?" என்று கேட்டேன்.

"லண்டன்மா நகருக்குப் பிளான் அமைத்துக் கொடுத்த சர் பாட்ரிக் அபர்கிராம்பி என்ற அதே மயன்தான்" என்றார்கள்.

"மயனா! அப்படி என்றால்?"

"வெகு விரைவில் அற்புதமான நகரங்களை நிர்மாணிப்பதில் புகழ் பெற்றவன் அல்லவா மயன். அவனைப் பற்றி நம்முடைய புராண இதிகாசங்களெல்லாம் கூறுகின்றனவே!" என்று மாணவர்களிடமிருந்து பதில் வந்தது.

"மயன் என்பது நல்லதோர் வார்த்தைதான். இனிமேல் இன்ஜினியர்களை 'மயன்' என்றே சொல்லுகிறேன்!" என்று கூறி அவர்களிடமிருந்து விடைபெற்றுக் கொண்டேன்.

"நாழியாகிவிட்டது. கூட்டத்துக்குப் போக வேண்டும். வேகமாகக் காரை ஓட்டு" என்று காரோட்டியை அவசரப் படுத்தினார் உடன் வந்த சென்னை நண்பர்.

"அப்படி என்ன முக்கியமான கூட்டம்?" என்று கேட்கிறீர்களா? இன்னும் சற்றுப் பொறுங்கள். அந்தக் கூட்டத்துக்கே சென்று கலந்து கொள்ளலாம். (தொடரும்)




"உன்னை அடித்தவனைப் பற்றி உனக்குத் தெரிந்ததையெல்லாம் சொல்ல முடியுமா?"
"அதைச் சொன்னதற்குத்தானே அவன் என்னை அடித்தான்!"



வெற்றிகரமான

3-வது வாரம்





ஜூபிடர்

# கற்புக்கரசி

சென்னை

சித்ரா..பிரபாத்..சரஸ்வதி..காமதேனு மற்றும் தென்னகமெங்கும்





டைரக்ஷன்.. A.S.A.சாமி

# மாதர்குல திலகங்கள்



"திக்கற்றவர்களுக்குத் தெய்வமே துணை!" என்று கூறக் கேட்டிருக்கிறோம். "அநாதைகளுக்கு 'அவனே' ஆதரவாளன்!" என்று பேசவும் கேட்டிருக்கிறோம். உண்மைதான், ஆனால் அதற்காக மக்கள் தங்கள் கடமையையும், பண்பாட்டையும் கடவுள் பொறுப்பின் பெயரால் கைவிட்டுவிடக் கூடாது. பண்பாடுள்ள மாவிட சமுதாயத்தில், "அநாதைகள்" என்று ஒரு சாராரை அலட்சியப்படுத்த முடியாது. துன்பத்தில் ஆழ்ந்தவர்களுடைய துயரத்தைப் போக்குவதற்காகவே நல்லோரையும் கடவுள் கூடவே படைத்திருக்கிறார். ஆமாம், இதில் சந்தேகமே இல்லை. உதாரணத்துக்கு இதோ, முன்னாள் சென்னை நீதிமன்ற நீதிபதி ஸர் வேங்கட சுப்பராவ் தம்பதிகளைச் சுட்டிக் காட்டலாம். ஸர் வேங்கட சுப்ப ராவ் அவர்களால் துவக்கி வைக்கப்பட்டு, அவரது துணைவியார் ஸ்ரீமதி ஆண்டாள் வேங்கட சுப்பராவ் அவர்களால் பராமரிக்கப்பட்டு வரும், சென்னை "சேவாசதனம்" ஸ்தாபனத்தைக் குறிப்பிடலாம்.

வாழ்க்கையில் புறக்கணிக்கப்பட்ட திக்கற்ற ஸ்திரீகளுக்குப் புகலிடமும், ஆதரவும் அளிப்பதையே குறிக்கோளாகக் கொண்டு, சுமார் முப்பது வருடங்களுக்கு முன் தோன்றியதே சேவாசதனம். இந்த மாதர் ஸ்தாபனம் முதலில் இந்திய அரசியல், கலாசாரப் பொது வாழ்வில் பிரபலமாக விளங்கிய டாக்டர் கஸின்ஸ் அம்மையாரால் சிறு அளவில் நடத்தி வரப்பட்டது. கஸின்ஸ் அம்மையார், இங்கிலாந்துக்குச் செல்ல வேண்டிய அவசியம் வந்தபோது, ஸ்தாபனத்தை ஸ்ரீ வேங்கடசுப்பராவ் தம்பதிகள் கையில் ஒப்புவித்துச் சென்றார்கள். அதை இந்தத் தம்பதிகள் ஏற்று அதற்குச் "சேவா சதனம்" என்று பெயரிட்டார்கள்.

ஸ்ரீமதி வேங்கட சுப்பராவ் அவர்கள் இயல்பாகவே இரக்க குணம் பெற்றவர்கள். ஏழெட்டுப் பேர்களோடு தோன்றிய இந்த ஸ்தாபனத்தின் எளிய நிலைமை குறித்து மிகவும் இரங்கினார்கள். தமது செல்வம், நேரம் இவற்றை ஏராளமாகச் செலவிட்டு, எளிய குழந்தை வடிவாக விளங்கிய ஸ்தாபனத்தை நன்கு வளர்ப்பதில் ஈடுபட்டார்கள். இப்போது சேவாசதனம் செழித்துத் தழைத்திருப்பதோடு கிளைகள் பலவும் விட்டிருக்கின்றன. இதனால், ஸ்தாபனத்தில் அநாதைகள், திக்கற்றவர்களின் எண்ணிக்கை மிக அதிகரித்து விட்டதோ என்று நினைக்க வேண்டாம். ஸ்தாபனத்தின் முக்கியமான குறிக்கோள் திக்கற்ற பெண்மணிகளுக்கும் ஸ்திரீகளுக்கும் உதவி அளிப்பதுதான். எனினும், சேவாசதனம் சிறந்த கல்வித் தொண்டும் புரிந்து வருகிறது. இதனால், செல்வந்தர் குடும்பத்தைச் சேர்ந்த பெண்கள் இங்குள்ள உயர்தரப் பள்ளியில், ஸ்ரீமதி வேங்கடசுப்ப ராவ் அவர்களுடைய நேர்மையான வழி காட்டுதலின் கீழ் கல்வி பயில்வதற்கு ஏராளமாகப் பல இடங்களிலிருந்தும் வந்தவண்ணம் இருக்கிறார்கள். கல்விச் சேவையோடு, சேவாசதனம் மற்றுமொரு முக்கிய சேவையும் செய்து வருகிறது. சென்னை நகரில் கல்லூரிப் படிப்புக்காக வெளியூர்களிலிருந்து வரும் பெண்களுக்கும் நகரில் உத்தியோகம் பார்த்து வரும் மாதர்களுக்கும் விடுதி (ஹாஸ்டல்) ஒன்றும் நடத்துகிறது.

சில வருஷங்களுக்கு முன் ராஜாஜி அவர்கள் இந்த ஸ்ரீமதி வேங்கட சுப்பராவ் அவர்களின் சேவா மனோபாவத்தைப் பற்றிக் குறிப்பிடும் போது, "நூற்றுக்கணக்கான ஏழை எளிய பெண்களையுடைய பெரிய சம்சாரி" என்று குறிப்பிட்டார்கள். உண்மையிலேயே பெரியதோர் சம்சாரியைப் போன்ற பொறுமையும், அன்பும் உருக்கொண்ட தோற்றத்திலேதான் ஸ்ரீமதி ஆண்டாள் வேங்கடசுப்ப ராவ் தோற்றமளிக்கிறார்கள்.

சேவாசதனத்தின் சரித்திரமும், ஸ்ரீமதி வேங்கடசுப்ப ராவ் அவர்களின் வாழ்க்கை வரலாறும் ஒன்றோடொன்று பின்னப்பட்டு விட்டன. ஆகையால் சேவாசதனத்தின் நற்பணிகளைப் பாராட்டி நாம் வாழ்த்துவோமானால், அதுவே ஸ்ரீமதி வேங்கடசுப்ப ராவ் அவர்களுக்கும் நமது வாழ்த்துதலைத் தெரிவித்தது போன்றதாகும்.




''கௌரி! நான் சொல்வதைக் கேள். இந்தத் தடவை என்னுடைய உறுதியிலிருந்து நான் பிறழ மாட்டேன். என்னைத் தடை செய்யாதே. அண்ணா சிறு வயதிலிருந்து எனக்காகப் பட்டிருக்கும் பாடு அளவிட முடியாதது. என்னுடைய நன்றிக் கடனைத் தீர்க்க இதைக் காட்டிலும் சிறந்த வழி வேறு கிடையாது. இன்று நான் இந்த ஊரில் நாலு பேர் மதிக்கும்படியான மனிதனாக உலவுவது அண்ணாவின் தயவினால்தான். எங்கோ ஏழைமையிலே உழன்று கொண்டிருந்த நீ இந்த வீட்டு மருமகளாகி முடிசூடா ராணியாக விளங்குவதும் அண்ணா, மன்னி இருவரின் தயவினால்தான் என்பதையும் மறந்து விடாதே. நான் ஸ்ரீதரனைத் தத்துக் கொடுப்பதாக மன்னிக்கு வாக்களித்து விட்டேன். இனி அந்தக் கடவுளே வந்தாலும் என் மனத்தை மாற்ற முடியாது. வீணாகத் தடைசெய்து எல்லோர் மனத்திலும் கசப்பை உண்டாக்கி, ரகளை செய்யாதே'' என்று ரங்கராஜன் எதிரில் நின்றுகொண் டிருந்த மனைவி கௌரியைப் பார்த்துப் பொரிந்து தள்ளினார்.

ஊஞ்சல் கம்பியைப் பிடித்த வண்ணம் நின்று கொண்டிருந்த கௌரி, ''ஆமாம்! உலகத்தில் தாய் தந்தையர் இறந்து விட்டால் தம்பி தங்கைகளை அண்ணாவாக இருப்பவர்கள் காப்பாற்றுவது சகஜம் தானே? உங்கள் அண்ணா என்ன உலகத்தில் இல்லாத அதிசயமாகச் சாதித்து விட்டார்? அப்படியே ஒரு பிள்ளையைக் கொடுப்பதாகவே வைத்துக்கொண்டாலும் யாராவது மூத்த பிள்ளையைக் கொடுப்பார்களா? இளையவனை முரளீதரனைக் கொடுத்தால் என்ன?'' என்றாள்.

ரங்கராஜன் அமர்ந்திருந்த ஊஞ்சலிலிருந்து குதித்து எழுந்தான். அவனது மனவேகத்தின் அளவைக் காட்டுவது போல ஊஞ்சல் 'க்ரீச்' என்று ஓலமிட்டுக் கொண்டு

அங்கு மிங்குமாகத் தாறுமாருக ஆடியது. ''என்ன சொன்னுய்? எனக்கு வேண்டாம் அழுகல் பூசணிக்காய் என்பதுபோல் ஒரு குருட்டுப் பிள்ளையையா என் அண்ணுவுக்குக் கொடுக்கச் சொல்கிருய்? உன்னுடைய அகங்காரத்தின் பயனுகத்தான் ஒரு குருட்டுப் பிள்ளையைப் பெற்றிருக்கிருயே. இன்னும் அவனை என் அண்ணுவுக்குக் கொடு என்று சொல்ல உனக்கு எவ்வளவு தைரியம் இருக்க வேண்டும்?'' என்று இரைந்தான். உணர்ச்சி வசத்தினுல் அவன் உதடுகள் படபடத்தன. ஏன், அவன் தேகம் முழுவதுமே ஆடிக் காற்றில் அகப்பட்ட தளிர்போல் நடுங்கியது.

அப்பொழுது எதிர்பாராத விதமாக அவர்கள் இருந்த அறையின் கதவு திறந்தது. அறை வாசற்படியில் சாந்தமே உருவமெடுத்து வந்தது போன்ற அமைதியான முகத் தோற்றத்துடன் அவன் அண்ணு நாகராஜன் நின்று கொண்டிருந்தார். 'அண்ணு' என்று கூவிக்கொண்டே அவர் பக்கம் பாய்ந்தான் ரங்கராஜன். அன்புடன் தம்பியை அணைத்துக் கொண்ட நாகராஜன், ''ராஜா! எல்லாவற்றையும் கேட்டுக் கொண்டுதானிருந்தேன். கௌரி சொல்வதிலும் ஒரு நியாயமிருக்கிறது. உலகத்து வழக்கப்படி மூத்த பிள்ளை பெற்றோர்களுக்கு உரியவன்தான். மேலும் இரு கண்களுமற்ற முரளி என் மகனுவதால் அவனது பிற்கால வாழ்க்கை அதிக சிரமமின்றிக் கழியும். ஜீவனத்துக்காக ஒருவர் கையை எதிர்பாராமல், ஒருவன் கீழ் கை கட்டிச் சேவகம் செய்யாமல், இருக்கும் ஆஸ்தியை வைத்துக் கொண்டு அவன் காலத்தைக் கழித்து விடலாம்'' என்று நிதானமாகக் கூறினுர்.

தமையனின் அணைப்பிலிருந்து விலகிய ரங்கராஜன், ''அண்ணு, அவ்வளவு கிராதகனுக என்னை நினைத்து விட்டீர்களா? எவ்வளவோ அருமையாக, பெற்ற தாயினும் பன்மடங்கு அன்புடன் என்னைப் பேணி ஆளாக்கிவிட்ட என் மன்னிக்கு ஒரு அந்தகனையா புதல்வனுக அளிப்பேன்? உங்கள் வயதுக் காலத்தில் உங்களைத் தாங்கக் கூடிய பிள்ளையை அளிப்பதற்குப் பதிலாக, உங்களுக்குக் கடைசிக் காலம் வரையில் ஒரு கால்கட்டாக விளங்கக்கூடிய ஒரு குருட்டுப் பிள்ளையை நான் கொடுக்கவே மாட்டேன், ஒருகாலும் மாட்டேன்!'' என்று கூறினுன்.

அச்சமயம் அவன் மன்னி வைதேகி ஐந்து வயதே நிரம்பிய முரளிதரனை இடுப்பில் எடுத்துக் கொண்டு அங்கே வந்தாள். உலகத்தில் தன்னுடைய அழகிய சிருஷ்டிகளுக்கெல்லாம் கூடவே ஏதாவதொரு குறையையும் வைப்பது ஈசுவரனுடைய லீலா விநோதங்களில் ஒன்று போலும்! அழகிய சரீரத்தையுடைய மயிலுக்குக் கட்டைக் குரலையும், அழகிய சாரீரத்தையுடைய குயிலுக்குக் கறுத்த உருவத்தையும் ஏன் அளித்திருக்கிருன்? பால் வடியும் முரளியின் களையான முகத்திலிருந்த அந்தச் சூன்யமான கண்களிலே குறுகுறுக்கும் இரு கரு விழிகள் மட்டும் இருந்



இருந்தால் சாட்சாத் அந்த யசோதையின் நந்தனனே வந்து விட்டான் என்று சொல்லும்படி யிருந்திருக்கும். பார்ப்பவரை வசீகரிக்க வேண்டிய அவன் முகம் பிறர் பச்சாத்தாபத்தைத் தூண்டி விடுவதா யிருந்தது.

வைதேகி கௌரியைப் பார்த்து, "கௌரி! நீ கொஞ்சமும் கவலைப்படாதே. முரளியை ஒரு குறைவுமில்லாமல் என் பிள்ளையைப் போலவே வளர்ப்பேன். கண்ணற்றவனுக்கு இரு கண்களாக நாங்கள் இருவரும் அவனைப் பாதுகாப்போம். பிற்காலத்தில் அவன் பிறருடைய உதவியை எதிர்பாராதபடி, தன் வாழ்வைத் தானே வகுத்துக் கொள்ளும்படி அவனை வளர்ப்பது எங்கள் பொறுப்பு" என்று கூறினாள். கடைசியில் ரங்கராஜன் முரளியை அண்ணாவுக்குச் சுவீகாரமாக அளித்து விட்டான். நாகராஜனும் வைதேகியும் முரளியை அழைத்துக் கொண்டு தங்கள் ஊருக்குச் சென்று விட்டனர்.

**நா**கராஜனும் ரங்கராஜனும் பணக்காரப் பெற்றோர்களுக்கு அருமைப் புதல்வர்களாகத்தான் பிறந்தார்கள். பிறந்தால் மட்டும் போதுமா? அதிர்ஷ்ட லக்ஷ்மியின் கடைக்கண் வீச்சு இருந்தால்தானே தொடர்ந்து பணக்காரர்களாகவே வளர முடியும்? சொத்துக்களையெல்லாம் இழந்து வறுமை நிலையை அடைந்ததோடல்லாமல் பெற்றோர்களையும் இழந்தார்கள். செல்லப் பிள்ளையாக வளர்ந்திருந்த நாகராஜனுக்கு வயது பதினைந்து ஆகியிருந்தபோதிலும் ஆறாவது வகுப்பைத்தான் எட்டிப் பிடித்திருந்தான். அத்துடன் ஆறு வயதுத் தம்பி ரங்கராஜனை வளர்க்கும் பொறுப்பும் அவனுக்கு ஏற்பட்டது. பட்டதாரிகளெல்லாம் பறக்கும் இந்த நாளில் அவனுக்கு எந்தவிதமான வேலையும் கிடைக்கவில்லை. எனவே தந்தையின் காலத்திலிருந்த போலிக் கௌரவத்தையெல்லாம் மூட்டை கட்டி வைத்து விட்டு, ஒரு வீட்டில் சமையல் வேலையில் அமர்ந்தான். அப்பொழுதுதான் அவனுக்குத் தான் படிக்காமல் தன் இளமைக் காலத்தை வீணாக்கியதன் வருத்தம் தெரிந்தது. தன்னைப் போல் தன் தம்பியும் வீணாகாமல் இருக்க வேண்டுமென்று மிகவும் சிரமப்பட்டுப் படிக்க வைத்தான். அத்துடன் தானும் ஒரு இரவுப் பள்ளியில் சேர்ந்து கல்வி கற்று வந்தான். தம்பி ரங்கராஜன் எஸ். எஸ். எல். சி. பாஸ் செய்யும் பொழுது நாகராஜனும் அதே எஸ். எஸ். எல். ஸி. பாஸ் செய்து விட்டான். தம்பியைக் கல்லூரியில் படிக்க வைப்பதற்கு ஒரு பிரமுகரை உதவிச் சம்பளத்துக்காக அணுகினான். அப் பிரமுகர் நாகராஜனையே கல்லூரியில் சேர்ந்தால் என்னவென்று கேட்டார். நாகராஜன் தனக்கு அதிக வயதாகி விட்டது என்றும், தன் மீதி நாட்களைச் சமையல் வேலையிலேயே கழித்து விடலாமென்றும் கூறி, இளைஞனை தன் தம்பிதான் கல்லூரியில் படிக்க வேண்டுமென்று உறுதியாகக் கூறி விட்டான். அவனது தியாக புத்தியைக் கண்டு மெச்சிய அந்தக் கனவான் தம் ஜவுளிக் கடையில் அவனுக்கு ஒரு கண்ணியமான வேலையளித்தார். அதில் வந்த சம்பளத்தைக் கொண்டு நாகராஜன் தம்பியைக் கல்லூரியில் படிக்க வைத்தான். நாளடைவில் நாகராஜனது நேர்மையையும் கண்ணியமான நடத்தையையும் கண்டு மகிழ்ந்த அவனது முதலாளி தமது ஜவுளிக் கடையையும் தமது ஒரே மகள் வைதேகியையும் அவனுக்கே சொந்தமாக்கி விட்டு இறந்தார்.

தம்பியின் கல்லூரிப் படிப்பு முடிந்ததும் அவனுக்கு நாகராஜன் மணம் முடித்து வைத்தார். விவாகமாகிப் பல வருடங்களாகியும் வைதேகிக்குப் புத்திரபாக்கியமே ஏற்படவில்லை. ஆனால் கௌரியோ வந்த சீக்கிரத்திலேயே ஸ்ரீதரனுக்குத் தாயாகி விட்டாள். வைதேகி தன் ஓரகத்தியின் குழந்தையைப் பொறாமையின்றி, யாதொரு வித்தியாசமுமின்றித் தன் சொந்தக் குழந்தையைப் போலவே அருமையுடன் வளர்த்தாள். கௌரி தன்னை வைதேகியை விட உயர்ந்தவளாகக் கருதிக் கொண்டு அவளை மிகவும் உதாசீனமாக நடத்தினாள். ஆனால் வைதேகி அதைப் பாராட்டாமல் பெருந்தன்மையுடன் நடந்து கொண்டாள். கௌரியின் அகம்பாவத்தைப் பொறுக்காத கடவுளே அவளுக்குத் தண்டனை கொடுத்தது போல் அடுத்ததாகப் பிறந்த முரளீதரன் இரு கண்களும் அற்ற அந்தகனாகப் பிறந்து விட்டான். கௌரி வைதேகியின் பொறாமையினால்தான் தனக்குக் குருட்டுக் குழந்தை பிறந்தது என்று குற்றம் சாட்டினாள். வைதேகி அதைப் பொருட் படுத்தாமல் குழந்தை முரளியைக் கண்ணும் கருத்துமாகப் பராமரித்தாள்.

இனி தனக்குப் புத்திரப்பேறு கிடையாது என்பதை உணர்ந்துகொண்ட வைதேகி முரளீதரனைச் சுவீகாரம் செய்து கொள்ள விரும்பினாள். அவளது விருப்பத்தையறிந்த ரங்கராஜன் அவளது விருப்பத்தைப் பூர்த்தி செய்து விட்டான்.

**நா**கராஜன் - வைதேகியின் பராமரிப்பில் முரளீதரன் கண்களற்ற குறை தெரியாமல் வளர்ந்தான். வீட்டிலேயே ஒரு ஆசிரியரை வைத்து அவனுக்குக் கல்வி கற்பித்தார்கள். அவனுக்கு இயற்கையாக இருந்த சங்கீத ஞானத்தைக் கண்ட நாகராஜன் ஒரு பிரபல வித்வானை அமர்த்தி அவனுக்குப் புல்லாங்குழலைக் கற்பிக்கவும் ஏற்பாடு செய்தார். முரளீதரன் புல்லாங்குழல் வாசிப்பில் இணையற்று விளங்கினான்.

காலசக்கரம் பதினைந்து முறை சுழன்றது. நாகராஜனது அதிர்ஷ்டச் சக்கரமோ தலைகீழாக ஒருமுறை சுழன்றது. எதிர்பாராத விதமாக நாகராஜனுக்குப் பெருத்த நஷ்டமேற்பட்டது. அதனால் மனமுடைந்து போன அவர் படுத்த படுக்கையானார். வைதேகி தன்னுடைய நகைகளையெல்லாம் விற்று வைத்தியம் செய்தும் அவர் குணம் ஏற்படாமல் இறந்து விட்டார். செய்தியறிந்த ரங்கராஜன் பறந்து வந்தான். அண்ணா ஆஸ்தியெல்லாம் இழந்து விட்டார் என்பதையறிந்ததும் வைதேகியைத் தன்னுடன் வந்து இருக்கும்படி எவ்வளவோ வேண்டினான். ஆனால் மானியான வைதேகி அதற்குச் சிறிதும் இணங்கவில்லை. கௌரி அப்பொழுதும் தன் சொல்லம்புகளை உபயோகிக்கத் தவறவில்லை.

## அட்மிஷன் காலம்!







"பிள்ளைக்குப் பெரிய ஆஸ்தி வைக்கப் போகிறார் அண்ணா என்று தத்துக் கொடுத்தீர்களே! கடைசியில் என் பிள்ளையைப் பிச்சையெடுக்கும் நிலைமையில் தானே வைத்திருக்கிறார்கள்?" என்று ஏசிக் காட்டினாள். இதைக் கேட்ட வைதேகியின் மனம் மேலும் புண்ணாகியது. கடைசியில் வைதேகியையும் முரளீதரனையும் விட்டு விட்டுத்தான் ரங்கராஜன் செல்ல வேண்டியிருந்தது.

அவர்கள் ஊருக்குப் போய்ப் பதினைந்து தினங்களுக்கெல்லாம் கௌரிக்கு ஒரு கடிதம் வந்தது. அதைப் பிரித்துப் பார்த்த கௌரி கல்லாய்ச் சமைந்து போனாள்.

"அன்புள்ள கௌரி,

எதிர்பாராத இக்கடிதம் உனக்கு மிகுந்த வியப்பை யளிக்கலாம். இதுவே நான் உனக்கு எழுதும் இறுதிக் கடிதமாக இருக்கும். எங்களுடைய திரண்ட ஆஸ்தியை நம்பித்தான் முரளியைத் தத்து எடுத்துக் கொண்டோம். அச்சமயத்தில் செல்வம் நிலையாதது என்பதை மறந்து விட்டோம். எதிர்பாராத விதமாகச் செல்வத்தையும் இழந்து என் பெரிய செல்வமான கணவனையும் இழந்து விட்டேன்.

அழியக் கூடிய செல்வத்தை நம்பி முரளியை நாங்கள் ஏற்றுக் கொண்டது தவறுதான். அதற்குப் பரிகாரமாக அழியாத அவனுக்குப் பயன் படுத்தக் கூடிய ஒரு ஆஸ்தியை அவனுக்குக் கொடுக்கத் தீர்மானித்துள்ளேன். இந்த ஊரில் எதிர்த்த வீட்டில் மேனாடு சென்று திரும்பிய ஒரு கண் டாக்டர் வந்திருக்கிறார். இறந்தவர்களின் கண்விழியை யெடுத்துப் பிறவி அந்தகர்களுக்குக் கூடப் பார்வை யளிக்கும் திறமை அவரிடம் இருக்கிறது. அவர் மூலமாக முரளிக்கு என் விழிகளை அளிக்கத் தீர்மானித்து விட்டேன். அதற்கு இந்த உபயோகமற்ற உடலை விட்டு என் உயிர்ப் பறவை வெளியேற வேண்டும்.

தற்கொலை செய்து கொள்வது மிகுந்த பாபமானது. கோழைத்தனமானது என்பதை நான் அறிவேன். இந்த உலகில் வாழத் தகுதியுள்ளவர்கள் தற்கொலை செய்து கொள்வது தான் கோழைத்தனமானது. இப்பொழுது நானோ ஜீவனத்துக்குப் பிறர் கையை எதிர் பார்க்கும் நிலையில் இருக்கிறேன். என்னுடன் கூடச் சேர்ந்து முரளியும் வறுமையில் உழல வேண்டியிருக்கும். என்னைப் போன்ற பாப ஜன்மங்கள் உலகத்தில் அதிக காலம் ஜீவித்திருப்பது வழக்கம், வருடங்கள் ஆக ஆக மூப்பின் பயனாக என் விழிகள் மிக்க பலவீனம் அடைந்துவிடும். பிறகு அவைகளால் முரளிக்கு யாதொரு பயனும் கிடைக்காது.

இந்த உலகத்தில் ஏதாவதொரு நல்ல பயனையோ, உயர்ந்த வஸ்துவையோ அடைய வேண்டுமென்றால் அதற்கு ஏதாவதொரு தியாகம் செய்துதான் ஆக வேண்டும். ஆழ் கடலின் அடியிலே சிப்பி படும் வேதனைதான் நல்முத்தாக நமக்குக் கிடைக்கிறது. பட்டுப் பூச்சியின் மரண வாதனையில்தான் விலை உயர்ந்த பட்டு கிடைக்கிறது. இன்று ஒரு மலர் உதிர்ந்து விழுந்து உரமாகித்தான் நாளை ஒரு புது மலர் மலர்கிறது. துன்பத்தின் எல்லைக் கோட்டில்தான் இன்பம் பிறக்கிறது. ஏன்? மனிதர்கள் இவ்வுலகில் பிறப்பதே வேதனையின் முடிவில்தானே!

ஆகையினால் என்னுடைய காரியத்தை நீங்கள் தவறாக நினைக்காதீர்கள். யாருக்கும் உபயோகமில்லாமல் பிறருக்குச் சுமையாக நான் இருப்பதைவிட என் முரளிக்கு என்னாலான உதவியைச் செய்தேன் என்ற திருப்தியுடன் போகிறேன். முரளியின் கண்களில் என்றும் நான் இருக்கிறேன். செத்தும் சாகாமல் இருப்பேன். ஆதலால் இக்கடிதம் கண்டவுடன் தாமதம் செய்யாமல் இருவரும் புறப்பட்டு வாருங்கள். நீங்கள் வருவதற்குள் என் வாழ்வு முடிந்திருக்கும். அந்த டாக்டரிடம் சொல்லி ஆபரேஷனுக்கு உடனே ஏற்பாடு செய்து என் கடைசி விருப்பத்தைப் பூர்த்தி செய்யுங்கள். —வைதேகி

இக்கடிதத்தைக் கண்ட ரங்கராஜனின் மனம் துடித்த துடிப்பை எப்படி வர்ணிக்க முடியும்? கடைசியில் வைதேகியின் விருப்பப் படிதான் நடந்தது என்று சொல்லவும் வேண்டுமா? இன்று முரளீதரன் சங்கீத வானிலே ஒரு சுடர் விடும் தாரகையாக மின்னுகிறான் என்றால் அதற்குக் காரணம் வைதேகி அவனுக்கு அளித்த ஆஸ்திதான் என்பதில் சந்தேகமில்லை.




நல்ல வெய்யில். தெரு வழியே நடந்து வந்தார் வள்ளுவர், ஆமாம், குறளாசிரியர்தான்.

வீட்டு வாசலில் அரிசி புடைத்துக் கொண்டிருந்த கிழவி, முறத்தின் ஓரத்தில் குவிந்திருந்த தவிட்டைத் தெருவிலே வெய்யிலில் கொட்டிவிட்டு, உள்ளே சென்றாள். தவிட்டிலிருந்து, வெளியிலே மெல்ல நெளிந்து வந்தது ஒரு புழு. வெள்ளை வெளேரென்றிருந்த அரிசிப் புழு.

தெருப்புழுதி அனலாய்க் காய்ந்து கொண்டிருந்தது. இதை அந்த அப்பாவிப் புழு கண்டதா என்ன? தெருவைத் தொட்டதும், வெய்யில் சுரீரென்று தைத்ததுந்தான், 'அடடா, ஆபத்து வந்து விட்டது' என்பது அதற்குத் தெரிந்தது.

வெய்யில் அதன் பாட்டில் காய்ந்தது. காய்வது அதன் இயல்பு. புழுவைப் பற்றி அது கவலைப்படவில்லை. புழு ஒன்று இருக்கிறது என்பது கூட அதற்குத் தெரியாது. எப்போதும் போல, வான முகட்டிலிருந்து, வெப்பத்தையும் ஒளியையும் வாரி இறைத்துக் கொண்டிருந்தது.

புழுவோ?-புழு துடித்தது. உடம்பைக் குறுக்கியது, நெளித்தது, வளைத்தது. என்ன செய்தாலும், சுற்றிச் சூழ்ந்த அனற் காட்டிலிருந்து விடுதலை இல்லை; தப்பி ஓடவும் முடியவில்லை; தரையிலிருந்து தன்னைத்தானே நிமிர்த்தி, நிழலை நோக்கி விரைவதற்கு அதற்கு ஆற்றல் இல்லை. ஏன்? அதன் உடல் எலும்பில்லாத உடல். சிறிது ஊர்ந்து பார்த்தது. அதற்குள் தெருப் புழுதியின் அனல்வாய் அதைக் கவ்வியது. இருந்த இடத்திலேயே, நகர முடியாமல் அந்தப் புழு துடித்தது.

இதைக் கண்டார் வள்ளுவர். குனிந்து, புழுவைப் பரிவோடு எடுத்து, நிழலில் விட்டார். நின்றார், நீண்ட பெருமூச்சு விட்டார், எண்ணினார்:

'எத்தனை எத்தனை விசித்திரமான உயிர் வகைகள் இந்த உலகில் வாழ்கின்றன! எலும்பில்லாத இந்தப் புழுவிலிருந்து, நுட்பமான உடல் அமைப்பும், அறிவும் பெற்ற மனிதன் வரையில், எத்தனை கோடி உயிர்கள் இந்த மண்ணிலே உள்ளன! ஒவ்வொரு உயிரும் ஒரு வரம்புக்குள்ளே வாழ்கிறது; அந்த வரம்புக்குள்ளும் நிலையாக வாழ்வதற்கு அதனிடம் இயல்பாக அமைந்து கிடக்கும் சக்திகளை அது பாதுகாத்து வளர்க்க வேண்டி இருக்கிறது. மீனுக்குத் தண்ணீர் வரம்பு; அதைக் கடந்தால், மீன் செத்து விடுகிறது; அதற்குள்ளே வளமாக வாழ்வதற்கு, உரமான செதில்களும், வாலும், விரைவாக நீந்தும் வலிமையும் மீனுக்கு இன்றியமையாதவை. இப்படித்தான் ஒவ்வொரு உயிருக்கும். எலும்பில்லாத இந்த அரிசிப் புழுவுக்கு, அரிசியும், தவிடுமே உலகம். அதைத் தாண்டி, வெய்யிலில் தலை நீட்டியதென்றால், துடித்து மடிகிறது.

மற்றைய உயிர்களைப் போலவே, மனிதனும் வரம்புடைய ஓர் உலகில் தான் வாழ்கிறான். ஆனால் அவன் வாழ்க்கை, உடல் அளவிலே நடைபெறுகின்ற ஜட வாழ்க்கை மட்டும் இல்லை. அவனுக்கு உடல் உண்டு; ஆகவே, அந்த மட்டில், பூத பௌதிக வரம்புகளுக்கு அவன் கட்டுப் பட வேண்டி இருக்கிறது. சமுதாயத்தில்

ஒருவனுக அவன் வாழ்கிறான். அந்த அளவில், சமுதாயச் சட்ட திட்டங்கள்; மரபு, கோட்பாடு, கலாசாரம், இலட்சியங்கள், இவை யாவும் அவன் சமுதாய வாழ்வுக்கு எல்லைகளாக அமைகின்றன. மனிதனுக்குத் தன்னைப் பற்றி எண்ணுகின்ற சக்தியும், பிறவற்றைப் பற்றி ஆராய்கின்ற பகுத்தறிவும் இயற்கையாக உள்ளன. அதோடு, அவன் உள்ளத்தில் ஆயிரம் ஆயிரம் விருப்பு, வெறுப்பு, ஆசாபாசங்கள், கனவுகள், இலட்சியங்கள், உணர்ச்சிகள் முளைக்கின்றன. இவற்றின் தொகுதியைத்தான் அவன் வாழ்க்கை என்று எண்ண வேண்டியிருக்கிறது.

ஆனால், ஒவ்வொரு மனிதனுக்கும் இத்தகைய தனி உலகம் ஒன்று இருப்பதால், அத்தனை மனிதர்களுடைய உள்ளமும் ஒன்றோடொன்று மோதி அழிந்து போகலாம். இது நடந்தால், சமுதாய வாழ்வே இல்லை, மனித வாழ்வும் இல்லை. மனிதன் விலங்கின் நிலைக்கு இறங்கி, உடல் அளவில் மட்டும் வாழத் தலைப்பட்டு விடுவான். தருமம், அறம் என்றெல்லாம் பேசுகிறோமே, அந்த வரம்புக்குள்ளே மனிதன் வாழ்கின்ற பொழுதுதான், மனித வாழ்வு மனித வாழ்வாக நிலைத்து நிற்க முடியும். தருமம் என்பதுதான் என்ன? பிற உயிர்களுக்குத் தீங்கு செய்யாமல் இருப்பது, நன்மையே செய்வது, இதுதானே? தருமத்தின் வழியில் ஒவ்வொரு மனிதனும் போனால், மனிதர்களுக்குள் வேற்றுமை இராது, முரண் இராது, பூசல் இராது, போர் இராது. போக முடியுமா?

ஏன் முடியாது? மனிதனுக்கு இயல்பாகவே அன்பு என்ற பண்பு இருக்கிறது. அதை வளர்த்தால், அதை எல்லா உயிர்களிடமும் படரும்படி அமைத்தால், மனிதன் மற்றைய உயிர்களுக்குத் தீங்கு செய்யவே மாட்டான், தீங்கு இழைக்கும் நாட்டம்கூட அவனுக்கு வராது. நம்முடைய அன்புக்குப் பாத்திரமானவர்க்கு நாம் எப்படித் தீமை இயற்ற முடியும்? அதற்கு மாறாக நன்மையே செய்ய முற்படுவோம். அதற்காக வேண்டுமானால் நம்மையே வேண்டுமானாலும் தியாகம் செய்வோம்.

ஆகவே தருமத்துக்குக் கட்டுப்பட்டு, மனிதனாக வாழ வேண்டுமானால், அன்பை வளர்ப்பதே வழி. மனித உயிர் மனித உயிராக நிலைபெற்று இருக்க வேண்டுமானால், அன்பு ஒன்றேசாதனம்:

**அன்பின் வழியது உயிர் நிலை.**

இந்த அன்பு இல்லை என்றால், மனிதன் தன் உயர்வை இழந்து, ஜடப் பொருளின் நிலைக்கு இழிந்து விடுகிறான்:



ரசிகமணி டி. கே. சி. நினைவுக் கழகத்தின் இரண்டாவது ஆண்டு விழா திருக்குற்றாலத்தில் சென்ற 9—6—57 அன்று மாலை வெகு சிறப்பாக நடைபெற்றது. திருவாளர் எஸ். மகராஜன் அவர்கள் தலைமை வகித்தார். இவ்விழாவில் செங்கோல் ஆதீனத் தலைவர், மந்திரி மாணிக்கவேலர், திரு எஸ். ஒய். கிருஷ்ணசாமி, நெல்லை ஜில்லா போர்டு தலைவர் ராமசுப்பு ரெட்டியார், திரு கே. எஸ். ராமச்சந்திரன், வித்வான் ல. சண்முகசுந்தரம் முதலியவர்கள் பேசினார்கள். ராஜாஜி அவர்கள் '' ஆண்டு விழாவின் போது என் உள்ளம் அங்கே உங்கள் மத்தியில் பழைய நினைவு அலைகளில் மோதப் பட்டு, சென்னைக் கடலில் கட்டுமரம் போல் மிதந்து நிற்கிறது '' என்று ஆசிச் செய்தி அனுப்பியிருந்தார். இவ் விழாவில் பங்கு எடுத்துக் கொண்ட மந்திரி மாணிக்கவேலரையும் மற்றப் பேச்சாளர் களையும் மேலே படத்தில் காணலாம்.

---

**அன்பின் வழியது உயிர் நிலை : அஃதிலார்க்கு என்பு தோல் போர்த்த உடம்பு.**

அன்பில்லாமல், ஜடங்களாய், என்பு தோல் போர்த்த உடம்புகளாய், சில மனிதர்கள் இல்லையா ? இருக்கிறார்கள். அவர்களை எண்ணும் போது தான் 'ஐயோ ! அழிந்துபோகிறார்களே !' என்று மனம் இடிந்து போகிறது. எவ்வளவு சுலபமான வழி அன்பு வழி ! எவ்வளவு இனிமையான வழி ! இதைக் கைவிட்ட வர்கள் அறத்தோடு ஒட்டி நிற்க முடியாமல் அதன் ஆட்சியைத் தாங்க முடியாமல் தவிக்கிறார்கள். அறம் இவர் களைக் காய்கிறது. சற்று முன், அந்தப் புழுவை வெயில் காயவில்லையா, அது போல. அது எலும்பில்லாத காரணத் தால் வெயிலின் கொடுமைக்கு ஆளா யிற்று. இவர்களோ, அன்பில்லாத காரணத்தால் அறத்தின் கொடுமைக்கு ஆளாகிறார்கள். வெய்யிலைப் போலத் தான் அறமும். எலும்பில்லாத புழுவுக்கு வெயில் கொடுமையாக இருப்பது போல அன்பில்லாத மனிதர்களுக்கு அறம் கொடுமையாக, கூற்றுகக் கூட, அமைகிறது.

இப்படியெல்லாம் எண்ணிய வள்ளு வர் முகத்தில் ஒரு மலர்ச்சி. இந்தக் கருத்தை ஒரு குறளாக்கலாமே என்ற எண்ணத்தில் விளைந்தது. உடனே குறள் வந்தது :

**என்புஇல் அதனை வெயில் போலக் காயுமே அன்பு இல் அதனை அறம்.**

[என்பு - எலும்பு. இல் - இல்லாத. அறம் - தருமம்.]

குறளைச் சொல்லி வரும்போதே, வள்ளுவர் முகத்திலே ஒரு இரக்கம், நீண்ட துயரத்தின் சாயல். அந்தத் துய ரத்தின் காரணம் வேறொன்றுமில்லை, அன்பில்லாமல், மக்கள் வீணே அழி கிறார்களே என்ற கவலைதான். அது

**வெயில் போலக் காயுமே**

என்ற வள்ளுவர் பேச்சிலும் இடம் பெறுகிறது. 'காயும்' என்று சொன்னால் போதும், அவர் கூற வந்த உண்மை அவ்வளவும் வடிவாகி விடும். ஆனால் அலகிலாத அன்பு நிறைந்த அவர் உள்ளம், 'காயுமே !' என்று பேசி வருந்துகிறது. 'ஐயோ, எரித்து விடுமே' என்று. அன்பில்லாதவர் நிலையைக் கண்டும் இரங்கும் வள்ளுவரின் கனிவைத் தான் எப்படி அளவிடுவது ! அவர் சிந்தையின் ஆழத்தைப் போலவே, அவ ருடைய அன்பும் அளவிறந்தது என்று எண்ணி வணங்குவதைத் தவிர, வேறு எப்படி அவரை நாம் பாராட்ட முடியும் !

# கிறிஸ்துவத் துறவி லாரென்ஸ்

ராஜாஜி

8

**வா**ழ்க்கைக்கு வேண்டியதைச் செய்வதற்கு ஒரு காலமும் பிரார்த்தனைக்கென்று தனியாக ஒரு காலமுமாகப் பிரித்து அமைத்துக் கொள்வது அறியாமை. எல்லாக்காலத்திலுமே ஆண்டவனுடைய தோழமையை நாடவேண்டும். தொழுங் காலத்திலும் சாதாரணத் தொழிலில் செலவழிக்கும் காலத்திலும் இரண்டிலுமே அவன்பால் உள்ளத்தைச் செலுத்த வேண்டும்.

அருகிலிருக்கும் பகவானை, இருக்கிறான் என்று கண்டு அந்த உணர்ச்சியை மனத்தில் கரையாமல் நிறுத்திக் கொண்டு எல்லாக் காரியங்களையும் செய்வதே என்னுடைய பிரார்த்தனை முறை. அந்த முயற்சியில் வெற்றியடைந்து பகவானுடைய சாந்நித்தியத்தை அடையும்போது, வேறு ஏதும் என் உணர்வில் இடம் பெறாமல் அன்பு ஒன்றே நிற்கிறது. மற்றவை யனைத்தும் கரைந்து போய் விடுகிறது.

சின்னஞ் சிறு பணிகளை யெல்லாம், பகவத் பிரீதிக்கென்று செய்ய வேண்டும். அதில் தெவிட்டு அடையலாகாது. ஆண்டவன் வேண்டுவதும் மதிப்பதும் அவன்பால் செலுத்தும் அன்பைத்தான். எந்தப் பணி என்பது முக்கியமல்ல. அவன்மேல் எவ்வளவு பிரீதி வைத்துச் செய்யப்பட்டது என்பதைத்தான் அவன் பார்ப்பது. ஆஸ்திகனுக்கு உரிய குணங்கள் மூன்று. ஒன்று, உறுதியான நம்பிக்கை; இரண்டாவது, பகவானுடைய கருணையை ஆசையோடு எதிர்பார்ப்பது; மூன்றாவது, பகவானையே காதலித்துக் கவலையற்றிருப்பது.

இவற்றில் முதல் குணம் ஒன்றிருந்தாலே எல்லாம் அடையலாம். இரண்டாவதும் இருந்தால் எளிதில் சித்தியடையலாம். மூன்று குணங்களும் இருந்து, அவற்றை இழக்காமல் காத்து வந்து வாழ்க்கை நடத்தினோமானால் சொல்ல வேண்டியதே இல்லை, நிச்சயமாகச் சித்தியடைவோம்.

பக்தி செய்து உய்யப் பெறவேண்டும் என்று தீர்மானித்தோமானால் முதலில் நம்மை நாம் நன்றாகச் சோதித்துப் பார்த்துக் கொள்ள வேண்டும். அப்போது நாம் காண்போம்; நாம் எவ்வளவு அற்பர்கள், எவ்வளவு நீசர்கள் என்று நன்றாகக் காண்போம். பகவானை நெருங்கும் தகுதி நமக்குக் கொஞ்சமும் இல்லை என்பதைக் காண்போம். ஆண்டவன் நம்முடைய ஆணவத்தைக் கரைத்து நம்முடைய சித்தமலங்களை அறுவித்து நம்மை ஓரளவு தகுதிபெறச் செய்வதற்காக நமக்குச் சில துன்பங்களைத் தந்தும் சோதனைகளுக்கு உள்ளாக்கியும் வருவதன் காரணத்தை அப்போது நாம் காண்போம். துன்பங்கள் பலவற்றை உள்ளத்திலும் புறத்திலும் அனுபவித்த பின்னரே நாம் புனித மடைவோம். ஆனபடியால்தான் பல கஷ்டங்களும் மக்களின் விரோதங்களும் தடைகளும் எதிர்ப்புகளும் பக்தர்கள் அடைகிறார்கள். அதற்காகக் கவலைப்படலாகாது. அவையெல்லாம் ஆண்டவன் நமக்குச் செய்யும் உதவி என்று உணர்ந்து மகிழ்ச்சி அடைய வேண்டும். அவனுடைய திருவுள்ளம் என்று துன்பத்தை வரவேற்றுப் பொறுத்துக் கொள்ள வேண்டும்.




## 21. சிஷ்யனின் கேள்வி

**ஆ**னி மாதம் முடிந்து ஆடி தொடங்கும் சமயம். ஆத்ரேயன் என்ற மஹரிஷி தமது சிஷ்ய கணங்கள் சூழ, கங்கா தீரத்தையடுத்த வனத்தில் சஞ்சரித்துக் கொண்டிருந்தார். சுற்றிச் சுற்றி நடந்து கொண்டிருந்தார்.

இயற்கையின் சூழ்நிலையில் தன்னிச்சையாய் வளரும் ஒஷதிகளைத் தம் சிஷ்யர்களுக்குக் காண்பித்துக் கொடுக்க வேணும். எவ்வித நீர் நில வளங்களில் வளரும் ஒஷதிகளைத் தேர்ந்தெடுக்க வேணுமென்றும் அவர்களுக்குப் புகட்டிட வேணும். இதற்காகத்தான் இவ்வுல்லாசப் பிரயாணம். கால் நடையாகத்தான் சென்றாக வேணும். ஆங்காங்கு கிடைக்கும் ஒஷதிகளைப் பற்றியும், அவற்றின் தராதரங்களைப் பற்றியும் விளக்கம் சொல்லிக் கொண்டே சென்ற ஆத்ரேயன், சிஷ்யருள் ஒருவனான அக்னிவேசனை அழைத்துச் சொன்னார்:

''ஸௌம்ய! நக்ஷத்திர கிருகங்களின் கணம், சந்திரன், சூர்யன், காற்று, உஷ்ணம், வானில் திக்குகளின்தோற்றம் இவற்றில் சில மாறுபாடுகள் தென்படத் தொடங்கியுள்ளதைக் கவனித்தாயா? பருவம் மாறப் போவதற்கான அறிகுறிகள் தான் இவை. பருவம் விரைவிலேயே மாறும். அதையொட்டி நீர், நிலங்களின் தன்மையிலும் மாற்றம் ஏற்படும். அதையுமொட்டி ஒஷதிகளில் இந்நாள் வரையில் இருந்த இரஸ விபாக வீர்ய குணங்கள் குறைந்தோ மாறியோ போய் விடும். அவ்வித மாற்றங்கள் ஒஷதிகளுக்கு வரும் முன்னதாக, இப்பொழுதே அவைகளை நாம் கிரஹிக்க வேணும், அப்பா! ஐயந்திரிபுகளின்றி ஒவ்வொன்றையும் தெரிந்தெடுக்க வேணும். அதிலும் வேர், இலை, பூ, காய், வித்து அல்லது ஸமூலம் என்று உபயோகப்படும் பாகத்தைப் பிரித்து எடுத்துத் தக்க முறையில் பதனக்கிச் சேகரித்து வைத்திருப்போமாயின், ஜனங்களில் பெருவாரியானவரை ஒருங்கே பிடிக்கும் தொத்து வியாதிகளைச் [ஜனபதோத்வம்ஸ ரோகங்களைச்] சிகிச்சிப்பதிலும் சிரமம் குறையும், அப்பா. ஆகவே நாம் இப்பணியில் உடனே இறங்கிவிடுவோம். இவ்வாறு குருநாதர் சொல்லக் கேட்ட சிஷ்யன் அக்னிவேசன் குருநாதரை ஒரு கேள்வி கேட்டான்.

''பகவன்! ஆக்ஞை, அவ்வாறே செய்யலாம். ஆனல் இந்த 'ஜனபதோத்வம்ஸரோக' விஷயத்தில் ஒரு சந்தேகம். ஜன(பத) சமூகத்தில், வெவ்வேறு வகைப்பட்ட சரீரக் கூறுள்ளவர், வெவ்வேறு வகைப்பட்ட ஆகாரங்களை ஏற்பவர், நானாதரப்பட்ட சரீர பலமும் ஸஹன சக்தியும் உள்ளவர், நானாவித மான பழக்க வழக்கங்களையுள்ளவர், சிறியோர் பெரியோர் என்றுள்ள சகலரையும் ஒரே வியாதி ஒரே காலத்தில் பிடிப்பது எதனல்? இது ஆச்சரியமல்லவா? காரண கார்ய பாவமல்லவா இதனல் அற்றுப் போகிறது?'' என்று கேட்டான்.

இக்கேள்வியைக்கேட்டு, குருநாதனை புனர்வஸு ஆத்ரேயன் மிகவும் சந்தோஷப்பட்டார். புத்திசாலித்தனமான ஒரு கேள்வியைச் சிஷ்யன் கேட்பானனால் அதனல் குருவுக்கு ஏற்படும் ஆனந்தம் என்ன? எவ்வளவு? என்பதை உபாத்தியாயர் தொழிலில் இருப்பவர்தான் அறிய முடியும், அனுபவிக்க முடியும். சிஷ்யன் தம்மைவிடக் கெட்டிக்காரன் என்று உலகம் புகழ்வதைக் கேட்டாலோ, இந்தக் குருவுக்கு ஏற்படுவது பரமானந்தம். இவ்வித ஆனந்தமும் பரமானந்தமுந்தான் ஒரு குருவுக்குக் கிடைக்கும் விலையற்ற ஊதியம், பரிசுங்கூட. இவ்வித பரிசு அடிக்கடியும் கிடைக்கக் கூடியதா? ''வால்மாத்திரம் நுழையவில்லை, ஐயா!'' என்ற சிஷ்யனின் கதையையும் கேட்டிருக்கிறோம். இதனல், நகைச்சுவை மிக்கதேனும், குருநாதன் அடையும் துயரம் சொல்லி முடியாதது. அக்னிவேசன் கேட்ட இக்கேள்வியால் ஆத்ரேயன் அளவற்ற ஆனந்தத்தைத் தான் அடைந்தார். தம் சந்தோஷத்தை ஒரு புன்முறுவலில் வெளியிட்ட வண்ணம்

**அருள் வாக்கு**

இந்த லோகத்தில் சந்தோஷம் இருக்கிறது. துக்கமும் இந்த லோகத்தில் இருக்கிறது. நாம் பிரயத்தனம் பண்ணினால் சுகம் அதிகமாக இருக்கிறது. சுக துக்கங்கள் ஒவ்வொருவருக்கும் ஏற்றக் குறைவாக இருக்கின்றன. சிலருக்குச் சுகம் அதிகமாக இருக்கிறது. சிலருக்குக் குறைவாக இருக்கிறது. மனத்தைக் கட்டுப்படுத்தித் துக்கப் படாதவர்களும் இருக்கிறார்கள். எப்பொழுதும் துக்கப்படுகிறவர்களும் இருக்கிறார்கள்.

**ஸ்ரீ சங்கராச்சாரியார், காமகோடி பீடம்.**

சிஷ்யனுடைய கேள்விக்குப் பதில் சொல்லலானார் குருநாதர்.

''அக்னிவேச! உண்மைதான். சரீரக்கூறு முதலான நீ தெரிவித்த வகைகளில் வெவ்வேறு தரப்பட்டவருக்கெல்லாம் ஒரே காலத்தில் பெருவாரியாக ஒரே நோய் வருவது ஆச்சரியந்தான். ஒரு குறிப்பிட்ட [பிரகிருதி] சரீரக்கூறு உள்ளவருக்கெல்லாம் ஒரு குறிப்பிட்ட காலத்தில் ஒரு குறிப்பிட்ட தொத்து வியாதி உண்டாயிற்று என்பதில் நாம் ஒப்புக்கொள்ளக் கூடிய வகையில் காரண காரியங்களிடையில் சம்பந்தமிருக்கிறது எனலாம். அவ்வாறே குறிப்பிட்ட ஆகாரத்தை உண்டவருக்கெல்லாம் அந்த ஒரே நோய் உண்டாயிற்று என்பதும் பொருந்தும். அவ்விதமே வயது ஸத்வம் ஸாத்மியம் யாவற்றிலும். ஆனால் இவ்வகையிலெல்லாம் வேறுபட்டிருக்கும் ஜன (பத) சமூகம் முழுவதுமே இந்த ஒரே வியாதியால் ஒரே காலத்தில் அவதிப் படுவது ஆச்சரியந்தான். அதன் காரணத்தை அறிந்திடலும் அவசியந்தான்:

''ஸௌம்ய! அக்னிவேச! நீ சொன்ன பிரகிருதி அல்லது சரீரக்கூறு-முதலான பாவங்கள் ஒவ்வொருவருக்கும் வெவ்வேறு விதத்திலுள்ளது. இவற்றையெல்லாம் யாவருக்கும் பொதுவானவை என்று சொல்ல முடியாதென்பது உண்மைதான். ஆனால் நீ சொன்ன இந்த பிரகிருதி, ஆகாரம், தேக பல, ஸஹன பல, ஸாத்மிய, ஸத்வ, வயது என்னும் பாவங்களைத் தவிர வேறு சில பாவங்களும் உண்டு. இவை எல்லோருக்கும் பொதுவானவை. ஜன (பத) ஸமூஹம் முழுவதும் ஆபால கோபாலம் இந்த பாவங்களின் சக்திக் குட்பட்டுத்தான் வாழ முடியும். தப்பவே முடியாது. இவ்வாறு ஜனபதம் முழுவதையுமே நன்னிலையிலோ நலிவுற்ற நிலையிலோ உட்படுத்தும் இந்த பாவங்களின் நன்னிலை கெடுவதால் உலக மக்கள் எல்லோருமே வியாதியினால் பீடிக்கப்பட நேரிடும். இவ்விதமான, யாவருக்கும் பொதுவான பாவங்கள் நான்கு. இவை நன்னிலையிலுள்ளபோது இவை மனித சமூகத்துக்கு ஆரோக்யகரங்களாய் இருப்பவை. இவற்றின் நன்னிலை கெட நேரிட்டாலோ, இவை ஜன சமூகம் யாவற்றுக்குமே அனாரோக்கியகரமானவையாகும்.

''இந்த பாவங்கள் இருப்பது நாலுதான். இவற்றுள் ஏதேனும் ஒன்றோ மற்றொன்றோ அல்லது ஒன்றுக்கு அதிகமானவையோ அல்லது நான்குமேயோ அனாரோக்கியகரம் என்ற கேடுற்ற நிலையை யடைய நேரிடின், நான் சொன்னபடி, உலக மக்கள் யாவருமே, ஒரே காலத்தில் ஒரே வியாதியினால் பீடிக்கப்படுவர். இதிலிருந்து நீ சொன்ன பிரகிருதி முதலான பாவங்களின் மாறுதல் காரணத்தால் யாரும் தப்பவே முடியாது'' என்றார்.

''சுவாமி! அப்படி உலக மக்கள் எல்லோரிடமும் தமது சக்தியைச் செலுத்தவல்ல அந்த நான்கு பாவங்கள் யாவை?'' என்று கேட்டான் சிஷ்யன்.

''மகனே! அவை, வாயு, உதகம் (ஜலம்), தேசம், காலம் என்பவையாகும்'' என்று சொல்லி அனாரோக்யகரமான வாயு (காற்று) எப்படி இருக்கும், அனாரோக்கியகரமான உதகம் தேசம், காலம் என்பவை எப்படி எப்படி இருக்கும்: அவை அனாரோக்கியகர நிலையில் இருக்கின்றன என்று நாம் எப்படி அறிந்து கொள்ளலாம் என்னும் விஷயங்களை விளக்கினார் குருநாதர்.

இதைக் கேட்ட சிஷ்யன் அக்னிவேசன் குருநாதனைப் பணிந்தெழுந்தான். பிறகு, ''சுவாமி! உலகத்து வாழ் உயிர்கள்யாவும் இந்நான்கு பாவங்களின் சக்திக்குட்படாமல் இருக்க முடியாதுதான். ஆனால் இந்த பாவங்கள் தமது நன்னிலை கெட்டு அனாரோக்கியகரமான நிலையைப் பெறுவதற்கு என்ன காரணம்? இதை நாம் தடுக்க முடியுமா?'' என்று கேட்டான் சிஷ்யன்.

இதைக் கேட்ட குருநாதரின் முக பாவம் மாறிற்று. அதுவரையிலிருந்த நகை முகத்தில் சில சுருக்கங்கள் ஏற்பட்டன. அக்னிவேசனை ஒரு முறை ஏற இறங்கப் பார்த்தார். பிறகு குருநாதர் ஒருமுறை கனைத்து விட்டுப் பதில் சொல்லத் தொடங்கினார்.

---

*சரகஸம்ஹிதை, விமான ஸ்தானம் மூன்றாம் அத்தியாயத்தைத் தழுவி எழுதப்பட்டது.*

# என் அன்பிற்கு எல்லை இல்லை

நான் சந்தோஷமாயும் திருப்தியாயுமிருக்கிறேன். என் அம்மாவிடம் நான் கொண்டுள்ள அன்புக்கு எல்லை கிடையாது. வாஸ்தவமாகவே அவள் என் பரிபூரண அன்பிற்கு அருகதை வாய்ந்தவள். அவள் புத்திசாலி எனக்கு க்ளாக்ஸோ கொடுக்கிறாள். அது குழந்தைகளின் எலும்புகளையும், பற்களையும் உறுதியாக வளர்க்க விடமின்-டியும் இரத்தம் வளம்பெற இரும்பு சத்தும் சேர்ந்துள்ள புஷ்டி அளிக்கும் ஒரு பால் உணவாகும். ஆகவே நான் நிம்மதியாய் தூங்குவதில் ஆச்சரியமென்ன... குறையாத எடை வளர்ச்சியும்...நாள் முழுவதும் எனக்கு ஒரே சந்தோஷம்.

**நான் சிபாரிசு செய்வது க்ளாக்ஸோ**

**Glaxo**

குழந்தைகளின் பரிசுத்தமான பால் உணவு




க்ளாக்ஸோ லாபரட்டரீஸ் (பிரைவேட்) லிட்., பம்பாய் · கல்கத்தா · மதராஸ் · புது டில்லி

# மாலவல்லியின் தியாகம்

அத்தியாயம் 27

## 'இந்தப் புத்தி எதற்கு?'

சந்தகர் அமர்ந்திருந்த குதிரையும் பிரதிவீபதி ஏறியிருந்த குதிரையும் ஓர் இரவு ஏற்பட்ட பழக்கத்தினால் மிகவும் ஒற்றுமை அடைந்து விட்டதுபோல் ஒன்றோடொன்று போட்டி போடாமல் ஒன்றுக்கொன்று விட்டுக் கொடுக்கும் பாவனையாக முன்னும் பின்னுமாக ஓடிக் கொண்டிருந்தன. இருப்பான்மலையை விட்டுப் புறப்பட்டதிலிருந்து சந்தகரும் பிரதிவீபதியும் ஒருவரோடு ஒருவர் பேசாமலேயே வந்து கொண்டிருந்தனர். அவர்கள் இருவருமே ஏதோ ஆழ்ந்த யோசனையில் இருப்பவர்போல் தோன்றினர். எவ்வளவு நேரம்தான் அவர்கள் பேசாமலேயே வரமுடியும்? கரடுமுரடான மலைப் பிரதேசங்களைத் தாண்டி இரண்டு புறமும் மரங்கள் அடர்ந்த பாதைக்கு அவர்கள் குதிரைகள் வந்து சேர்ந்தது, காஞ்சி நகருக்குச் சமீபமாக வந்து விட்டதைத்தான் குறிப்பிட்டது.

இவ்வளவு நேரம் குதிரையில் வந்த படியேயோசனையில் ஆழ்ந்திருந்தபிரதிவீபதி அப்பொழுதுதான் ஏதோ யோசித்து முடிவு செய்தவன்போல், ''நண்பரே! வரும்போது நாம் இருப்பான்மலையில் சிறிது நேரம் தங்க நேர்ந்தது ஒருவிதத்தில் தரும சங்கடமான பொறுப்பை நம் தலையில் சுமத்திக் கொண்டது போல் முடிந்தது'' என்றான்.

பிரதிவீபதி எதைக் குறித்து அப்படிச் சொல்கிறான் என்பதைப் புரிந்து கொண்டும், புரிந்து கொள்ளாதவர் போல் சிரித்துக் கொண்டே, ''நாம் அப்படிப் பட்ட பெரும் பொறுப்பு எதையும் ஏற்றுக் கொண்டதாக நான் நினைக்கவில்லை'' என்றார் சந்தகர்.

''ஒரு பெண்ணின் வாழ்க்கைப் பொறுப்பை ஏற்றுக் கொள்வதைப்

தி.ரா.கோபாலன்

பெரும் பொறுப்பாக நீங்கள் கருதாதது ஆச்சரியம் தான்'' என்றான் பிரதிவீபதி.

சந்தகர் சிரித்தார். ''இந்த உலகத்தில் இன்பத்தை நிரப்புகிறவர்கள் பெண்களேதான். ஒரு பெண்ணின் வாழ்க்கைப் பொறுப்பை ஏற்றுக் கொள்ளும் ஒரு ஆண் என்றும் அதைத் துன்பமாகவோ பராமுகமாகவோ கருதியதில்லை. வாழ்வின் இன்பத்தைச் சுமந்து செல்வதாகவே கருதுகிறார்கள்'' என்றார்.

''அதுதான் மாயை. அதில் நாம் சிக்கி உழல்கிறோம். நீங்கள் அந்தப் பெண்ணின் வாழ்க்கைப்பொறுப்பை நான் ஏற்றுக் கொண்டதை மிகத் தவறாகக் கருதியிருக்கிறீர்கள்'' என்றான் பிரதிவீபதி.

''நான் ஒன்றும் தவறாகக் கருதவில்லை. சாதாரணமாக அப்படிப்பட்ட யௌவனமும் பேரழகும் பொருந்திய ஒரு பெண்ணின் வாழ்வை மலர்விக்க ஒரு ஆண் பிள்ளை முயன்றால் அதைத் தவறாகக் கருதுகிறவன் பெரிய முட்டாளாகத்தான் கருதப்படுவான்'' என்றார் சந்தகர்.



''இப்பொழுது நீங்கள் பேசுவதிலிருந்து என்னைப் பற்றித் தவறாகப் பேசுகிறீர்கள் என்றுதான் நான் கருதவேண்டியிருக்கிறது'' என்றான் பிரதிவீபதி.

''ஒவ்வொரு மனிதனின் இதயமும் எதை இயற்கையாகக் கருதுமோ அந் நிலையில் தான் என் இதயமும் கருதியது. உலகம் ஒப்புக் கொள்ளாத அளவுக்கு இதயத்தில் எழும் கருத்துக்கள் தான் இயற்கைக்கு மாறானதாகும். அதைத்தான் வித்தியாசமாகவோ தவறாகவோ கருத முடியும். வயது முதிர்ந்தவரும் அனுபவ ஞானியுமான ஜைன முனிவர் இயற்கையாகத் தம் மனத்தில் எத்தகைய கருத்தைக் கொண்டிருக்கிறாரோ அத்தகைய கருத்தைத்தான் நானும் கொண்டிருக்கிறேன். அவர் தம் வளர்ப்புப் பெண்ணின் வாழ்வை ஒரு தகுந்த யௌவன புருஷரிடம் ஒப்படைத்ததாகக் கருதுகிறார். நானும் அப்படித்தான் கருதுகிறேன். இதில் என்ன தவறு இருக்கப் போகிறது?'' என்றார் சந்தகர் பரிகாசமாகச் சிரித்துக் கொண்டே.

''மறுபடியும் நீங்கள் இருதய பூர்வமாகத் தவறு செய்கிறீர்கள். என்னுடைய மன நிலையை நீங்கள் அறிந்து கொள்ளவில்லை..'' என்றான் பிரதிவீபதி.

''உங்கள் மன நிலையைப் பற்றித் தாங்கள் ஆயிரம் சொல்லலாம். உங்கள் மன நிலையைப் பற்றித் தாங்கள் சொன்னால்தான் நான் அறிந்து கொள்ள முடியும். ஆனால் இயற்கையாக மனம் எதை நினைக்குமோ, அதைத் தான் நானும் நினைக்கிறேன். அந்த முனிவரும் நினைக்கிறார்'' என்றார் சந்தகர்.

''நான் அந்தப் பெண்ணின் வாழ்க்கைப் பொறுப்பை ஏற்றுக் கொண்டதைப் பற்றி நீங்கள் இருவருமே ஏதோ தவறாகத்தான் கருதுகிறீர்கள்'' என்றான் பிரதிவீபதி.

''உங்கள் மன நிலை எனக்குத் தெரியாத வரையில் எங்கள் கருத்து தவறானது என நாங்கள் கருதவே மாட்டோம். தங்கள் மனத்தை அறிந்த பின்னும் தாங்கள் ஏதோ தவறாகக் கருதுகிறீர்கள் என்று தங்களிடம் அனுதாபம் காட்ட நேருமே தவிர, எங்கள் கருத்து தவறானது என நாங்கள் ஒப்புக் கொள்ள முடியாது'' என்றார் சந்தகர்.

''அப்படியென்றால் நான் அந்தப் பெண்ணிடம் காதல் கொண்டுள்ளேன், அப்பெண்ணின் வாழ்வை அம்முறையிலேயே ஏற்றுக் கொள்ளச் சம்மதித்துள்ளேன் என்றுதானே கருதுகிறீர்கள்?''

''ஆமாம்! அக்கருத்துத் தான் மனதில் எழுகிறது.''

''இயற்கையாக எழுந்தாலும் அது மிகவும் தவறு.''

''தவறு என்று சொல்லி விட்டால் ஒப்புக் கொண்டுவிட முடியாது. நீங்கள் தான் இந்தக்காரியத்தில் தவறாக நடந்து கொள்ளுகிறீர்கள் என்றுதான் நான் சொல்லுவேன்.''

''நான் அந்தப்பெண்ணின் வாழ்க்கை நலனைப் பாதுகாப்பதற்காக ஒப்புக் கொண்டது அவளை ஒரு நல்ல வாலிபனுக்கு மணம் செய்து வைக்கலாம் என்ற கருத்தில்தான்.''

''நல்ல கருத்துத்தான். ஆனால் அதை விளக்காமல் விட்டு விட்டதுதான் தாங்கள் செய்த பெரும் தவறு. உங்களைப் போன்ற வாலிபர் கையில் ஒரு பெண்ணை ஒப்படைப்பவர் இயற்கை

யாக எக்கருத்தில் ஒப்படைப்பார்கள் என்பதை நீங்கள் அறிந்து கொள்ளாமல் போனதுதான் ஒரு விபரீதம். எந்த நோக்கத்தில் அந்தப் பெண்ணை ஏற்றுக் கொள்ளுகிறோம் என்று விளங்காமல் போனதுதான் அதைவிடப் பெரிய விபரீதம்'' என்றார் சந்தகர்.

''என் குற்றத்தை நான் ஒப்புக் கொள்ளுகிறேன். அந்தப் பெண் நான் புறப்படும்போது என்னைப் பார்த்த பார்வை என் மனசைத் தொட்டுக் கிளறி விட்டது. அப்பொழுதுதான் ஏற்பட்டுள்ள பிழையை நான் உணர்ந்தேன். அவள் என்னைப் பற்றி ஏதோ தவறாகக் கருதுகிறாள் என்றே நினைக்கிறேன்'' என்றான் பிரதிவிபதி.

''பாவம்! அவள் உங்கள் மீது காதல் கொண்டு விட்டாள் என்பதை உங்கள் பார்வையின் மூலமாகவே அறிந்து கொண்டு விட்டீர்கள் போலிருக்கிறது. அந்த இடத்தில் அவள் மீது தவறு சொல்வதில் பயனில்லை. இயற்கையாக ஒவ்வொரு பெண்ணுக்கும் தங்களைப் போன்ற யௌவனமும் அழகும் பொருந்திய வாலிபரைக் கண்டால் இத்தகைய மனக் கிளர்ச்சி ஏற்படுவது சகஜம். அதிலும் தாங்கள் அவளுடைய வாழ்க்கை நலனைக் கவனிப்பதாக ஏற்றுக் கொண்ட பின் அவளுடைய கனவுக் கோட்டை உயர்ந்ததில் தவறு ஒன்றுமில்லை. தவிர, தங்களைப் போன்ற இளவரசர்கள் அவளைப் போன்ற யௌவனமும் அழகும் கொண்ட பெண்ணின் பொறுப்பை ஏற்றுக் கொண்டது பெரும் பாரமாகாது. ஒவ்வொரு அரசர்கள் எவ்வளவோ பெண்களைத் தங்கள் காதல் கிழத்திகளாக அமைத்துக் கொண்டிருக்கின்றனர் என்பதையும் தாங்கள் மறந்து விடக் கூடாது'' என்றார் சந்தகர்.

''தங்கள் கருத்து தவறு. என் மனம் மாலவல்லியைத் தவிர எந்தப் பெண்ணையும் கருதாது'' என்றான் பிரதிவிபதி.

''நீங்கள் அவ்வளவு பிடிவாதம் காட்டக் கூடாது. இந்த மனசைக் கொஞ்சம் விரிவுபடுத்திக் கொண்டால் அதில் பல பெண்களுக்கு இடமளிக்கக் கூடிய வசதியை ஏற்படுத்திக் கொள்ளலாம். மாலவல்லிவேண்டுமானால் உங்கள் மனசிலுள்ள உயர்ந்த சிம்மாசனத்தில் அமர்ந்து கொள்ளட்டும். மற்றவர்களைக் கீழே உள்ள ஆசனங்களில் அமர்த்துங்கள். வாழ்க்கைக்காகப் பெண்ணைக் கல்யாணம் செய்து கொள்ளலாம். உபகார சிந்தையோடு ஒரு பெண்ணைக் கலியாணம் செய்து கொள்ளலாம். உறவு முறையில் ஒரு பெண்ணைக் கலியாணம் செய்து கொள்ளலாம். அதுவும் தங்களைப் போன்ற ராஜகுமாரர்கள் பல காரணங்களுக்காகப் பல பெண்களைக் கலியாணம் செய்து கொள்ளலாம்'' என்றார் சந்தகர்.

''நீங்கள் ஏதோ என்னைப் பரிகாசம் செய்கிறீர்கள் என்றுதான் நினைக்கிறேன். நீங்கள் என் நிலையில் இருந்தால் தெரியும்....'' என்றான் பிரதிவிபதி.

''உங்கள் நிலையில் இல்லாததுதானே துரதிர்ஷ்டம். இப்படித் தாடியும் மீசையும் வைத்துக் கொண்டு பைத்தியக்காரனைப் போல் திரியும் சோதிடனாகிய என்னை எந்தப் பெண் காதலிக்கப் போகிறாள்...?'' என்றார் சந்தகர் இலேசாகச் சிரித்துக் கொண்டே.

''ஏன் இந்தப் பெண்ணையே நீங்கள் கலியாணம் செய்து கொண்டால் என்ன?'' என்றான் பிரதிவிபதி.

''கலியாணம் செய்து கொள்ளலாம். ஆனால் அவள் என்னை மனத்தால் கருதவில்லையல்லவா? அவள் உங்களிடம் தானே மயங்கியிருக்கிறாள் என்பதை அறிந்து கொண்ட பின் அவளை எப்படி நான் மனத்தால் நினைக்க முடியும்?'' என்றார் சந்தகர்.

''எனக்கு எல்லாவற்றையும்விட அப்பெண்ணின் தவறான அபிப்பிராயத்தை எப்படி மாற்றப் போகிறோம் என்பதுதான் விளங்கவில்லை. உண்மையாகவே நான் மாலவல்லியைத் தவிர வேறு எந்தப் பெண்ணையும் மனத்தால் நினைக்க முடியாத நிலையில்தான் இருக்கிறேன்.''

''அதை நான் ஒப்புக் கொள்ளுகிறேன். ஆனால் தங்களைப் போன்றவர்கள் உபகார சிந்தையோடாவது வேறொரு பெண்ணை அங்கீகரிக்கக் கூடாதா?'' என்று கேட்டார்.

''உபகாரசிந்தை இருக்குமானால் அப்பெண்ணை எனது வாழ்க்கையோடு பிணைத்துக் கொள்ள வேண்டுமென்ற அவசியம் இல்லை. அவளுடைய நல்வாழ்க்கைக்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்யலாமல்லவா?'' என்றான் பிரதிவிபதி.

''உங்களுக்கு வாழ்க்கைத் துணையாவது தான் அவளுக்கு நல்வாழ்வு அளிக்குமென்று அந்தப் பெண் கருதியிருந்தால் நீங்கள் நல்வாழ்வு என்று கருதுவது வெறும் போலித்தனமாகத்தானே இருக்கும்? இதைப் பற்றி அதிகம் வளர்த்துவதில் பயனில்லை. அம் முனிவரிடம் தாங்கள் அப் பெண்ணின் வாழ்க்கைப் பொறுப்பை ஏற்றுக் கொள்வதாகச் சொல்லியதும், அம் முனிவர் அதை இயற்கையாகத் தாங்கள் மணவாளனாகப் போகிறீர்கள் என்று கருதித்தான் மகிழ்ச்சியடைந்தார். இதை அறிந்ததும் அப்பெண் தங்களிடம் மனத்தை விட்டுத் தடுமாறியதையும் நான் அறிந்து கொண்

# நான்கு மருந்துகள் அடங்கிய 'அனஸின்' காட்டிலும் வேறொன்று இவ்வளவு விரைவில் குணமளிப்பதில்லை

1. க்வினைன் சல்பேட் 2. காப்பின்
3. பினஸிடின் 4. ஆஸிடில்ஸாலிஸிலிக் ஆஸிட்

வலிகளுக்கு நிவாரணமளிப்பதில் புகழ் பெற்ற 'அனஸின்' விஞ்ஞான முறையில் சேர்க்கப்பட்ட நான்கு மருந்துகளின் கலப்பாகும். இவைகள் நரம்புகளின் கேந்திர ஸ்தானங்களில் கூட்டாக வேலை செய்து, தலைவலி, ஜலதோஷம் ஜுரம், பல்வலி, மற்றும் தசைவலிகளுக்குத் துரிதமாயும் அபாயமின்றியும் நிச்சயமாயும் நிவாரணம் அளிக்கிறது. வலிகளுக்குத் துரித நிவாரணமளிப்பதில் அனஸினுக்கு இணையொன்றில்லை ... அனஸினைப் போல தீங்கு விளைவிக்காத வில்லை வேறொன்றில்லை. ஆகவே ஞாபகமிருக்கட்டும் 'அனஸின்' ஒரு டாக்டரின் குறிப்புக்கு ஒப்பாகும். அது ஹிருதயத்திற்குத் தீங்கு விளைவிக்கவோ அல்லது வயிற்றுக் கோளாறுகள் உண்டு பண்ணவோ செய்யாது. 'அனஸின்' லக்ஷக்கணக்கான மக்களுக்கு நிவாரணம் அளிக்கிறது. 'அனஸின்' விலை ஒவ்வொருவர் சக்திக்கும் ஏற்றது. ஒரு பாக்கெட்டின் விலை 12 நயா பைஸா மட்டுமே.

**நான்கு மருந்துகளின் சேர்க்கையான 'அனஸின்' வேண்டுமென்றே கேளுங்கள்**










ஜெப்ரே மேனர்ஸ் அண்ட் கோ பிரைவேட் லிமிடெட், ... செய்து உபயோகிப்பவர்கள்.

ஒரு பாக்கெட்டின் விலை 12 நயா பைசா



பட்டுப்
போன்ற
மிருதுவான
கூந்தலுக்கு
அழகாயிருக்க விரும்பும் ஒவ்வொரு பெண்மணியும் போற்றும் பொக்கிஷம். சவீர பராமரிப்பு அவசியம். கூந்தல் வளருவதற்கும், பராமரிப்புக்கும் இதைப் போன்று வேறு கிடையாது.
ஸ்வஸ்திக்
பெர்பியூம்டு கேஸ்டர் ஆயில்
தி ஸ்வஸ்திக் ஆயில் மில்ஸ் லிட்., பம்பாய்
மென்மையான சோப்புகளையும் மற்றும்
கூந்தல் தைலங்களையும் தயாரிப்பவர்கள்

டேன். நீங்கள் கொடுத்த வாக்குறுதியை அவர்கள் தவருக எடுத்துக் கொண்டு விட்டதாக எண்ணித் தாங்கள் அதைச் சிதைக்க நினைத்தால் அது விபரீதமாக முடியும். தாங்கள்தான் அந்த வாக் குறுதியிலிருந்து தவறியதாக உலகம் கருதும். இதைப் பற்றிய கவலையைப் பின்னல் யோசித்துக் கொள்வோம். இந்தப் பேச்சுப் போக்கிலேயே நாம் காஞ்சி நகரை அடைந்து விட்டோம் எனக் கருதுகிறேன். இனிமேல் நாம் எப்படி நடந்து கொள்ள வேண்டுமென்று திட்டம் வகுப்பதில்தான் கவனம் செலுத்த வேண்டும்'' என்ருர் சந்தகர்.

''ஆம்! முதலில் பூதுகர் எங்கே இருக்கிருர் என்பதைக் கண்டு பிடிக்க வேண்டும். நான் அரண்மனை விருந்தின ராக 'இருந்து கொண்டு கூடியவரையில் அங்குள்ளவர்களோடு பழகி உளவு தெரிந்துகொள்கிறேன். நீங்கள் வெளியி லிருந்து உளவு தெரிந்து கொள்ளுங்கள். நாம் இருவரும் அடிக்கடி சந்திக்க வேண் டிய இடத்தை நிர்ணயம் செய்து கொள் வோம்'' என்ருன் பிரதிவீபதி.

''சரி! எனக்குக் காஞ்சி நகரில் அதிகப் பழக்கம் இல்லாததால் நீங்கள் தான் நாம் சந்திக்கும் இடத்தைக் குறிப்பிட வேண்டும்'' என்ருர் சந்தகர்.

''இந்நகரில் வெளியூரிலிருந்து வந்த யாத்திரீகர்கள் தங்குவதற்காகப் பெரிய விடுதி ஒன்று உள்ளது. அங்கே நீங்கள் இருங்கள். அங்கு நடு மத்தியான வேளை யில் நாம் சந்திப்போம். ஏனென்ருல் காலையிலும் மாலையிலும் நாம் பல இடங்களைச் சுற்றிப் பார்த்துத் தெரிந்து கொள்ள வசதி இருக்கும்'' என்ருன்.

அவர்கள் இப்படிப் பேசிக் கொண் டிருக்கும் போதே காஞ்சி நகரின் வீதி களை அடைந்தனர்.

அழகான மாளிகைகள் நிறைந்த அகன்ற வீதியில் குதிரையேறி வரும் அவ்விருவரும் பிறருடைய கண்களைக் கவரக் கூடியவர்களாகத்தான் இருந்த னர். அங்குமிங்கும் நடந்து கொண் டிருந்த அரண்மனை ஊழியர்கள் கம்பீர மான குதிரை மீது அமர்ந்து வரும் பிரதிவீபதிக்குத் தங்கள் வணக்கத்தைச் செலுத்தினர். இதிலிருந்து அவனை அரண்மனை ஊழியர்கள் நன்கு அறிந்து கொண்டிருக்கிருர்கள் என்பதைச் சந்த கர் உணர்ந்தார். பிரதிவீபதி தன் குதி ரையை நகரில் யாத்திரீகர்கள் தங்கும் விடுதிக்குச் செலுத்திஞன். அவ்விடுதியின் பாதுகாப்பாளர் பிரதிவீபதியைக் கண்ட தும் எழுந்து ஓடிவந்து வணங்கி நின்ருர்.

பிரதிவீபதி கம்பீரமான குரலில், ''இவர் என்னுடைய நண்பர். குடந் தைக் கோடீச்சுவரத்தைச் சேர்ந்தவர். சோதிட சாஸ்திரத்தில் வல்லவர். இவரைச் சந்தகர் என்று சொல்லுவார் கள். இவர் சில நாட்கள் இந்த விடுதியில் தங்கி இருக்க ஆசைப்படுகிருர். விடுதி யில் அவருக்கு வேண்டிய வசதிகளைச் செய்து கொடுங்கள்'' என்ருன்.

> அருள் வாக்கு
>
> கஷ்டமும் சுகமும் இல்லாமல் எப் பொழுது இருக்கும்? எல்லாவற்றை யும் ஏற்படுத்தினவனிடம் போனல் அப்படி இருக்கலாம்.
>
> — ஸ்ரீ சங்கராச்சாரியார், காமகோடி பீடம்.

விடுதியின் பாதுகாப்பாளர், ''தங்கள் உத்தரவுப்படி ஒரு குறைவும் இல்லாமல் பாதுகாத்துக் கொள்ளுகிறேன்'' என்று கூறினர்.

உடனே பிரதிவீபதி சந்தகரைப் பார்த்து, ''நான் சென்று வருகிறேன். நீங்கள் என்னைப் பார்க்க வேண்டுமென்று விரும்பினல் இவ் விடுதியிலுள்ளவர்கள் மூலமே அரண்மனைக்குச் சொல்லி அனுப் பினல் போதும். அல்லது அவர்கள் மூலமாக அரண்மனைக்கு வந்து நீங்கள் என்னைச் சந்திக்கலாம்'' என்று சொன் ஞர். பிறகு அந்த விடுதிப் பாதுகாப்பா ளரைப் பார்த்து, ''இவர் என்னை எந்தச் சமயத்தில் அரண்மனையில் வந்து பார்க்க நினைத்தாலும் தக்க மனிதர் மூலம் அவருக்கு வேண்டிய சௌகர்யங் களை உடனடியாகச் செய்யத் தவரு தீர்கள்'' என்ருன். உடனே பிரதிவீபதி சந்தகரிடம் விடைபெற்றுக் கொண்டு அந்த இடத்தை விட்டு நகர்ந்தான்.

சந்தகர் குதிரையிலிருந்து இறங்கிய தும் விடுதிப் பாதுகாப்பாளர் அங்கிருந்த வேலைக்காரன் ஒருவனிடம் குதிரையைப் பத்திரமாக லாயத்தில் கட்டும்படி உத் தரவிட்டார். பிறகு சந்தகருக்கு உபசார வார்த்தைகள் சொல்லி விடுதிக்குள் அழைத்துக் கொண்டு போனுர்.

சந்தகர் அவ் விடுதியில் குளித்து விட்டுக் காலை உணவும் அருந்திவிட்டு வந்தார். நகரில் எங்கே செல்லலாம் என்பதைப் பற்றிக் கவலை உள்ளவராக, விடுதிப் பாதுகாப்பாளரிடம் பேசிச் சில விவரங்கள் அறிந்துகொள்ள நினைத்தார்.

''இப்படிப்பட்ட பெரிய நகரங்களில் வெளியூரிலிருந்து வரும் யாத்திரீகர்கள் தங்குவதற்காக வசதியான விடுதிகள் இருப்பது பெரிதல்ல. ஆனல் அதை ஒழுங்காக நிர்வகிப்பவர்களின்சாமர்த்தி

யத்தில்தான் எல்லாமிருக்கிறது. நானும் எவ்வளவோ நகரங்களுக்குச் சென்றிருக்கிறேன். எவ்வளவோ விடுதிகளில் தங்கி இருக்கிறேன். ஆனால் இவ்வளவு சௌகரியங்கள் உள்ள விடுதியொன்றை இப்பொழுதுதான் என் வாழ்நாளிலேயே பார்க்கிறேன். இதெல்லாம் உங்களுடைய நிர்வாகத் திறமையினால் ஏற்பட்டதுதான் என்று கருதுகிறேன்'' என்றார் முகஸ்துதியாக.

விடுதிப் பாதுகாப்பாளருக்கு இதைக் கேட்டதும் பேரானந்தத்தால் உடல் சிலிர்த்தது! பாவம்! அவர் தம்மை இவ்வளவு புகழ்ச்சியாகக் கூறும் எவரையும் பார்த்ததில்லை போலிருக்கிறது.

''ஆமாம்! வஞ்சனை இல்லாமல் உழைக்கிறேன், வந்தவர்களை உபசரிக்கிறேன். என்னைப்போல் பொறுப்போடு யாரும் காரியம் செய்ய மாட்டார்கள். ஆனால் இங்கு வந்து தங்கும் யாத்திரிகர்களும் இந்த விடுதியை நடத்தும் நிர்வாகியின் பொறுப்பை உணர்ந்திருக்க வேண்டும். கிடைத்த சௌகரியங்களைப் பெற்றுத் திருப்தி அடையாமல் தூற்றிக் கொண்டு போகிறவர்கள் எத்தனை பேர்கள் இருக்கிறார்கள் தெரியுமா? எனக்குத் தெரிந்த வரையில் உங்கள் சோழ நாட்டிலிருந்து வந்தவர்கள் தான் எல்லாவற்றையும் உணர்ந்தவர்களாக இருக்கிறார்கள். சில நாட்களுக்குமுன் உங்கள் நாட்டிலிருந்து தான் வந்தார் ஒரு வாலிபர். அவர் கொஞ்சம் நாஸ்திக குணம் கொண்டவர் போல் பேசினாரே தவிர, மற்றப்படி அவர் மிகவும் குணமுள்ளவராக நடந்து கொண்டார்'' என்று கூறினார்.

''அப்படியா? அப்படி யார் எங்கள் நாட்டிலிருந்து நாஸ்திக வாதம் பேசுகிறவர்கள் வந்திருப்பார்கள்? அவர் பெயர் என்னவென்று சொன்னார்?''

''அவர் தம் பெயர் பூதுகர் என்று சொன்னார். குடந்தைக்குச் சமீபமுள்ள திருப்புறம்பயத்தைச் சேர்ந்தவரென்றும் சொன்னார்'' என்றார் விடுதிப் பாதுகாப்பாளர்.

''அந்தப் பாவி இங்கேயும் வந்து விட்டானா? அவன் எத்தகைய நற்குணம் படைத்தவனாக இருந்தாலும் இருக்கட்டும். அவன் பேசும் நாஸ்திக வாதம் மாத்திரம் எனக்குப் பிடிப்பதில்லை. இந்த உலகத்திலே கடவுளே இல்லையென்றும், கண்டதே காட்சி, கொண்டதே கோலம் என்று சொல்லுகிறவர்களையும் அடைத்து வைக்க ஒரு விநோதமான சிறைச்சாலை ஏற்படுத்த வேண்டும். அவர்களால் இந்த நாட்டுக்கு எவ்வளவு தீங்கு தெரியுமா? அவன் இங்கு எதற்காக வந்தானாம்? யாரையாவது பார்க்க வேண்டுமென்று உங்களை விசாரித்திருப்பானே?'' என்றார் சந்தகர்.

'' ஆமாம். விசாரித்தார். இங்கு குடந்தையிலிருந்து வந்திருக்கும் இசைக் கணிகை தேனார்மொழியாளின் மாளிகை எது என்று கேட்டார். நான் சொன்னேன். அவள் அவருக்கு ஏதாவது தெரிந்தவளாய் இருப்பாளோ?'' என்றார் விடுதிப் பாதுகாப்பாளர்.

'' அவன் மிகவும் பெண் மோகம் பிடித்தவன். அவன் எந்த ஊர் வந்தாலும் பெண்களைப் பற்றி விசாரிப்பதில்தான் கவனம் செலுத்துவான்...''

'' அடடே! இப்படிப்பட்ட கெட்ட சுபாவம் கொண்டவரா அவர்? இப்படிப்பட்டவர்கள்தான் மிகவும் நல்லவர்கள் போல வேஷம் போடுகிறார்கள். அதிருக்கட்டும்! நீங்கள் பிரபல சோதிடர் என்று தெரிந்து கொண்டேன். நான்கூட உங்களிடம் சில விஷயங்களைக் கேட்டுத் தெரிந்து கொள்ள வேண்டுமென்ற ஆவல். என் ஜாதகப்படி சனி பகவான் அஷ்டமத்தில் இருக்கிறார்'' என்றார். சந்தகர் இடைமறித்து, ''இருக்கட்டும். இருந்துவிட்டுப் போகட்

டும். நான் இப்பொழுது அவசரமாக வெளியே செல்ல வேண்டும். கவலைப் படாதீர்கள். போய் விட்டு வந்து உங்கள் ஜாதகத்தையும் பார்த்து விடுகிறேன்'' என்று சொல்லிக் கிளம்பினார்.

அந்த விடுதி நிர்வாகியும் சந்தோஷமாக விடை கொடுத்து அனுப்பினார்.

அங்கிருந்து கிளம்பிய சந்தகர் தேனார்மொழியாளின் வீட்டை விசாரித்துக் கொண்டு போக நினைத்தார். ராஜசபையில் பிரசித்தமான பாடகியாக இருக்கும் அவள் மாளிகையைக் கண்டு பிடிப்பதா கடினம்? இரண்டொருவரிடம் விசாரித்துக் கொண்டு சீக்கிரத்திலேயே அவர் தேனார்மொழியாளின் மாளிகையை அடைந்தார்.



அந்த அழகான மாளிகையின் முற்றத்தோடு கூடிய தாழ்வாரத்துக்கு அவர் வந்தபோது அங்கு ஒரு ஆசனத்தில் தனியாகத் தேனார்மொழியாள் ஆழ்ந்த சிந்தனையில் இருப்பவள் போல் உட்கார்ந்திருந்தாள். கீழே அழகான வீணையொன்று வைக்கப்பட்டிருந்தது. தீவிரமாகச் சிந்தனையிலிருந்த தேனார்மொழியாள் யாரோ வந்திருக்கும் அரவம் கேட்டதும் சட்டென்று திரும்பிப் பார்த்தபோது, சந்தகர் நிற்பதைக் கண்டு சிறிது பதற்றம் அடைந்தவளாக எழுந்து நின்றாள்.

சந்தகர் அவளிடம் எப்படிப் பேசுவது என்று நினைப்பதற்குள், ''நீங்கள் யார்? எங்கே வந்தீர்கள்?'' என்றாள் தேனார்மொழியாள், அதிகாரமும், கோபமும் நிறைந்த குரலில்.

''நான் சோழ நாட்டைச் சேர்ந்தவன். காஞ்சீபுரத்துக்குத் தான் வந்தேன்...'' என்றார் சந்தகர்.

சந்தகர் பதில் அவளுக்குச் சிறிது அடக்க உணர்ச்சியை ஏற்படுத்தியது. தான் விறைப்பாகக் கேட்ட கேள்விக்கு அவர் தணிவாகப் பதில் சொன்னாலும் அந்தப் பதில் ஏதோ விஷமத் தன்மை கொண்டது போலிருந்ததால் அவரிடம் கொஞ்சம் அமைதியாகவே பேச வேண்டும் என்ற அபிப்பிராயத்துக்கு வந்தாள்.

''தாங்கள் இங்கு வந்த காரணம்என்னவோ?'' என்றாள் அவள் மெதுவாக.

''நான் ஒரு சோதிடன். கோடீச்சுவரத்துச் சோதிடன் சந்தகன் என்று கேள்விப்பட்டிருக்கலாம். நான் தொழில் விஷயமாகக் காஞ்சீபுரம் வந்தேன். சோழநாட்டில் இப்பொழுது ரொம்பவும் பஞ்சம். தொழில் துறையில் வருமானம் கெட்டு விட்டது. செல்வம் கொழிக்கும் பல்லவ சாம்ராஜ்யத் தலைநகருக்கு வந்தால் நல்ல வருமானம் கிடைக்கும் என்று எண்ணி வந்தேன். பல சீமான்களைப் பார்த்துக் கொண்டு வருகிறேன். அப்படியே தங்களையும்...'' என்று சொல்லி நிறுத்தினார் சந்தகர்.

கோடீச்சுவரத்துச் சோதிடர் சந்தகர் என்பதைக் கேட்டதும் தேனார்மொழியாள் முன்னிலும் அதிக பயமும் பக்தியும் கொண்டவளாக, ''நீங்கள்தானா அந்தக் கோடீச்சுவரத்துச் சந்தகர்? மிகவும் சந்தோஷம். உட்காருங்கள்'' என்று அவரை உபசரித்து அங்கிருந்த ஆசனமொன்றில் உட்காரச் சொன்னாள்.

அவர் அந்த ஆசனத்தில் கம்பீரமாகக் கால் மேல் கால் போட்டு உட்கார்ந்து அவள் முகத்தை உற்றுப் பார்த்தார். அந்த முகக் குறியிலேயே அவளுடைய உள் அந்தரங்கத்தைத் தெரிந்து கொண்டவர் போல், ''இந்த உலகத்தில் பதவி, செல்வம், புகழ் எல்லாம் உள்ளவர்களுக்கு ஒரு குறை இல்லாமல் இருப்பதில்லை. அவர்கள் விரும்பும் எல்லாவற்றையுமே சர்வேசுவரன் அவர்களுக்குக் கொடுத்து விடுவதில்லை. அதற்குத்தான் இந்த ஒன்பது கிரகங்களை வைத்திருக்கிறான். இந்த ஒன்பது கிரகங்களில் எட்டு கிரகங்கள் அவர்கள் வாழ்க்கைக்குச் சாதகமாக இருந்து ஒன்று மட்டும் சிறிது கெடுதலை உண்டாக்கினால் கூடப் போதும். அவர்கள் வாழ்க்கையில் பாக்கியமாகக் கிடைத்த எல்லாச் சாதனங்களும் பாழாகி விடும். மனித வாழ்வில் ஒரு கிரகம் உயர்ந்த பதவியைக் கொடுக்கிறது. இன்னொரு கிரகம் வீடு, வாகனம், ஆடை, ஆபரணம் எல்லாவற்றையும் கொடுக்கிறது. மற்றொரு கிரகம் நோயற்ற நிடவாழ்வைக் கொடுக்கிறது. பிரிதொரு கிரகம் புத்தியை வளர்க்கிறது. இப்படிப் பல கிரகங்கள் பல நன்மைகளைச் செய்தாலும் ஒரு கிரகம் அவர்கள் மனோ இச்சையைக் குலைத்து விட்டால் போதும். இத்தனையும் வீணாகி விடும். உதாரணமாக, வாழ்வில் பொன், பொருள், பூஷணம் எல்லாமிருக்கலாம். ஆனால் ஒரு ஆண் தான் விரும்பிய பெண்ணையோ அல்லது ஒரு பெண் தான் விரும்பிய ஆணையோ அடையாவிட்டால்

வாழ்வில் கிடைத்த இத்தனை சாதனங்களும் வீணாகி விடுகின்றன. ஒரு காதலனை விரும்பி அவனை அடையக் கொடுத்து வைக்காத பெண்ணுக்கு ஏராளமான ஆடை ஆபரணங்கள் இருந்தாலும் அவைகளை அணிந்து கொள்ளப் பிரியப் பட மாட்டாள். என்னவோ உங்களுக்கு உள்ள மனோ விசாரம் எதுவாக இருக்கும் என்று நான் ஆராய்ச்சி செய்து கவனிக்கவில்லை. இருப்பினும் தங்களைப் பார்த்தவுடனேயே இப்படிச் சொல்லும்படி எனக்குத் தோன்றியது.''

தேனார் மொழியாள் அப்படியே அயர்ந்து விட்டாள். ஒரு மனிதரைப் பார்த்தவுடனே அவருடைய மனச் சஞ்சலங்களை எடுத்துச் சொல்லும் சோதிடரை இப்பொழுதுதான் தன் வாழ்நாளில் அவள் பார்த்தாள்.

அவள் மிகவும் பணிவான குரலில், ''சுவாமி, தாங்கள் சொல்லியது முற்றிலும் உண்மை. நான் இப்பொழுது அந்நிலையில்தான் இருக்கிறேன். வாழ்க்கையில் எது இருந்தாலென்ன? சுகம் இல்லை. இந்த மனத்தில் அந்தரங்கமான உண்மைகள் எவ்வளவோ உண்டு. அரச சமூகத்தில் பழக்கம் இருந்ததால் பல உண்மைகள் தெரிந்து கொண்டிருக்கிறேன். முக்கியமாக, பத்துநாட்களுக்கு முன் ஒருவர் வந்தார். சோழ நாட்டைச் சேர்ந்தவர்தான்—வாலிபர். இவ்வளவு நாளும் இல்லாமல் எப்படியோ என் மனம் அவரிடம் லயித்து விட்டது. வெட்கத்தை விட்டு, என் அபிப்பிராயத்தை அவரிடம் சொன்னேன். அந்த உத்தம புருஷர் என் வார்த்தைகளுக்கு இணங்கவில்லை. அவரை எப்படியேனும் என் வசமாக்கிக் கொள்ள வேண்டுமென்று என் மனம் துடித்தது. அதற்கு ஏதேனும் முயற்சி செய்யலாம் என்று யோசிக்கும் தறுவாயில் அவர் பல்லவ சேனாதிபதி உதய சந்திரனால் பிடிக்கப்பட்டு எங்கோ சிறையில் வைக்கப் பட்டிருக்கிறார் என்று அறிந்து கொண்டேன்......'' என்று சொல்லிக்கொண்டே வரும்போது, சந்தகர் இடைமறித்தார்.

ஆனால் அதை வெளியிட்டுக் கொள்ளாது, ''நிறுத்துங்கள். உங்களுக்கு நான் அல்லவா சோதிடம் சொல்ல வந்திருக்கிறேன்? நடந்த கதையை யெல்லாம் நீங்களே சொல்லி விட்டால் நான் என்ன சொல்வது? போகட்டும் — உங்கள் உணர்ச்சி அப்படி இருக்கிறது. நான் வரும்போதே, உங்களைப் பார்த்த போதே, உங்கள் உள் அந்தரங்கத்தையும் மனப்போராட்டத்தையும் அறிந்து கொண்டு விட்டேன். உங்களுக்கு 'அவர் விடுதலையாவாரா? அவர் விடுதலையான பின் உங்கள் ஆசை நாயகராவாரா' என்பதுதானே கேள்வி?'' என்று சொல்லிச் சட்டென்று தரையில் உட்கார்ந்து தம்முடைய சோதிடப் பையை எடுத்து ஒரு பிடி சோழியை வைத்துப் பிரித்து எண்ணத் தொடங்கினார்.

''ஆமாம்—முதலில் அவர் விடுதலையானால் போதும், அப்புறம் அவரை அடைவது என்னுடைய சாமர்த்தியம்'' என்றாள் தேனார்மொழியாள்.

சந்தகர் அவள் வார்த்தையைக் காதில் வாங்கிக் கொண்டே சோழிகளை எண்ணி முடித்துவிட்டு, ''தங்கள் மனத்தைக் கொள்ளை கொண்ட அந்த மகா புருஷர் ஒரு பெரிய அரசாங்க நடவடிக்கையில் ஈடுபட்டிருக்கவேண்டும். அதன் காரணமாகவே குற்றவாளியாகி யிருக்க வேண்டும். இல்லையா?'' என்றார்.

''ஆமாம்! நீங்கள் சொல்வது முற்றிலும் உண்மை. அவர் இந்நகருக்கு வந்தது அரசாங்க அதிகாரிகளுக்கெல்லாம் தெரிந்திருக்கிறது'' என்றாள் தேனார்மொழி.

''அவர் பகிரங்கமாக வந்ததினால் அரசாங்க அதிகாரிகளெல்லாம் தெரிந்து கொள்ளும்படி நேரிட்டது. அவர் எதற்கும் அஞ்சாத மகாபுருஷர், இல்லையா? சரி! மற்ற விஷயங்களையும் சொல்லுகிறேன். பாருங்கள்'' என்று சொல்லி விட்டு, மறுபடியும் சோழிகளைப் போட்டு எண்ணிப் பார்த்து விட்டு, ''அந்த மனிதர் மிகவும் படித்தவராகவும் இருக்க வேண்டும். அதோடு கடவுளைப் பற்றிய உண்மைகளில் பற்று இல்லாதவராகவும் இருக்க வேண்டும். இதெல்லாம் சரி தானே?'' என்றார்.

''சரிதான். அத்தனையும் உண்மை'' என்றாள் அவள் ஆர்வத்தோடு.

''சரி! அப்படியென்றால் அவருடைய பெயரையும் சொல்லி விடுங்கள். அதைச் சொன்னால் பெயர் ராசியைக் கொண்டு சில உண்மைகளைத் தெரிந்து கொள்ளலாம்'' என்றார் சந்தகர்.

''அவர் பெயரா? பூதுகர்'' என்றாள் தேனார்மொழியாள் வெட்கத்துடன்.

சந்தகர் கலகலவென்று ஒரு ஏளனச் சிரிப்பு சிரித்துவிட்டு,'' அவன் பிரசித்தி பெற்ற நாஸ்திகனாயிற்றே? கடவுளை எதிரே கொண்டு வந்து காட்டினாலும் கூட இவர் கடவுள் இல்லையென்று சத்தியம் செய்து சொல்கிறவனாச்சே. மகா பாபம்! இத்தகைய மனிதரிடமா மனத்தைப் பறிகொடுத்து விட்டு இப்படித் தவியாய்த் தவிக்கிறீர்கள்? இந்தப் புத்தி உங்களுக்கு ஏன் அம்மா?'' என்றார்.

முதல் பாகம் முற்றிற்று

விளையாட்டு மன்னர்கள்

# திருமதி ஸி. கே. கே. பிள்ளை

இந்த விளையாட்டு மன்னர் பகுதியில் இதுவரையில் விளையாட்டு மன்னர்களை நேயர்களுக்கு அறிமுகப் படுத்தி வந்தோம். ஆண்களோடு பெண்களும் சரிநிகர் சமானமாக வாழும் இந்தக் காலத்திலே விளையாட்டு மன்னருக்குச் சமமாக விளங்கும் ஒரு விளையாட்டு அரசியை மிகுந்த பெருமையுடன் அறிமுகப் படுத்துகிறோம்.

இன்று டேபிள் டென்னிஸ் விளையாட்டுக்கு மிகுந்த மவுசு இருக்கிறது. பொழுது விடிந்தால் பொழுது போனால், எங்கேயாவது டேபிள் டென்னிஸ் பந்தயப் போட்டிகள் நடைபெற்று வருவதிலிருந்து இதற்குள்ள மதிப்பைப் புரிந்து கொள்ளலாம்.

சென்னை மயிலாப்பூரில் ஜூன் மாதம் முதல் வாரத்தில் ஜிம்கான க்ளப்பின் ஆதரவில் டேபிள் டென்னிஸ் விளையாட்டுப் போட்டி நிகழ்ந்தது. அதில் நாற்பது வயதுக்கு மேற்பட்டவர்களுக்கு நிகழ்ந்தபந்தயத்தில் திருமதி ஸி. கே. கே. பிள்ளை அபாரமாக விளையாடி வெற்றி பெற்றார். இவர் மூன்று வருஷங்களுக்கு முன்பு வரை ஏழு வருஷங்கள் தொடர்ந்து டேபிள் டென்னிஸ் விளையாட்டில் சென்னையின் முதலாவது வெற்றி வீராங்கனையாகத் திகழ்ந்திருக்கிறார். இந்தியாவில் டேபிள் டென்னிஸ் விளையாடும் தலைசிறந்த பெண்மணிகள் வரிசையில் இவருக்கும் ஒரு ஸ்தானம் உண்டு. டேபிள் டென்னிஸோடு, டென்னிஸ், பில்லியர்ட்ஸ் விளையாட்டுக்களையும் இவர் பிரமாதமாக விளையாடும் திறமை பெற்றவர். 1954ம் வருஷம் உலக டேபிள் டென்னிஸ் விளையாட்டுப் போட்டிக்கு இவரும் தேர்ந்தெடுக்கப்பட்டார். ஆனால் அதிர்ஷ்டம் இவருக்குக் குறுக்கே அணை போட்டது. அருமைத் தாயாருக் கேற்பட்ட உடல் நலக் குறைவினால் அவர் அதில் கலந்து கொள்ள இயலவில்லை.

திருமதி ஸி. கே.கே. பிள்ளைக்குப் பெற்றோர் குழந்தையில் சூட்டிய பெயர் சுந்தராபாய். இவர் 1913ம் வருஷம் ஜனவரி 1-ந் தேதி நெல்லூரில் பிறந்தார். இவர் ஆந்திரநாட்டில் பிறந்தாலும் சென்னையைச் சேர்ந்தவர்தான்!




1929-ம் வருஷம் விளையாட்டுக் கலையில் தேர்ந்த திரு ஸி. கே. கே. பிள்ளையை மணந்து கொண்டார். அவரை மணந்து கொண்ட பிறகே திருமதி சுந்தராபாய்க்கு விளையாட்டுக் கலையில் மிகுந்த ஈடுபாடும் உற்சாகமும் பிறந்தன. அவரது ஆர்வத்துக்கு உற்சாகம் என்னும் தண்ணீரை விட்டுப் பண்படுத்தி வளர்த்தவர் அவரது கணவர் திரு ஸி. கே. கே. பிள்ளைதான்!

"எனது அருமைக் கணவர் அளித்த ஆர்வமே என்னை விளையாட்டுக் கலையில் ஈடுபடச் செய்தது. இந்த ஆர்வத்தை மேன் மேலும் பெருக்கி டேபிள் டென்னிஸ் விளையாட்டில் ஈடுபடுத்தியவர் ஸ்ரீமதி பாலம்மா கிருஷ்ணசாமி. அவர் தமது எழுபத்தைந்தாவது வயதிலும் டேபிள் டென்னிஸ் விளையாடி வருவது எனது உற்சாகத்தை இன்னும் அதிகப் படுத்துகிறது!" என்று உணர்ச்சி ததும்பத் திருமதி ஸி. கே. கே. பிள்ளை கூறினார்.

திருமதி சுந்தராபாய்க்கு விளையாட்டுக் கலையிலுள்ள அளவற்ற பற்றுதலை ஒரு உதாரணத்திலிருந்து தெரிந்து கொள்ளலாம். இவர் சென்னையில் கௌரவ மாகாண மாஜிஸ்திரேட்டாகப் பணியாற்றி வந்தார். இதனால் அவரது விளையாட்டுப் பயிற்சிக்குக் குந்தகம் விளைவதைக் கண்டு அந்தப் பதவியையே அவர் உதறி யெறிந்து விட்டார்.

தமிழ்ப் பண்போடு அடக்கமே உருவாகக் காட்சியளிக்கும் திருமதி ஸி. கே. கே. பிள்ளை தோல்வியைக் கண்டு அஞ்சாதவர். நாற்பத்து நான்கு வயதாகியும் இன்னும் விளையாட்டுக் கலையில் ஆர்வமோ, ஈடுபாடோ சிறிதும் குன்றாதவர். பங்களூரில் நடந்த டேபிள் டென்னிஸ் விளையாட்டுப் போட்டியில் இந்தியாவிலும், சிங்கப்பூரிலும் முதல்தர வெற்றி வீராங்கனையாகத் திகழும் திருமதி நாலிக் வாலாவைத் தோற்கடித்ததையே தம்முடைய வாழ்வில் என்றும் மறக்க முடியாத சம்பவமாகக் கருதுகிறார் திருமதி ஸி. கே. கே. பிள்ளை.

'மங்கையராகப் பிறப்பதற்கே நல்ல மாதவம் செய்திட வேண்டுமம்மா!' என்று கவிமணி பெண்குலத்தைப் போற்றினார். அத்தகைய மங்கையர் திலகங்களில் ஒருவரான திருமதி ஸி. கே. கே. பிள்ளை விளையாட்டுக் கலையில் பெண் குலத்துக்குப் பெருமையைத் தேடித் தருகிறார். அவர் விளையாட்டு இன்னும் சிறந்தோங்க வேண்டும்.

— குண்டுமணி

# ஒரு புதிய கதர்

அம்பர் சர்க்காவின் தோற்றம் கதர் உற்பத்தி சம்பந்தமான அலுவல்களுக்கு ஒரு புதிய வேகத்தைக் கொடுத்திருக்கிறது. அதன் பயனாக, கையால் நூற்கும் அந்தக் கருவியை மேலும் சிறந்த முறையில் அபிவிருத்தி செய்யும் நோக்கத்துடன் நிபுணர்கள் ஆராய்ச்சிகளும் பரிசோதனைகளும் செய்து வருகிறார்கள். ஆனால், இம் முயற்சிகள் அம்பர் சர்க்காவுடனும், அதன் பாகங்களுடனும் மாத்திரம் நின்றுவிடக் கூடாது என்றும் கதர் உற்பத்தி சம்பந்தமான சகல துறைகளிலும் வியாபிக்க வேண்டும் என்றும் கதர், கிராமக் கைத்தொழில் கமிஷன் கருதுகிறது.

வெகு காலமாக இருந்து வரும் சாதாரண சர்க்காவுக்கு துணி உற்பத்தி சம்பந்தப்பட்ட வரையில் கிராமங்களில் இன்னும் முக்கியமான இடம் இருந்து வருகிறது. நாடெங்கும் அது குடிசைகளில் தொடர்ந்து சுழன்று வரும் என்பதில் கமிஷனுக்குப் பூரண நம்பிக்கை இருக்கிறது. சாதாரண சர்க்காவில் அபிவிருத்திகள் செய்யும் விஷயமாக ஏற்கெனவே மிகுந்த கவனம் செலுத்தப்பட்டு வந்திருக்கிறது. அதன் பயனாக புதிய மாடல்களும், நூதன தினுசுகளும், மாறுதல்களும் ஏற்பட்டு, கையால் நூற்பவர்களுக்கு முன்னிருந்ததைக் காட்டிலும் சிறந்த சர்க்காக்கள் கிடைத்திருக்கின்றன. எனவே, சாதாரண சர்க்காவில் அபிவிருத்திகள் செய்வதற்கான, அல்லது அதைப்போல் புதிய தினுசு சர்க்காவை உற்பத்தி செய்வதற்கான முயற்சிகளை, அம்பர் சர்க்காவின் உற்பத்தி பாதிப்பதாகவோ, கட்டுப் படுத்துவதாகவோ இருக்க வேண்டிய அவசியமில்லை.

கதர் அலுவல்கள் விரிந்து அபிவிருத்தி அடைவதற்கு மேற்படி முயற்சிகள் முக்கியமானவை என்றாலும், ஜீவனத்துக்காக அல்லது தங்களுக்கு வேண்டிய உடைக்காக சர்க்காவில் கையால் நூற்போருடைய மனதை வசீகரிப்பதற்குரிய மற்ற முயற்சிகளும் அவசியமானவை. அத்தகைய முயற்சிகளுக்கு ஆக்கமும் ஊக்கமும் அளிக்க, கதர், கிராமக் கைத்தொழில் கமிஷன், அம்பர் சர்க்காவிலோ, அல்லது சாதாரண சர்க்காவிலோ புதிய உபாயங்கள், அல்லது மாறுதல்கள், கருவிகளிலும் உற்பத்தி வழிகளிலும் அபிவிருத்திகள் இவற்றைக் கண்டு பிடிப்பதில் வெற்றி பெறுவோருக்கு அதிக பட்சம் ரூ. 5,000/-க்கு மேற்படாமல் ரொக்க வெகுமதி கொடுக்கத் தீர்மானித்திருக்கிறது.

# பரிசுத் திட்டம்

நீதிபதிகள் அடங்கிய ஒரு சபையினுடைய சிபார்சின் மீது பரிசுகள் வழங்கப்படும். ஒவ்வொரு அபிவிருத்தியையும், புதுமையையும் உபாயத்தையும் அவர்கள் பரிசிலனே செய்து முடிவு செய்வார்கள். எது கண்டு பிடிக்கப் பட்டாலும் அது கதரின் அடிப்படையான தத்துவத்துக்கு முரணுக இருக்கக் கூடாது. அதாவது உபாயமோ, அபிவிருத்தியோ, நூதன மாறுதலோ எதுவும் மனிதனின் உழைப்புக்கு இடமிராமல் செய்யும்படி இருக்கக்கூடாது. ஆனுல், கையாலோ அல்லது காலாலோ வேலை செய்வதற்கு வசதியாக இருக்க வேண்டும். தேக சிரமத்தைக் குறைத்து அதிக உற்பத்திக்கு வழி செய்வதாக இருக்க வேண்டும். எல்லா விஷயங்களிலும் நீதிபதிகள் குழுவின் முடிவே இறுதியானது. சம்பந்தப்பட்ட எல்லோரும் அந்த முடிவுக்குக் கட்டுப்பட வேண்டும்.

ஆராய்ச்சி முறைகள், பரிசோதனைகள், அபிவிருத்திகளின் தன்மை முதலிய விவரங்கள் வேண்டுவோர் பிரதம நிர்வாக அதிகாரி கதர் பரிசுத் திட்டம், கதர், கிராமக் கைத்தொழில் கமிஷன், தபால் பெட்டி நெ. 482, பம்பாய்-1. (Chief Executive Officer (Khadi Prize Scheme), Khadi & Village Industries Commission, Post Box No. 482, Bombay - 1) என்ற விலாசத்துக்கு விண்ணப்பம் செய்து கொள்ளலாம்.

இந்தப் பரிசுத் திட்டத்தில் கதர் அலுவல் சம்பந்தமான எல்லா அம்சங்களும், பருத்தி உற்பத்தியிலிருந்து நூல் நூற்பது வரையில் சகல முறைகளும் சேர்க்கப் பட்டிருக்கின்றன. இப்போது உபயோகத்தில் உள்ள சாதனங்களின் விளக்கம் அடங்கிய ஒரு சிறு புத்தகம் பலருக்கும் உதவியாக இருக்கும். அது வேண்டுவோர் கதர், கிராமக் கைத்தொழில் கமிஷனுக்கு ரூ. 1.00. அனுப்பிப் பெற்றுக் கொள்ளலாம். நீதிபதிகள் குழு அங்கீகாரம் செய்த எல்லா அபிவிருத்திகளும், மாறுதல்களும், நூதன கருவிகளும் முற்றிலும் கமிஷனுக்கே சொந்தமானவையாகக் கருதப்படும். அவற்றைத் தன் விருப்பப்படி எவ்விதத்திலும் உபயோகித்துக் கொள்ள கமிஷனுக்குப் பூரண உரிமை உண்டு.

DA - 924 (2)




# சாமியாரின் பாசம்

**எஸ். வைத்தியநாதன்**

"வாருங்கள், வாருங்கள்!" என்று கோவிலுக்கு வந்த குருநாதனை வரவேற்ற ஈசான குருக்கள் "வீட்டில் அவர்களுக்கு உடம்பு எப்படி இருக்கிறது? ஆஸ்பத்திரியிலிருந்து வந்தாச்சா?" என்று விசாரித்தார்.

"நேற்றுத்தான் அழைத்து வந்தேன். நன்றாகத் தேவலை. அவள் பிழைப்பாள் என்றே நான் நம்பவில்லை குருக்கள் ஐயா! அம்பாள்தான் கருணை கொண்டு காப்பாற்றிக் கொடுத்தாள்" என்றான் குருநாதன்.

"உங்களுக்கு ஒரு குறைவும் வராமல் தேவி பார்த்துக் கொள்வாள். குழந்தை சௌக்யமாக இருக்கிறதல்லவா?"

"அம்பாள் கிருபையால் அதுவும் நன்றாக இருக்கிறது ஐயா! என் மனத்தைக் குளிரப் பண்ணின தேவிக்கு, குளிரக் குளிர அபிஷேகம் செய்ய வேண்டும் என்கிற அவா எனக்கு! என்றைக்கு வைத்துக் கொள்ளலாம்?" என்று கேட்டான் குருநாதன்.

"வருகிற வெள்ளிக்கிழமை செய்து விடுவோமே! அன்று ஊரில் இருப்பீர்கள் அல்லவா?" என்றார் குருக்கள்.

"வெள்ளிக்கிழமை, முதல் தேதியல்லவா? எங்கும் 'காம்ப்' போகமாட்டேன். அன்றைய தினமே செய்து விடலாம்!" என்று கூறினான் குருநாதன்.

குருக்கள் அர்ச்சனை செய்துவிட்டுக் குங்குமப் பிரஸாதம் அளித்தார். அதைப் பெற்றுக் கொண்டு விடைபெற்றான் குருநாதன்.

குருக்களுக்கும் குருநாதனுக்கு மிடையே நடந்த சம்பாஷணை முழுவதையும் சற்றுத் தள்ளி நின்று கொண்டிருந்த 'சாமியார்' கேட்டுக் கொண்டிருந்தார். அவர் உடல் புளகித்தது. கண்கள் ஆனந்த பாஷ்பத்தைச் சொரிந்தன. "ஈச்வரி, தாயே! என் வயிற்றில் பாலை வார்த்தாயே! உனக்கு என்ன கைம்மாறு செய்ய முடியும் என்னால்!" என்று மிகுந்த உணர்ச்சியுடன் உருகியவராகத் தேவிக்கு அஞ்சலி செய்தார்.

குருநாதனின் மனைவி பிழைத்தெழுந்து வீட்டுக்கு வந்தது, 'சாமியா'ருக்கு இத்தகைய பேரானந்தத்தை அளித்தது ஏன்?

அதை அறிந்து கொள்வதற்கு நாம் அவருடைய பூர்வ சரிதத்தை ஆராய வேண்டும்.

* * *

இப்போது அவருக்குச் 'சாமியார்' என்றுதான் பெயர். அப் பொதுப் பெயரால் தான் எல்லாரும் அவரை அழைத்தார்கள். ஆனால் பதினேழு வருஷங்களுக்கு முன் அவருக்கு எல்லாரையும் போல் தனிப் பெயர் இருந்தது. குடும்பம் இருந்தது. தொழில் இருந்தது. அப்போது அவருக்குச் சிவலிங்கம் என்று பெயர்.

மங்களபுரியில் ஜவுளிக் கடை யொன்றில் வேலை பார்த்து வந்தான் சிவலிங்கம். இருபது ரூபாய் சம்பளம். அந்தக் காலத்தில் விலைவாசிகளின் நிலைமை தற்காலத்தைப் போல் பயங்கரமானதாக இல்லை. ஆகவே அந்த வருமானத்தைக் கொண்டு, சிவலிங்கம் மனைவியும், ஒரு பெண் குழந்தையும் அடங்கிய தன் சிறு குடும்பத்தைச் செட்டும் கட்டுமாகக் கௌரவமாகவே நடத்தி வந்தான். ஊரில் 'சிவலிங்கம் சாது, யோக்கியன்' என்று அவனுக்கு நல்ல பெயர். அந்தச் சாதுவை, யோக்கியனை விதி எவ்வளவு குரூரமாகப் பழி வாங்கி விட்டது தெரியுமா?

ஒரு நாள் இரவு ஒரு மணி இருக்கும். சிவலிங்கம் இரவு ஆட்டம் சினிமா பார்த்து விட்டு வீடு திரும்பிக் கொண்டிருந்தான். அவன் தெற்கு வீதியில் வந்து கொண்டிருக்கையில் கையில் மூட்டையொன்றுடன் ஒரு ஆள் வந்து கொண்டிருந்தான், ஓட்டமும் நடையுமாக. அவன் ஒரு திருடன்! கீழ வீதியில் இருந்த டாக்டர் சோணாத்ரியின் வீட்டில் சற்று முன் அவன் களவாடிய வெள்ளிப் பாத்திரங்கள், விலையுயர்ந்த புடவை, ரவிக்கை வேஷ்டி, சட்டை முதலியவை அவன் கை மூட்டையில் இருந்தன! அவன் டாக்டருடைய வீட்டை விட்டு இறங்கிப் பத்தடி தூரம் போவதற்குள் பின்னால் சற்றுத் தூரத்தில் வந்து கொண்டிருந்த ரோந்து போலீஸ்காரர்கள் 'யாரது!' என்று அதட்டினார்கள். திகில் அடைந்த திருடன் பதில் சொல்லாமல் ஓட்டம் பிடித்தான். சந்து பொந்துகள் வழியாக ஓடித் தெற்கு வீதியை அடைந்தான். போலீஸ்காரர்கள் கூச்சலிட்டுக் கொண்டே அவனைத் துரத்தினார்களாயினும் அவன் எந்தத் திசையில் ஓடினான், எந்தச் சந்துக்குள் புகுந்தான் என்பதை நிர்ணயிக்க முடியாமல் தட்டுத் தடுமாறி விட்டார்கள்.

தெற்கு வீதியில் புகுந்து அத்திருடன் இருபது அடி தூரம் செல்வதற்குள் அவன் துரதிர்ஷ்டம் எதிரே தெருக்கோடியில் இன்னொரு போலீஸ்காரர் தென்பட்டார்! ஒரு கணம் திருடன் திகைத்துவிட்டான். முன்னேறினால் ஆபத்து. பின் வாங்கி ஓடலாமென்றாலோ பழைய ரோந்துப் போலீஸ்காரர்களிடம் மாட்டிக் கொள்ள நேரிடலாம்! அவனைப் பீதி பற்றிக்கொண்டது. 'உடம்பு வேண்டாம், கையை விடுவித்துக் கொண்டால் போதும்' என்று தீர்மானித்து விட்டான் அவன். அதே சந்தர்ப்பத்தில் சிவலிங்கம் அவன் அருகே வந்து கொண்டிருந்தான். அவனைப் பார்த்த அந்தத் திருட்டுப் பயலுக்குப் பிரமாதமான யுக்தி ஒன்று உதித்தது!

அவனை நெருங்கிய திருடன், "அண்ணாச்சி! இங்கே அருகில் வாய்க்கால் ஏதாவது இருக்குங்களா?" என்று கேட்டான்.

"இருக்கு! நேராகப் போய் இடது கைப் புறம் திரும்பினால் ஒரு சந்து வரும். அதன் வழியாக ஐம்பது கஜ தூரம் போனால் வாய்க்கால் வரும்!" என்றான் சிவலிங்கம்.

திருடன், "வாய்க்கால் வரை போக வேண்டும் எனக்கு அவசரமாக! இந்த மூட்டையைக் கொஞ்சம் பிடியுங்கள். இதில் விலை உயர்ந்த துணிமணிகளும், பாத்திரங்களும் இருக்கின்றன. கையோடு எடுத்துக் கொண்டு போனால் அங்கே திருடன் யாராவது வந்து பிடுங்கிக் கொண்டு விடுவானோ என்று பயமாயிருக்கிறது!" என்று கூறிக் கொண்டே மூட்டையை நீட்டினான். அப்பாவி சிவலிங்கம் அவன்மேல் பரிதாபப்பட்டு மூட்டையைப் பெற்றுக் கொண்டான்!

திருடன் "நீங்கள் மெதுவாக வந்து கொண்டிருங்கள், அண்ணாச்சி! நான் சீக்கிரமாகப் போய்விட்டு வந்துவிடுகிறேன். நீங்கள் அச் சந்து மூலைக்கு வருவதற்குள் நான் திரும்பி விடுகிறேன்" என்று கூறிவிட்டு விரைந்து கம்பி நீட்டினான். அவன் நூறு கஜ தூரம் போவதற்குள் எதிர்ப்பட்டான் போலீஸ்காரன். அவனிடம் மெதுவாக, "அதோ ஒரு ஆள் மூட்டையுடன் வருகிறான். கேட்டால் என்னவோ உளறுகிறான். சந்தேகமாயிருக்கிறது! விசாரியுங்கள்!" என்று கூறிவிட்டுப் போயே போய் விட்டான் அந்தத் திருடன்!

அப்புறம் கதையை விவரிப்பானேன்? போலீஸ்காரன் சிவலிங்கத்தை நெருங்கினான். விசாரித்தான். யாரோ ஒருவன் மூட்டையைக் கொடுத்து விட்டு வாய்க்காலுக்குப் போயிருக்கிறான் என்று சிவலிங்கம் கூறிய 'கதை'யை நம்பாமல் அவனை நாலு அறை வைத்தான். மூட்டையைப் பிரித்துப் பரிசோதித்தான். இதற்குள் ரோந்துப் போலீஸ்காரர்கள் இருவரும் அங்கு வந்தார்கள். தாங்கள் துரத்தி வந்த ஆள் அவன்தான் என்று உறுதியாகக் கூறினார்கள்! 'எனக்கொன்றும் தெரியாதே!' என்று சிவலிங்கம் கதறிக் கெஞ்சிக் கண்ணீர் பெருக்கினான்.

வழக்கு ஜோடிக்கப்பட்டு விசாரணை நடந்தது. சோணாத்ரியின் வீட்டில் திருடிவிட்டுக் கையும் களவுமாக அகப்பட்டுக் கொண்ட சிவலிங்கத்துக்கு ஐந்து வருஷம் சிறைத் தண்டனை கிடைத்தது! அவனைத்



திரத்துடன் பிடித்த மூன்று போலீஸ்காரர்களுக்கும் 'ரெட்-மார்க்' கிடைத்தது!

பரம யோக்கியனை, உத்தமனை, தன் கணவனுக்கு ஏற்பட்டு விட்ட இந்த துர்க்கதியைக் குறித்து முட்டி மோதிக் கொண்டு புலம்பினாள் சிவலிங்கத்தின் மனைவி மங்கையர்க்கரசி. தானும், நாலு வயதே ஆகிய குழந்தை கோமதியும் எப்படி ஜீவனம் செய்வது என்று புரியாமல் தத்தளித்தாள். கடைசியில் தன்னைத்தானே தேற்றிக் கொண்டு ஊரை விட்டுக் கிளம்பி விட்டாள் குழந்தையுடன். எங்கேயாவது வேலை செய்து குழந்தையைக் காப்பாற்றி விடுவது என்ற உறுதியுடன் அவள் புறப்பட்டு விட்டாள்.

கோயமுத்தூருக்குப் போய்ச் சேர்ந்த மங்கையர்க்கரசி யார் யாரையோ கெஞ்சிக் கூத்தாடிப் பஞ்சாலை யொன்றில் கூலியாக அமர்ந்தாள்.

ஆயினும் விதி அக் குடும்பத்தைச் சோதனை செய்வதை நிறுத்தவில்லை! ஒரு வருஷ காலம் அமைதியாகக் காலம் கழித்துக் கொண்டிருப்பதற்குள் அந்தப் பாழும் விதி மீண்டும் மங்கையர்க்கரசியின் வாழ்வில் குறுக்கிட்டுக்



கோரமாக விளையாடி விட்டது. வைசூரி என்ற வியாஜத்தில் அவளுடைய உயிரைப் பறித்துக் கொண்டு போய் விட்டது!

குழந்தை கோமதி அநாதையாக நின்றாள். யாரோ ஒரு நல்ல மனிதர் அவள் மீது அனுதாபம் கொண்டு, சிபாரிசு பிடித்து அநாதை ஆசிரமம் ஒன்றில் அவளைச் சேர்த்தார். அவர் ஆலையைச் சேர்ந்த ஒரு சிறு உத்தியோகஸ்தர்.

அனாதை ஆசிரமத்தில் திக்கற்ற குழந்தைகளுக்கு உணவு அளித்துக் கல்வியறிவையும் ஊட்டினார்கள். சிறுமி கோமதி நன்றாகப் படித்து முன்னேறினாள். எஸ்.எஸ்.எல்.ஸி. தேறினாள் பதினாறுவது வயதில். ஆசிரியைப் பயிற்சி பெற்றாள். அருகிலிருந்த சிற்றூர் ஒன்றில் ஆரம்பப் பள்ளி யொன்றில் ஆசிரியையாக உத்தியோகம் கிடைத்தது.

இரண்டு வருஷங்கள் விரைந்தோடின.

கோமதியின் பள்ளிக்கூடத்தில் அன்று ஆண்டு விழாக் கொண்டாட்டம். தலைமை வகிப்பதற்காக வந்த டெபுடி கலெக்டர் குருநாதன் கோமதியைக் கண்டான் அங்கே. அவளது இணையற்ற அழகும், அடக்கமும் அவனை ஈர்த்தன. மறுநாள் அவன் ஜாகையை விசாரித்துக் கொண்டு சென்றான். தன் உள்ளக் கிடக்கையை அவன் வெளியிட்டான்.

கோமதி பிரமித்தாள்; எல்லையற்ற மகிழ்ச்சியடைந்தாள். ஆனால் அவன் எங்கே, அவள் எங்கே? "இது கிடைத்தற்கரிய பேரதிர்ஷ்டந்தான் எனக்கு. ஆயினும் தங்கள் அந்தஸ்துக்குத் துளியும் பொருத்தமற்றவள் நான். அநாதை ஆசிரமத்தில் வளர்ந்தவள்" என்றாள் கோமதி அவனிடம்.

"உன்னிடம் அழகு இருக்கிறது, படிப்பு இருக்கிறது, பண்பு இருக்கிறது! அவை போதும் எனக்கு. மற்றப்படி நீ யாரா யிருந்தாலும் எனக்குக் கவலையில்லை" என்றான் குருநாதன்.

அடுத்த மாதமே கோமதிக்கும் குருநாதனுக்கும் கல்யாணம் நடைபெற்றது. கோமதி ஆசிரியை உத்தியோகத்தை ராஜினாமா செய்து விட்டுக் குருநாதனின் இல்லத் தலைவியாகப் பதவி ஏற்றாள். குருநாதன் தம் அருமை மனைவியை மிகவும் நேசித்துக் கண்ணைப் போற்றி வந்தான்.

ஐந்து வருஷச் சிறைவாசம் முடிந்து வந்த சிவலிங்கம் நேரே தன் ஊரை நோக்கி ஓடினான். மனைவியையும் மகளையும் ஐந்து வருஷங்களுக்குப் பிறகு பார்க்கப் போகிறோம் என்று ஆவலுடன் ஓடிவந்த அவனுக்கு அவர்கள் அங்கு இல்லாதது பேரிடியாக இருந்தது. ஊரார் யாரும் அவர்களைப் பற்றி அவனுக்குச் சரியான தகவல் கொடுக்க முடியவில்லை. பலர் 'ஜெயிலுக்குப் போய் வந்த திருட்டுப் பயல்' என்று அவனை வெறுப்புடன் நடத்தினார்கள். அவனுக்குப் பதில் கூடச் சொல்லாமல் விரட்டி அடித்தார்கள்.

சிவலிங்கம் மனமுடைந்து போனான். மனைவியையும், பெண்ணையும் தேடிக்கொண்டு ஊர் ஊராகத் திரிந்தான்.

இறுதியில் ஒருநாள் அவன் காமாக்ஷிபுரத்துக்கு வந்தான். பசியினாலும், களைப்பாலும், பலஹீனத்தாலும் கோயில் மண்டபத்தில் மூர்ச்சையாக விழுந்து விட்டான்.

கோயில் உச்சிக்கால பூஜையை முடித்துக் கொண்டு அப்போதுதான் வெளியே வந்த ஈசான குருக்கள் அவன்மீது இரக்கம்கொண்டு மூர்ச்சை தெளிவித்துப் பக்கத்திலிருந்த தன் வீட்டுக்கு இட்டுச்சென்று அவனுக்கு ஆகாரம் அளித்தார். அவன் "சாமி, நீங்கள் தெய்வம்! என் பசியைப் போக்கினீர்கள். பிச்சைக்காரனிலும் கேவலமானவனாகிய என்னிடம் வேறு யார் இப்படிக் கருணை காட்டுவார்கள்!" என்று நன்றிக் கண்ணீர் பெருகிய வண்ணம் அவர் காலில் விழுந்தான்.

"அப்பா, உன்னைப் பார்த்தால் பரம்பரைப் பரதேசியாகத் தெரியவில்லை. வாழ்க்கையில் ரொம்பத் துயரம் அனுபவித்திருக்கிறாய் என்று தெரிகிறது. உன்மேல் எனக்கு இனந் தெரியாத பரிவும், அனுதாபமும் ஏற்படுகின்றன. உனக்கு உடல் தளர்ந்து விட்டது! கோயிலில் ஏதாவது உன்னால் முடிந்த சில்லறை வேலை செய்து கொண்டிரு. தினமும் இரண்டு பட்டை சாதம் கொடுக்கும்படி நான் ஏற்பாடு செய்கிறேன்" என்றார்.

தெய்வத்தின் சன்னிதியிலேயே தன் சொச்ச வாழ்நாளைக் கழித்து விடுவது கிடைத்தற்கரிய பாக்கியமாகப்பட்டது அவனுக்கு. எனவே பெருமகிழ்ச்சியுடன் அந்த ஏற்பாட்டுக்கு இணங்கினான்.

கோயில் நந்தவனத்திலிருந்து பூக்கொய்து கொடுப்பது, கோயிலைப் பெருக்கிச் சுத்தம் செய்வது போன்ற தொண்டுகளைச் செய்து வந்தான் சிவலிங்கம்.

இதற்கிடையேதான் குருநாதன் அவ்வூருக்கு மாற்றலாகி வந்தான். தெய்வபக்தி நிரம்பிய அவன் அவ்வூர் அம்பாள் சிறந்த வரப்பிரஸாதி என்று கேள்வியுற்று அம்பாளைத் தரிசிக்கக் கோயிலுக்கு வந்தான். அவன் வந்த மறுநாளே, அவனுடன் கோமதியும் வந்தாள்.

குருநாதனின் குமாஸ்தா 'நம்ப ஊருக்கு மாற்றலாகி வந்திருக்கும் டெபுடி கலெக்டர்' என்று அவனைக் குருக்களுக்கு அறிமுகம் செய்து வைத்தான். குருக்கள் குருநாதனை மிகுந்த மரியாதையுடன் வரவேற்றுத் தரிசனம் செய்து வைத்தார்.

அருகில் நின்று கொண்டிருந்த 'சாமியார்' சிவலிங்கம் - அகஸ்மாத்தாகக் கோமதியைப் பார்த்தார். பிரமித்தார். இமைமறியாத மெய் சிலிர்ப்பு உண்டாகியது அவருக்கு! 'இவள் மங்கையர்க்கரசி போல் அல்லவா இருக்கிறாள்!' ஆம், அவளேதான். சந்தேகமில்லை. ஆனால்....ஆனால்....அவளுக்கு இப்போது கிட்டத்தட்ட ஐம்பது வயசாகி இருக்க வேண்டுமே! இருபது வயது இளமங்கையாக அல்லவோ இருக்கிறாள் இவள்!' கோமதியை அவளுக்கு நாலு வயதாக இருக்கும்போது பார்த்ததுதான் அவர். எனவே அவளுடைய இருபதாவது வயதில் யௌவன ஸ்திரீயாக மாறியிருந்த — அவளை அவரால் அடையாளம் கண்டு கொள்ள முடியவில்லை சட்டென்று. அசைப்பில் தாயைப் போலவே உருவம் கொண்டிருந்த அவளை மங்கையர்க்கரசி என்றே எண்ணித் தடுமாறினார் அவர்.

அர்ச்சனை முடிந்தது. "போகலாமா கோமதி?" என்று கேட்டவாறு குருநாதன் கிளம்பினான்.

"கோமதி!" — சிவலிங்கத்தின் மூளையில் ஒரு மின்னல் பளிச்சிட்டது. விஷயம் விளங்கி விட்டது அவருக்கு! 'குழந்தாய் கோமதி! என்னைத் தெரியவில்லையா! இந்தப் பாவி தான் உன் அப்பன்!' என்று கதறிக்கொண்டு ஓடி அவளை அணைத்தவாறு அவள் தலையை வருடிக் கொடுக்க வேண்டும் என்று அவர் உள்ளம் துடித்தது.

'அவளுடைய கணவனோ டெபுடி கலெக்டர். எவ்வளவு உயர்ந்த பதவி அது! அத்தகைய அந்தஸ்தில் இருப்பவன், பிச்சைக்காரனிலும் கேவலமான ஒருவன் தான் தன் மாமனார் என்று அறிய நேர்ந்தால் அவன் கௌரவம் என்னாகும்! அவன் உள்ளம் என்ன பாடுபடும்? அதன் காரணமாக என் அருமைக் கோமதியின்மேல் அவனுக்கு வெறுப்புண்டாகி அவளைக் கொடுமைப்படுத்தினால்?.. அவன் அவ்வளவு பெரிய அதிகாரி! இப்போது நான் என்னை வெளிப்படுத்திக் கொண்டாலே அவனுக்கு அருவருப்பும் அவமானமும் உண்டாகும்! நான் இப்படி என்னை அறிமுகப்படுத்தாமல் இருப்பதுதான் கோமதியின் நலனுக்குகந்தது'—சிவலிங்கம் இவ்வாறு நிர்மாணித்துத் தம்முடைய ஆவலை உடனே கட்டுப்படுத்திக் கொண்டு விட்டார்.

குருநாதனின் பியூன் ஒருவனை ஜாடையாக விசாரித்துக் 'கோமதி தாய் தந்தை அற்றவள்' என்பதை அறிந்து கொண்ட சிவலிங்கம் மங்கையர்க்கரசி இறந்துவிட்ட செய்தியைத் தெரிந்து கொண்டார். 'பாவம், மங்கையர்க்கரசி! என்னால்தான் அவள் ஏங்கிச் செத்தாள்' என்று துக்கமடைந்தார். என்றாலும் மகள் உயிரோடிருக்கிறாள், உன்னத நிலையிலிருக்கிறாள் என்பதை யெண்ணி அவர் ஆறுதல் அடைந்து விட்டார்.

திடீரென்று கொஞ்ச நாட்களாகக் கோமதி கோயிலுக்கு வருவது நின்றுவிட்டது. குருநாதன் மட்டும் அவ்வப்போது வந்து கொண்டிருந்தான். சிவலிங்கம் ஏக்கமடைந்தார். "டெபுடி கலெக்டர் ஐயா வீட்டு அம்மாளைக் கொஞ்ச நாட்களாக ஏன் சாமி காணோம்?" என்று குருக்களை விசாரித்தார்.

"அந்த அம்மாவுக்குக் குழந்தை பிறக்கப் போகிறது சாமியாரே! இதுதான் மாசம்!" என்று தெரிவித்தார் குருக்கள்.

தமக்கு ஒரு பேரக் குழந்தை பிறக்கப் போகிறது!-பேரானந்தமடைந்து, "தாயே, ஈசுவரி! என் பெண்ணுக்குப் பிள்ளைக் குழந்தையாகப் பிறக்கும்படியும், அவள் நல்லபடியாகப் பெற்றுப் பிழைக்கவும் அருள் பாலி!"

என்று இடை விடாது அம்பாளைப் பிரார்த்தனை செய்தார் சிவலிங்கம்.

பதினைந்து நாட்கள் கழித்து ஈசான குருக்கள் அவர் அடிவயிற்றில் நெருப்பை வாரிக் கொட்டி விட்டார், தாம் தெரிவித்த செய்தி மூலம். "சாமியாரே! டெபுடி கலெக்டர் சம்சாரம் பிரசவிக்க முடியாமல் ரொம்பக் கஷ்டப்பட்டாளாம்! ஆஸ்பத்திரியில் கொண்டு போய்ச் சேர்த்தார்களாம். ஆயுதம் போட்டுக் குழந்தையை வெளிப்படுத்தினார்களாம். அந்த அம்மாளின் நிலை கவலைக்கிடமாயிருக்கிறதாம்! பாவம்! நல்ல மனிதர்கள்! அம்பாள்தான் ஒன்றும் இசைகேடாக நேராமல் காப்பாற்றணும்!" என்றார் குருக்கள்!

"ஐயோ சாமி! அந்த அம்மா பிழைத்து விடுவாளோ?" என்று தேம்பித் தேம்பி அழ ஆரம்பித்து விட்டார் சிவலிங்கம்.

விஷயமறியாத குருக்கள், யாரோ ஒரு ஒரு சம்பந்தமில்லாத அன்னியப் பெண்ணுக்காக அவர் அநுதாபங் கொண்டு அழுவதைப் பார்த்து 'இவனுக்குத்தான் எத்தனை நல்ல மனசு!' என்று வியந்தார்.

தினந்தோறும் அவள் உடல் நிலை எப்படியிருக்கிறது என்று குருக்களை விசாரித்துக் கொண்டிருந்தார். நாலைந்து நாட்கள் கழித்து ஒரு நாள் மாலை, இருப்புக் கொள்ளாமல் ஆஸ்பத்திரிக்கே போய் விட்டார் மகளைப் பார்க்க. "டெபுடி கலெக்டர் சம்சாரம் இங்கே இருக்கிறார்களே, அது எந்த வார்டு?" என்று வாயிற் காப்போனை விசாரித்தார்.

அவன் பெரிதாக நகைத்தான் சிவலிங்கத்தின் தோற்றத்தைக் கண்டு. "நீ டெபுடி கலெக்டரின் மாமனாரோ! பெண்ணைப் பார்க்க வந்தாயோ! போடா, போ!" என்று உள்ளே விட மறுத்து விரட்டி விட்டான். சிவலிங்கம் உண்மையில் அவர் மாமனார்தான் என்பது காவற்காரனுக்குத் தெரியுமா, பாவம்!

ஏக்கமும் கவலையும் பிரார்த்தனையுமாகக் காலத்தைக் கழித்துக் கொண்டிருந்த சிவலிங்கத்துக்குக் கோமதி சௌக்கியமடைந்து வீட்டுக்கு வந்து விட்டாள் என்ற தகவல் கிடைத்தபோது அவர் பெருமகிழ்ச்சி கொண்டதில் வியப்பில்லையல்லவா?

* * *

மறு நாள் சிவலிங்கத்தின் மனத்தில் பெருத்த ஆவல் ஒன்று எழுந்து விட்டது. யமபுரியின் வாசற்படி வரை போய்த் தப்பி வந்து விட்ட தம் மகளைப் பார்த்து விட்டு வந்து விடுவது என்று தீர்மானித்தார்.

மத்தியானம் ஒரு மணிக்கு அவ்வீட்டை நோக்கிக் கிளம்பி விட்டார் அவர். அவர் அங்கு போய்ச் சேர்ந்த நேரம் கோமதி உள்ளே தூங்கிக் கொண்டிருந்தாள். தெருவில் காவலிருந்த பியூனும் அங்கில்லை. 'இதுவும் நல்ல காலந்தான்' என்று மகிழ்ச்சியுடன் தயங்காமல் வீட்டினுள் நுழைந்தார் சிவலிங்கம். வாசற்படியின் அருகில் வெள்ளித் தட்டு ஒன்று கிடப்பதைக் கண்டு வியப்பும் திகைப்பும் அடைந்தார் அவர்.

அது குருநாதன் சாப்பிட உபயோகிக்கும் வெள்ளித் தட்டு. சமையலறையில் இருந்த அதை அனுமதியின்றி அவ்வறையில் நுழைந்த குரங்கு ஒன்று தூக்கிக் கொண்டு வந்து விட்டது! கோமதி நல்ல நித்திரையில் இருந்தாளாகையால் அவளுக்கு இவ் விஷயம் தெரியாது. சமையற்காரனோ தன் வீட்டுக்குப் போயிருந்தான்.

'வெள்ளித் தட்டு இப்படிக் கிடக்கிறதே! தெருவில் போகிறவன் யாராவது அடித்துக் கொண்டு போய்விடப் போகிறானே! இதை உள்ளே கொண்டு கொடுத்து விடுவோம்!' என்று எண்ணி அதைக் கையிலே எடுத்தார் சாமியார் சிவலிங்கம்.

"எங்கே ஐயா வந்தே!" என்று அதிகாரக் குரலில் வினவினான் வெளியே போய்த் திரும்பி வந்த பியூன். அவர் கையிலிருந்த வெள்ளித் தட்டைப் பார்த்து விட்டான். "இது ஏதுடா!" என்ற வண்ணம் பாய்ந்து அவன் கையைப் பற்றிக் கொண்டான் கெட்டியாக.

"இங்கே கிடந்ததுங்க! உள்ளே கொண்டு போய்க் கொடுக்கலாமென்று எடுத்தேன்!" என்றார் சாமியார். யார் நம்புவார்கள்!

"வெள்ளித் தட்டு, கால் மூளைச்சு இங்கே கிடந்ததா! கிடக்கும், கிடக்கும்" என்று அவரைத் தப்புதிப்பு என்று அறைந்தான் பியூன்!

அப்புறம் என்ன? சிவலிங்கம் ரிமாண்டில் இருந்தார். கேஸ் நடந்தது. அவருக்கு அநுகூலமாக ஒரு சாட்சியமும் இல்லை. எல்லாம் அவருக்கு விரோதமாகவேதான் இருந்தன.

மறுபடியும் சிறைவாசமா! முதல் சிறைவாசத்தின் போது தாம் அனுபவித்த துன்பமெல்லாம் சிவலிங்கத்துக்கு ஞாபகம் வரவும் திகில் கொண்டு நடுங்கினார். இன்னொரு முறை அந்த நரக வாழ்க்கையை எப்படிச் சகிப்பது என்று மானசீகமாகக் கதறினார்! ஆனால் எப்படித் தப்பிக்க முடியும்? தப்புவதற்கு ஒரு வழிதான் இருந்தது. "கோமதி என் பெண்! அவள் பிழைத்து வந்ததைக் கேள்வியுற்று அவளைப் பார்க்க வேண்டும் என்ற ஆதங்கத்துடன் அங்கே போனேன். மகள் வீட்டில் திருட நினைப்பேனா? திருடி என்ன ஆகவேண்டும் எனக்கு?" என்று உண்மையைச் சொல்லி விட்டால் ஒருகால் அவர் தப்பித்துக் கொண்டாலும் கொள்ளலாம். ஆனால் கோமதியின் கதி? 'இந்த நாடோடிப் பிச்சைக்காரனின் மகளா கோமதி?' என்று குருநாதன் வெறுப் படைந்து விட்டால் அவளுடைய வாழ்வே சீர்குலைந்து விடாதா?

'நான் எவ்வளவு கொடுமை வேணுமானாலும் அனுபவிப்பேன்! என் குழந்தையைக் கண் கலங்க விட மாட்டேன்' என்று தீர்மானித்துக் கொண்டார் சிவலிங்கம்.

கடைசி வரையில் உண்மையை வெளியிடாமல் 'டெபுடி கலெக்டர் வீட்டு அம்மாவைப் பார்க்கப் போனதாக'ப் பழைய பல்லவியையே பாடினார்.

சாமியாரின் கூற்றை நம்ப மறுத்த மாஜிஸ்திரேட் அவர் திருடர்தான் என்று நிர்த்தாரணம் செய்து இரண்டு வருஷச் சிறைத் தண்டனை விதித்தார் அவருக்கு!

தாம் செய்யாத குற்றத்துக்காக அந்தப் பரிதாபத்துக்குரியவர் முதல் தடவை சிறைக்குப் போகும்போது மிக்க வேதனையும் துக்கமும் கொண்டிருந்தார். ஆனால் இத் தடவையோ மகிழ்ச்சியோடு தண்டனையை அவர் ஏற்றுக் கொண்டார்.




சென்னை நகருக்கு அடுத்துள்ள கீழ்ப்பாக்கத்திலே இப்பொழுது பல அதிசயங்கள் நடைபெற்று வருகின்றன.

சென்னை நகருக்குக் குடி தண்ணீர் அளிக்கும் அலுவலகத்தைச் சுற்றியுள்ள பிரதேசங்களில் சென்ற இரண்டு ஆண்டுகளாகச் சுமார் இரு நூற்று ஐம்பதுபேர்கள் வேலை செய்து கொண்டிருக்கிறார்கள். எண்ணற்ற இயந்திரங்கள் வேலை செய்து கொண்டிருக்கின்றன.

கீழ்ப்பாக்கம் குடிதண்ணீர் அளிக்கும் அலுவலகத்துக்கு அப்பால் நெருக்கமாக இருந்த தென்னந் தோப்புகள் மறைந்து விட்டன. குடிசைகள் காலியாகி விட்டன. அந்த இடங்களில் குடிதண்ணீர் வசதியைப் பெருக்குவதற்கான வேலைகள் வேகமாக நடைபெற்று வருகின்றன. 'ரெட்ஹில்ஸ்' ஏரியிலிருந்து வரும் தண்ணீரை வடிகட்டிச் சுத்தம் செய்வதற்கான இயந்திரங்களைப் பொருத்துவதற்கு வேண்டிய கட்டடங்கள் எழும்பியிருக்கின்றன. தண்ணீரைத் தேக்கித் தெளிவு செய்வதற்கான மிகப் பெரிய தொட்டி கட்டப்பட்டிருக்கிறது. இன்னும் ஒருதொட்டி கட்டுவதற்காகப் பூமியில் நூறு அடி சுற்றளவுக்கு இருபது அடி ஆழத்துக்கு மிகப் பெரிய பள்ளம் தோண்டப்பட்டு வருகிறது.

தண்ணீர் வடிகட்டும் முக்கியமான இயந்திரப் பகுதிகள் பொருத்த வேண்டிய கட்டடங்கள் எல்லாம் முடியும் தறுவாயிலிருக்கின்றன. வடிகட்டிச் சுத்தம் செய்த தண்ணீரைப் பூமிக்கு அடியில் தேக்கி வைக்கும் மிகப் பெரிய பாதாள ஏரிகள் இரண்டு கட்டப் பட்டிருக்கின்றன.

இந்த வேலைகள் எல்லாம் பூர்த்தியாகி விட்டால் சென்னை நகரில் உள்ள மக்களுக்கு இப்பொழுது கிடைப்பதைவிட இன்னும் கொஞ்சம் குடி தண்ணீர் அதிகம் கிடைக்கலாம் என்று எதிர்பார்க்கப்படுகிறது.

*** *** ***

வளர்ந்து வரும் சென்னை நகருக்கு இப்போது ஏற்பட்டிருக்கும் நெருக்கடி என்ன என்பது எல்லாருக்கும் தெரிந்த விஷயம். குடி தண்ணீர் பற்றுக்குறைதான். இந்தக் குடி தண்ணீர் பற்றுக்குறையைப் போக்க முடியாதா? பேஷாகப் போக்கி விடலாம். 'ரெட் ஹில்ஸ்' ஏரியில் சென்னை நகருக்கு வேண்டிய அளவு தண்ணீர் இருக்கிறது. குடிப்பதற்கு வசதியாக மாற்றிச் சுத்தம் செய்யும் இடமான கீழ்ப்பாக்கத்துக்கு 'ரெட் ஹில்ஸ்' ஏரியிலிருந்து அந்தத் தண்ணீரைக் கொண்டு வரக்கூடிய இரண்டு பெரிய பாதாளக் கால்வாய்களும் இருக்கின்றன. ஆனால் அந்தத் தண்ணீரை வடிகட்டுவதற்குப் போதிய இயந்திர வசதிகள்தான் கீழ்ப்பாக்கத்தில் இல்லை. இந்த வசதிகளைப் பெருக்குவதற்கு ஏற்பாடு செய்யும் வரையில் சென்னை நகர மக்கள் பொறுமையுடன் இருக்க வேண்டியதுதான். எதைப் பொறுத்தாலும் பொறுத்துக் கொள்ளலாம். தண்ணீர் இல்லாத குறையைப் பொறுத்துக் கொள்ள முடியுமா? உண்பது உடுத்துவது ஒருபுறம் இருந்தாலும் தாராளமாகக் குளிக்க வேண்டாமா? தாகம் தீரவாவது தண்ணீர் அருந்த வேண்டாமா?

தற்சமயம் சென்னை நகருக்குப் போதுமான குடி தண்ணீர் அளிக்கும் துரித இயந்திர வடிகட்டிகள் இல்லை. அதனால்தான் தண்ணீர் பற்றுக்குறையாக இருக்கிறது. அந்தப் பற்றுக் குறையை இட்டு நிரப்புவதற்கு வழியில்லாமல் பெரும்பான்மையான சென்னை நகர மக்கள் இருந்து வருகிறார்கள். இதனால் அவர்கள் சுகாதாரம் கெட்டுப் போய் விடுகிறது. பலவிதமான நோய்களுக்கு உள்ளாகி அவதிப்பட்டு வருகிறார்கள்.

சென்னை நகர மக்களுக்குக் குடி தண்ணீர் தாராளமாக வழங்க, அதற்கு வேண்டிய துரித இயந்திர வடிகட்டிகள் வாங்க வேண்டும். அந்த இயந்திரங்கள் எல்லாம் மேல் நாட்டிலிருந்து வரவழைக்க வேண்டும். அதற்குப் பணம் வேண்டும். அந்தப் பணத்தைப் பெறுவதற்குச் சென்னை நகரசபை சென்னை சர்க்காரை அணுக வேண்டும். சென்னை சர்க்கார் நகரசபையின் வேண்டுகோளுக்குச் செவி சாய்த்து, சென்னை நகர மக்களுக்குக் குடி தண்ணீர் அவசியம் என்பதைப் புரிந்து கொள்ள வேண்டும். அப்படிப் புரிந்து கொண்டு மத்திய சர்க்காரிடம் நிதி வாங்கிச் சென்னை நகரசபைக்குத் தரவேண்டும். இவ்விதம் கஷ்டப்பட்டுப் பெற்ற பணத்திலிருந்துதான் இப்பொழுது சென்னை கீழ்ப்பாக்கத்தில் குடிதண்ணீர் அபிவிருத்திக்கான துரித இயந்திர வடிகட்டிகள் அமைக்கும் வேலைகள் வேகமாக நடைபெற்று வருகின்றன.

இந்த வேலை நடைபெறும் இடத்தைப் பார்க்க வேண்டும் என்ற ஆவல் எனக்குச் சென்ற சில மாதங்களாகவே இருந்து வந்தது. ஆனால் அதற்குச் சரியான சந்தர்ப்பம்தான்




ஏற்படவில்லை. சென்ற வாரம் அந்தச் சந்தர்ப்பத்தைச் சென்னை நகரசபை பிரதம கணித அதிகாரி திரு சத்தியமூர்த்தி ஏற்படுத்திக் கொடுத்தார். அவருடன் கீழ்ப்பாக்கத்தில் துரித இயந்திர வடிகட்டிகள் அமைக்கும் வேலைகள் நடக்கும் இடத்துக்குச் சென்றேன்.

அங்கு கட்டப்பட்டிருக்கும் பிரும்மாண்டமான கட்டடங்களையும், பெரிய தண்ணீர்த் தொட்டியையும், பாதாள ஏரிகளையும் பல விதமான இயந்திரச் சாமான்களையும் பார்த்ததுமே, குடிதண்ணீர்ப் பஞ்சம் தீர்ந்து விட்டது போலிருந்தது எனக்கு. மிகுந்த ஆவலுடன் "எப்பொழுது இந்தக் கட்டடங்கள் முடியும்? சென்னை நகரக் குடி தண்ணீர்ப் பஞ்சம் எப்பொழுதுதீரும்" என்றுகேட்டேன்.

"இன்னும் இரண்டு மாதங்களுக்குள் முடிந்து விடும். ஆனால் குடிதண்ணீர்ப் பஞ்சம் தீர்ந்துவிடும் என்று சொல்ல முடியாது" என்றார் எக்ஸிகியூட்டிவ் இன்ஜினீயர் திரு பி. வரதராஜுலு. இந்தப் பதிலைக்கேட்டதும் எனக்குத் தூக்கிவாரிப் போட்டது. "இவ்வளவு பெரிய கட்டடங்களும் தண்ணீர்த் தொட்டிகளும் பாதாள ஏரிகளும் கட்டியும் கூடச் சென்னை நகரத்தின் தண்ணீர்ப் பஞ்சம் தீராதா?" என்று கேட்டேன்.

"இவை மூலம் நமக்கு மேலும் ஒரு கோடி காலன் தண்ணீர்தானே கிடைக்கும்? அது மட்டும் போதுமா?" என்றார்.

"ஏன் போதாது?"

"இந்த விவரங்களைத் தெரிந்து கொள்ள நீங்கள் இந்தத் தண்ணீர் வடிகட்டும் அலுவலகத்தின் வரலாற்றைத் தெரிந்து கொள்ள வேண்டும்" என்று கூறி அதைப்பற்றி விவரிக்க ஆரம்பித்து விட்டார். அவர் கூறியவற்றைச் சொல்லுகிறேன்.

சென்னை கீழ்ப்பாக்கத்தில் இருக்கும் தண்ணீர் வடிகட்டி வழங்கும் அலுவலகம் 1914-ம் ஆண்டு தோன்றியது. அப்பொழுது இருநூறு அடி அகலமும் நூறு அடி நீளமும் கொண்ட பதினொன்கு மணல் வடிகட்டிகள் இருந்தன. இது போதாமல் 1923-ம் ஆண்டு இருநூறு அடி நீளமும் நூற்றுமுப்பது அடி அகலமும் கொண்ட மூன்று மணல் வடிகட்டிகள் புதிதாகக் கட்டினார்கள். இந்த மணல் வடிகட்டிகள் கட்டிய காலத்திலேயே அதில் இருக்கும் குறையைக் கண்டு பிடித்தார்கள். அதாவது 'ரெட்ஹில்ஸ்' ஏரியிலிருந்து பல்வேறு பருவ காலங்களில் வரும் தண்ணீர் பல்வேறு தன்மையுடன் இருந்தது. அத்துடன் இந்தத் தண்ணீரில் கண்ணுக்குத் தெரியாத பாசிகளும் இருக்கின்றன. அதனால் இந்த மணல் வடிகட்டிகள் மூலம் அந்தத் தண்ணீரைச் சுத்தமாக வடிகட்ட முடியாது என்ற உண்மையைத் தெரிந்து கொண்டனர். மணல் வடிகட்டியில் நீரகக் கந்தகம் என்ற பொருள் உற்பத்தியாகித் தண்ணீர் நாற்றமெடுப்பதையும் புரிந்துகொண்டனர். இந்தக் குறையைப் போக்க ரெட்ஹில்ஸ் ஏரியில் இருந்து வரும் தண்ணீரில் ஆலம் என்ற மருந்துப் பொருளைக் கலந்து மணல் வடிகட்டிகளில் வடிகட்டாமல் துரித இயந்திர வடிகட்டும் முறையில் வடி கட்டினால்தான் தண்ணீர் சுத்தமாகவும் நாற்றமில்லாமலும் இருக்கும் என்ற உண்மையைப் பலநிபுணர்கள் கொண்ட குழு ஆராய்ந்து வெளியிட்டது. ஆயிரத்துத் தொள்ளாயிரத்து முப்பத்து எட்டாம் ஆண்டிலேயே குடிதண்ணீரைப் பற்றிய இந்த உண்மையைச் சென்னை நகரசபையார் தெளிவாகத் தெரிந்து கொண்டு விட்டனர்.

இந்த உண்மை தெரிந்ததும் நாள் ஒன்றுக்கு மூன்றரைக் கோடி காலன் தண்ணீர் தரும் துரித இயந்திர வடிகட்டிகளை நிறுவுவதற்குப் பதினேழரை லட்சம் ரூபாய் செலவில் ஒரு திட்டம் தயாரித்தது சென்னை நகர சபை. ஆனால் அப்பொழுது இரண்டாவது உலக மகாயுத்தம் ஆரம்பித்து விட்டதால் குடி தண்ணீர் வடிகட்டிகள் கட்டுவதற்குத் தகுந்த சமயம் அல்ல இது என்று அப்பொழு இருந்த சென்னை அரசாங்கம் அந்தத் திட்டத்தை ஏற்க மறுத்து விட்டது.

இரண்டாவது மகாயுத்தம் முடிந்தவுடன் 1945-ம் ஆண்டிலேயே கீழ்ப்பாக்கத்தில் துரித இயந்திர வடிகட்டிகள் அமைப்பதற்கான ஏற்பாடுகளைத் தொடங்கினர். அதற்கு

---

கீழ்ப்பாக்கத்தில் உள்ள நீர் வடிகட்டும் அலுவலகத்தையும், மணல் வடிகட்டிகளையும், துரித இயந்திர வடிகட்டிகளுக்கான புதிய சேமிப்புத் தொட்டி கட்டடத்தையும், நூறு அடி சுற்றளவும் இருபது அடி ஆழமும் கொண்ட பிரும்மாண்டமான தெளிவுத் தொட்டி அமைப்பதற்கு வேலை நடப்பதையும், துரித இயந்திர வடிகட்டிகள் அமைக்கும் பிரதான கட்டடத்தின் ஒரு பகுதியையும் மேலே உள்ள படங்களில் காணலாம்.

வசதியாக ரெட்ஹில்ஸ் ஏரியிலிருந்து கீழ்ப்பாக்கம் வரையில் அதிக தண்ணீர் வருவதற்கு இரண்டாவது தண்ணீர்க் குழாய் அமைத்தார்கள். 1949-ம் ஆண்டு இந்தத் தண்ணீர்க் குழாய் அமைக்கும் வேலை பூர்த்தியானது. இதன்மூலம் நாள் ஒன்றுக்கு ஐந்தரை கோடி காலன் தண்ணீர், அதாவது முன்னைவிட மூன்றேகால் கோடி காலன் தண்ணீர் அதிகமாகக் கீழ்ப்பாக்கம் நீர் வடிகட்டி நிலையத்துக்கு வரும் வசதி ஏற்பட்டது.

இந்த வேலை முடிந்தவுடனேயே நாள் ஒன்றுக்கு நாலு கோடி காலன் தண்ணீர் வடிகட்டக்கூடிய துரித இயந்திர வடிகட்டும் திட்டம் ஒன்றை நகர சபை வகுத்தது. ஆனால் அப்பொழுதிருந்த சென்னை சர்க்கார் அதிகாரிகள் அதன் முக்கியத்தை நன்கு உணராமல் வேறு மாற்று யோசனைகள் கூறி நாள் கடத்தி விட்டனர். ஐந்து ஆண்டுகளுக்குப் பிறகு தங்கள் மாற்று யோசனைகள் பயனற்றவை என்பதைச் சென்னை சர்க்கார் உணர்ந்தது. பிறகு சென்னை நகர சபையார் கேட்ட துரித இயந்திர வடிகட்டியை அமைப்பதற்கு உத்தரவு வழங்க முன்வந்தது. 1954-ம் ஆண்டுதான் ஒரு கோடி காலன் தண்ணீர் வடிகட்டக் கூடிய துரித இயந்திர வடிகட்டிக்குச் சென்னை சர்க்கார் உத்தரவு அளித்தனர். அந்தத் திட்டம்தான் இப்பொழுது சென்னை கீழ்ப்பாக்கத்தில் உருவாகி வருகிறது.



மேயர் திரு கே. என். சீனிவாசன்

"பழைய மணல் வடிகட்டி மூலம் தண்ணீர் வடிகட்டும் முறைக்கும் துரித இயந்திர வடிகட்டும் முறைக்கும் என்ன வித்தியாசம்?"

"பழைய மணல் வடிகட்டும் முறையில் தண்ணீரைச் சுத்தப்படுத்தும் நேரத்தில் அதைப்போல நாற்பது மடங்கு அதிகமாகத் துரித இயந்திர வடிகட்டும் முறையின் மூலம் தண்ணீரை வடிகட்டலாம். பழைய மணல் வடிகட்டும் முறையை விட இன்னும் சுத்தமாகவும் தண்ணீரை வடிகட்ட முடியும்."

"அது எப்படி?"

"பழைய மணல் வடிகட்டிகளில் மணலைக் கழுவும் வேலையை மனிதர்கள்தான் செய்ய வேண்டும். மனிதர்கள் வேலை செய்யும்போது அதிக நேரம் பிடிப்பதுடன், அந்த வேலைகள் சுத்தமாகவும் இருப்பதில்லை. துரித வடிகட்டியில் மணலை இயந்திரமே கழுவி விடுகிறது. நாற்பது மனிதர்கள் இரண்டுநாளில் செய்யும் வேலையை இந்த இயந்திரம் இரண்டுமணி நேரத்தில் செய்துவிடுகிறது. துரித இயந்திர வடிகட்டியின் அடிப்பரப்பிலிருக்கும் மணலை அப்புறப்படுத்தாமலேயே இயந்திரம் அவ் வேலையைச் செய்து விடுகிறது."

"துரித இயந்திர வடிகட்டிகளில் பல விதங்கள் இருக்கின்றனவோ?"

"இரண்டு வகைகள் இருக்கின்றன. ஒன்று மத்திய இழுப்புச் சக்தியுள்ள வடிகட்டி. இரண்டாவது அழுத்தச் சக்தியுள்ள வடிகட்டி. பெரிய அளவில் குடி தண்ணீர் வழங்கும் திட்டங்களுக்கு மத்திய இழுப்புச் சக்தியுள்ள வடிகட்டிதான் உபயோகப் படுத்துவார்கள். அந்த மாதிரி மத்திய இழுப்புச் சக்தி வடிகட்டிதான் இப்பொழுது கீழ்ப்பாக்கத்தில் கட்டப்பட்டு வருகிறது."

இந்தத் துரித இயந்திர வடிகட்டி எப்படி வேலை செய்யும் என்பதைப் பார்க்கலாம்.

ஒரு நாளைக்கு மூன்றேகால் கோடி காலன் தண்ணீர் வரும் கால்வாய் வழியாக ரெட்ஹில்ஸ் ஏரியிலிருந்து கீழ்ப்பாக்கத்துக்கு வரும் சுத்தப்படுத்தாத தண்ணீரைப் பதினாலாயிரம் காலன் தண்ணீர் கொள்ளக்கூடிய சேமிப்புத் தொட்டியில் முதலில் விடுகிறார்கள். நூற்று ஐந்து குதிரை வேகம் கொண்ட ஒரு நீர் இறைக்கும் இயந்திரமும் ஐம்பத்தொரு குதிரை வேகம் கொண்ட இரண்டு நீர் இறைக்கும் இயந்திரங்களும் இந்தத் தொட்டியிலிருந்து தண்ணீரை இறைக்கின்றன. அப்படி இறைக்கப்பட்ட தண்ணீர் இருபத்து நாலு அங்குல சுற்றளவுள்ள குழாய்கள் மூலம் தண்ணீர் வடிக்கும் அறைக்குச் செல்கிறது. அங்கிருந்து தண்ணீரில் ஆலம் என்ற மருந்துப் பொருளைச் சேர்க்கும் விஞ்ஞான அறைக்குச் செல்கிறது. மருந்து நன்றாகக் கலந்தவுடன் அங்கிருந்து இன்னொரு அறைக்குச் செல்கிறது. அந்த அறையிலிருந்து தண்ணீரைத் தெளிவுபடுத்தும் பெரிய தொட்டிகளுக்குச் செல்கின்றன. தெளிவுத் தொட்டிக்குள் தண்ணீர் செல்லும் வழியில் பல சுழலும் துடுப்புகள் இருக்கின்றன. அந்தத் துடுப்புக்கள் ஆலம் கலந்த தண்ணீரை நன்றாகக் கலக்கித் தெளிவுத் தொட்டிக்குள் அனுப்புகிறது. அவ்வாறு கலக்கி அனுப்பப்பட்ட தண்ணீரில் உள்ள மண்டிகள் வட்ட வடிவமான தெளிவுத் தொட்டிக்கு அடியில் உள்ள கிணற்றுக்குச் சென்று விடுகின்றன. அங்கிருந்து கழிவுப் பொருள் கலந்த நீரைப் பிரித்து வெளியே இறைத்து விடுகிறார்கள். நன்றாகத் தெளிந்த நீர் தெளிவுத் தொட்டியின்மேல் உள்ள குழாய்களில் புகுந்து வடிகட்டும் அறைக்குச் செல்கிறது. அங்கு தண்ணீர் வடிகட்டப்படுகிறது. வடிகட்டும் அறையில் ஏராளமான குழாய்கள் இருக்கின்றன. இந்தக் குழாய்களின் அடியில் தண்ணீர் வெளியேறுவதற்கு வசதியாக, பல ஓட்டைகள் இருக்கின்றன. இந்தக் குழாய்களுக்கு மேல், தண்ணீரை வடிகட்ட உதவும்பொருள்களான சரளைக் கற்கள் அடுக்கடுக்காக அடுக்கி வைக்கப்பட்டிருக்கின்றன. அதற்கு மேல் பொடிக் கற்கள், அதற்கும் மேலே இருபத்து ஐந்து அங்குல உயரத்துக்குச் சுத்தமான மணல் இருக்கிறது. இவைகளின் மூலமாக வடிகட்டப்பட்ட தண்ணீர் அங்குள்ள இயந்திரங்களின் மூலமாகத் தள்ளப்பட்டு விசேஷக் குழாய்களுக்குள் செல்கிறது. அந்தக்

குழாய்களில் செல்லும் தண்ணீர் பூமிக்கடியில் நிர்மாணிக்கப் பட்டிருக்கும் பாதாள ஏரியில் போய்ச் சேருகிறது. அங்கிருந்து தண்ணீர் சென்னை நகர மக்களுக்கு வழங்கப்படுகிறது !

இந்த விவரங்களை எல்லாம் எக்ஸிகியூட்டிவ் இன்ஜினியர் திரு வரதராஜுலு அவர்கள் விளக்கியபோது எனக்குத் தலையைச் சுற்ற ஆரம்பித்து விட்டது. அடாடா! தண்ணீரைச் சுத்தம் செய்வதற்கு இவ்வளவு ஏற்பாடுகள் செய்யவேண்டியிருக்கிறதா, என்று வியந்து போனேன். இந்த மாதிரி தண்ணீரை வடிகட்டி மக்களுக்கு வழங்கும் சுகாதார முறையைக் கண்டு பிடித்த விஞ்ஞானிக்கு என்னுடைய நன்றி கலந்த வணக்கத்தையும் வாழ்த்தையும் தெரிவித்துக் கொண்டேன்.

கீழ்ப்பாக்கத்தில் நடக்கும் இந்தவேலையைத் தண்ணீர் விநியோக இன்ஜினீயர் திரு ஓ. டி. ராகவன் தலைமையில் எக்ஸிகியூட்டிவ் இன்ஜினீயர் திரு பி.வரதராஜுலு.உதவி இன்ஜினீயர்கள் திரு ஏ. ஸ்ரீராமுலு. திரு ஆர். ராஜகோபாலன் ஆகியவர்கள் கவனித்து வருகிறார்கள். எவ்வளவு தூரம் சிக்கனமாகவும், சுத்தமாகவும் செய்யலாமோ அவ்வளவு தூரம் சிக்கனமாகவும் சுத்தமாகவும் செய்து வருகிறார்கள். சுதந்திர இந்தியாவில் நம்முடைய பணம் பாழாய்ப் போகாமல் பயன் படக்கூடிய முறையில் செலவாக வேண்டுமே என்பதில் நமக்குள்ள கவலை நம்முடைய இன்ஜினீயர்களுக்கும் இருப்பது மிகவும் சந்தோஷமான விஷயம் அல்லவா ?

*** *** ***

கீழ்ப்பாக்கம் துரித இயந்திரத் தண்ணீர் வடிகட்டி கட்டும் வேலையைப் பார்க்கும் சந்தர்ப்பத்தை அளித்த சென்னை நகரசபை










துரித இயந்திர வடிகட்டிகளின் பல்வேறு தோற்றங்களையும்பூர்த்தியாகும்தருவாயில் உள்ள தெளிவுத் தொட்டியின் தோற்றத்தையும் இந்தப் படங்களில் காணலாம்.

பிரதம கணித அதிகாரி திரு எஸ். சத்திய மூர்த்தி அவர்களுக்கு என்னுடைய நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

பத்திரிகைக்காரர்கள் எங்கேயாவது சென்றால் காரசாரமாக எழுதுவதற்கு விஷயம் ஏதாவது வேணுமே என்று தேடுவார்கள். இங்கேயோ அத்தகைய விஷயம் நிறைய இருக்கிறது. இருந்தாலும் ஒரு விஷயத்தை மட்டுமே வற்புறுத்த விரும்புகிறேன்.

இந்தியாவில் உள்ள பெரிய நகரங்களில் சென்னையும் ஒன்று என்பதை யாரும் மறுக்க முடியாது. டில்லி, கல்கத்தா, பம்பாய் ஆகிய நகரங்கள் ஒவ்வொன்றும் எவ்வளவு முக்கியமான நகரமோ அவ்வளவு முக்கியமான நகரம் தான் சென்னையும். ஆனால் குடி தண்ணீர் விநியோகத்தில் மட்டும் சென்னை நகரம் மிகவும் பின் தங்கி இருக்கிறது. தாயில்லாத பிள்ளைபோல அனாதையாக இருக்கிறது. டில்லியில் ஒவ்வொரு வீட்டிலும் இரண்டு வகையான தண்ணீர்க் குழாய்கள் உண்டு. தோட்டங்களுக்குத் தண்ணீர் விடுவதற்கு வசதியான வடிகட்டாத தண்ணீர்க் குழாய் ஒன்று. குடிப்பதற்கு வசதியான வடிகட்டிய தண்ணீர் வரும் குழாய் மற்றொன்று. குடிதண்ணீர் மட்டும் ஒரு நாளைக்கு ஒரு நபருக்கு நாற்பத்தைந்து காலன் கொடுக்கிறார்கள். பம்பாயில் ஒரு நாளைக்கு ஒரு நபருக்கு நாற்பது காலன் கொடுக்கிறார்கள். கல்கத்தாவில் ஒரு நாளைக்கு ஒரு நபருக்கு நாற்பத்தைந்து காலன் கொடுக்கிறார்கள். நமது புகழ் பெற்ற சென்னை நகரிலோ பழைய முறையில் வடிகட்டிய அதிக சுத்தமில்லாத சற்று நாற்றமுள்ள தண்ணீரை ஒரு நபருக்கு பத்தொன்பது காலன்தான் கொடுக்கிறார்கள்.

''வடக்கு வளருகிறது தெற்கு தேய்கிறது'' என்று பிரசாரம் செய்கிறார்களே என்று குறைப்பட்டுக் கொள்வதில் என்ன பயன்? தென் இந்தியாவில் எல்லாக் காரியங்களும் இப்படித்தானே நடைபெறுகின்றன? உடனே இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் சென்னை நகர சபை நீர் வடிகட்டும் திட்டத்தைச் சேர்த்துக் கொள்ள வேண்டும். நாள் ஒன்றுக்கு ஆறரைக் கோடி காலன் தண்ணீர் வடிகட்டும் துரித இயந்திர வடிகட்டும் நிலயம் அமைப்பதற்கான ஏற்பாடுகள் செய்ய வேண்டும். அப்படிச் செய்தால்தான் சென்னை நகரில் உள்ள மக்களுக்கு நாள் ஒன்றுக்கு ஒரு நபருக்கு நாற்பது காலன் தண்ணீராவது கிடைக்க வசதி செய்யலாம். அத்துடன் இப்பொழுதுள்ள பழைய மணல் வடிகட்டிகள் மூலம் தண்ணீரை வடிகட்டி வழங்கி வரும் முறையை உடனடியாக மூடுவதற்கு முயற்சி செய்ய வேண்டும்.

பழைய மணல் வடிகட்டியின் மூலம் நாள் ஒன்றுக்கு இரண்டரைக் கோடி காலன் தண்ணீர் வடிகட்டப்படுகிறது. இப்பொழுது கட்டப்பட்டு வரும் துரித இயந்திர வடிகட்டியின் மூலமாக மேலும் ஒரு கோடி காலன் தண்ணீர் வடிகட்டலாம். இந்த இயந்திர வடிகட்டியின் மூலம் வடிகட்டிய தண்ணீரைப் பழைய முறையில் வடிகட்டிய தண்ணீருடன் சேர்த்துத்தான் மக்களுக்கு வழங்க வேண்டும். இதனால் குடி தண்ணீர் எப்போதும் போலவே தான் இருக்கும். துரித இயந்திர வடிகட்டியின் மூலம் கிடைக்கும் சுத்தமான குடி தண்ணீர் மக்களுக்கு நேரிடையாகக் கிடைக்க வழியில்லாமல் போய் விடுகிறது. ஆகையால் மேலும் ஐந்தரைக் கோடி காலன் தண்ணீருக்குத் துரித இயந்திர வடிகட்டி உடனடியாக அமைப்பதற்கு முயற்சிகள் செய்ய வேண்டும்.



கமிஷனர் திரு டி. பாலசுந்தரம்

இப்பொழுது இருக்கும் சென்னை நகரசபை கமிஷனர் திரு டி. பாலசுந்தரம் அவர்கள் நிர்வாகத் திறமையும் அநுபவமும் உள்ளவர். அவர் கமிஷனராகப் பதவி ஏற்றதிலிருந்து சென்னை நகர மக்களுக்கு ஊக்கத்துடனும் உற்சாகத்துடனும் பல வகைகளில் தொண்டாற்றி வருகிறார். ஊக்கமும் உற்சாகமும் அநுபவமும் திரு பாலசுந்தரம் அவர்களுக்குப் பூரணமாக இருந்த போதிலும் அவர் ஒருவரை மட்டும் நம்பிப் பிரயோசனமில்லை. மேயர் திரு சீனிவாசன் அவர்களும் நகரசபை அங்கத்தினர்களும் நாள் ஒன்றுக்கு ஆறரைக் கோடி காலன் தண்ணீரை வடிகட்டும் துரித இயந்திர வடிகட்டிகளை அமைக்கப் பாடுபடுவதில் ஈடுபட வேண்டும் என்று வற்புறுத்துகிறோம்.

இப்படிச் சென்னை நகர கமிஷனரும், மேயரும், நகர சபை அங்கத்தினர்களும், நகர சபை நீர் விநியோக இன்ஜினீயர்களும் இதர உத்தியோகஸ்தர்களுமாகச் சேர்ந்து ஒத்துழைத்து ஒரு பெரும் பிரயத்தனம் செய்தாலன்றி இந்தத் திட்டத்தை நிறைவேற்ற முடியாது. சென்னை சர்க்காரையும், மத்திய சர்க்காரையும் இந்த விஷயத்தில் கவனம் செலுத்தும்படி செய்ய முடியாது.

இது தள்ளிப்போடக் கூடிய காரியமல்ல; அலட்சியம் செய்யக்கூடிய விஷயம் அல்ல; தண்ணீர் சுத்தமாக வடிகட்டப் படாமல் மக்களுக்கு வழங்குவதால் ஏற்படும் தீமைகளைப்பற்றி நாம் அறியாதது அல்ல.

ஜவாஹர்லால் நேரு இருந்து ஆட்சி புரியும் பாரதத்தின் தலைநகரமான புதுடில்லியில் மக்களுக்குக் குடி தண்ணீர் வழங்குவதில் காட்டிய கவனக்குறைவால் பயங்கர மஞ்சள் காமாலை நோய் வந்து பல மனித உயிர்கள் மாய்ந்ததும், அதன் பிறகு அங்கு ஆறு மாதங்களுக்குள் நாற்பது லட்சம் ரூபாய் குடிதண்ணீர்த் திட்டத்துக்காகச் செலவழித்ததையும் நினைவில் வைத்துக் கொள்ள வேண்டும். அது போல, சென்னை நகரிலும் ஏற்பட்ட பிறகு விழித்தெழுவதில் ஒரு பயனும் விளையாது.

தேவியின் கடிதம்

# மரியாதை வேண்டும்

வசுமதி ராமசாமி

அன்புக்குரிய சுஜாதா,

உன் கடிதம் பெற்றேன். நீ எழுதியிருப்பது சரிதான். கல்யாண வீட்டுக்கு வருகின்றவர்கள் கொஞ்சம் ஒத்துப் போனால் நன்றாகத்தான் இருக்கும். வருகிற பெண்கள் அலங்காரம் செய்து கொள்ளும் நேரத்தைவிடக் குறைவாகவே கல்யாண வீட்டில் தங்குகிறார்கள். யாரோ பிடித்துத் தள்ளுகிறமாதிரி அவசரப் படுவது சரியல்ல. அதற்காக அவர்களுக்குச் சுமையாக உட்கார்ந்து கொள்ள வேணுமென்றும் சொல்லவில்லை. எதற்கும் மிதமில்லையா?

கல்யாணத்தில் பெற்றோர்கள் எல்லோரையும் வரவேற்க முடியாதல்லவா? அவர்களுக்கு வேண்டிய சொந்தக்காரர்கள், சிநேகிதர்கள் அளிக்கும் வரவேற்பைத் திருமணத்துக்கு வந்தவர்கள் ஏற்றுக் கொள்ளத்தான் வேண்டும்.

உபகாரமாய்ச் செய்யும் சிநேகிதர்கள் கல்யாணக்காரர்கள் மனம் கோணாமல், தாங்கள் செய்யும் உபசாரத்தைப் பிரமாதப்படுத்திப் பேசி அதிகப்படியான அதிகாரம் செய்யாமல் அவர்களோடு பக்குவமாக நடந்து கொண்டால் பரஸ்பரம் நன்மையாக இருக்கும். அவர்களால் உபகாரத்தைவிட அபகாரம் அதிகமாக இருக்கிறதென்று வீட்டுக்காரர்கள் கருதக் கூடாதல்லவா? ஒருவருடைய முக்கியத்துவத்துக்குப் பிரசாரம் தேவையில்லை அல்லவா?

சில நல்ல வழக்கங்களை நினைவுபடுத்திக் கொள்ள வேண்டும். தினசரியோ, அல்லது விசேஷ தினமோ, யார் வந்தாலும் 'வாருங்கள்' என மலர்ந்த முகத்துடன் வரவேற்று உபசரிப்பது சிறந்த வழக்கம். நமக்கு மிகவும் அசந்தர்ப்பமான சமயத்தில் சிலர் வரக்கூடும். இந்தச் சமயத்தில் இவர்கள் இப்படிக் கூர்ச்சம் மாதிரி வந்து நின்று விட்டார்களே யென்று நம் மனத்தில் தோன்றி அந்த நினைவில் அவர்களை வரவேற்காமல் இருந்து விடுவோம். நம்முடைய அசந்தர்ப்பம் அவர்களுக்குத் தெரியாது என்பதை மறக்கக் கூடாது. அழைத்து விட்டு நமக்கு அசந்தர்ப்பமென்று பிறகு தெரிவிக்கலாம். அவர்களும் புரிந்து கொண்டு போனால் நன்றாயிருக்கும்.

விடைபெற்றுப் போகிறவர்கள் 'போகிறேன்' என்று சொல்லிக் கொள்வது நல்ல வழக்கமில்லை. போய் வருகிறேனென்று தான் சொல்ல வேணும். தஞ்சாவூர் ஜில்லாவில் அழகான பழக்கம் உண்டு. போகும் போதுகூட 'வரட்டுமா' என்பார்கள்.

எனக்குத் தெரிந்த குடும்பத்தில் யார் வீட்டுக்கு வந்தாலும் வீட்டிலுள்ள அனைவரும் 'வாருங்கள்' என அழைப்பார்கள். நாம் போய்ப் பத்து நிமிஷங்கள்வரை ஒவ்வொரு அறையிலிருந்தும் நாலா பக்கத்திலும் 'வாருங்கள்' என்ற சொல் எழும். அந்தக் குரலில் ஐந்து வயதுக் குழந்தையின் குரல் கூடக் கலந்திருக்கும். அவர்கள் வீட்டு அந்த வழக்கம் அழகாக இருக்கிறது.

இதற்கு எதிராக இன்னொரு வீட்டு வழக்கத்தையும் சொல்லிவிடுகிறேன். என் சிநேகிதியுடன் ஒரு அம்மாளைப் பார்க்கப் போயிருந்தேன். "அம்மா ஸ்நானம் செய்கிறார்கள். உட்காருங்கள்" என்றான் வேலைக்காரன். குளிர ஸ்நானம் ஆகட்டுமென உட்கார்ந்தோம். பிறகு சாப்பிடுவதாகத் தெரிவித்தான். ஒரு மணி நேரத்துக்குப் பிறகு, வெளியே போகிறார்களாம். பிறகு பார்ப்பதாகச் சொன்னாங்க" என்றான். 'தாராளமாய்ப் போகட்டும்' என்று கிளம்பினோம். அதைவிடத் தமாஷ், அடுத்த சந்தர்ப்பத்தில் அந்த அம்மாளைச் சந்தித்த போது அவர் மரியாதையைப் பற்றிப் பிரமாதமாகப் பேசியதுதான்!

சிலர் மரியாதை காட்டுவதை வெறும் உபசாரப் பொருளாக மதிக்கிறார்கள். முகத்தினால் மட்டும் மரியாதை காட்டினால் போதும் என்று நினைக்கிறார்கள். ஆனால், மரியாதை உணர்ச்சி அகத்திலிருந்து பெருக வேண்டும். அகத்தில் எழுந்த உணர்ச்சி முகத்தில் மலர்ச்சியாகப் பரிணமிக்க வேண்டும்.

"மோப்பக் குழையும் அனிச்சம் முகந்திரிந்து
நோக்கக் குழையும் விருந்து"

என்று வள்ளுவர் பெருமான் இந்த உணர்ச்சியை அழகாக எடுத்துக் கூறுகிறார். இந்த உபதேசத்தை மனத்தில் கொள்ள வேண்டும்.



நம் வீடு தேடிவருபவர் யாரா யிருந்தாலும், வருபவர்வேண்டியவர் என்று தெரிந்தால் அவரை வரவேற்பது ஒருமாதிரி, அறிமுகமில்லாதவரா யிருந்தால் ஒருமாதிரி என்று புதியவரிடம் பராமுகமா யிருத்தல் நியாயமல்ல.

மனிதப்பண்பு என ஒன்றிருக்கிறது. ரயிலில் பிரயாணம் செய்கிறோம். கூட இருக்கிற பிரயாணிகளை நாம் அறியாமல் இருக்கலாம். ஆனால் அவர்கள் குழந்தை பசியால் அழுதால் அவர்களுக்கெதிரே நாம் மட்டும் சாப்பிடுவோமா? அவர்கள் தாகத்துக்குத் தண்ணீர் தேடினால் நாம் கொடுக்காமல் இருக்க முடியுமா? மரியாதையான வழக்கம் ஒன்று நமக்குப் பழக்கமாக வேணுமல்லவா?

இப்படிக்கு,
பூமாதேவி

# இரண்டு சக்கர வண்டி

அழ. வள்ளியப்பா

இரண்டு சக்கர வண்டி-நான்
ஏறிச் செல்லும் வண்டி.
குறைந்த விலையில் வாங்கி-நான்
குஷியாய் ஓட்டும் வண்டி.

எண்ணெய் ஊற்ற வேண்டாம்-வேறு
எதுவும் இழுக்க வேண்டாம்.
சின்னச் சந்தில் கூட-நான்
செல்ல உதவும் வண்டி!

'வழியை விட்டுச் செல்வீர்'-என்றே
வாயால் கூற மாட்டேன்,
அழகு மணியைக் கையால்-ஓங்கி
அடித்தே விலக வைப்பேன்.

ஒருவர் ஏறிச் செல்ல-நன்கு
உதவும் சைக்கிள் வண்டி-இதில்
இருவர் ஏற லாமோ?-ஐயோ
எதற்குப் போலீஸ் தொல்லை?

# மனப்புயல் சித்திரத் தொடர் கதை (8)


















விஜயம்! நீ சமயத்தில் வந்து என் மானத்தைக் காப்பாற்றினாய்; உனக்கு நான் மிகவும் கடமைப் பட்டிருக்கிறேன்.

அதெல்லாம் ஒன்றுமில்லை!





# பாலு பொல்லாதவன்!



சிவராமன் அயல் நாடுகளுக்குச் சென்று மூன்று வருஷங்கள் ஆகிவிட்டன. அவர் அயல் நாட்டுக்குச் செல்லும்போது அவர் குழந்தை பாலுவுக்கு ஒரு வயது தான் பூர்த்தியாகி இருந்தது. இப்போது வெகு ஆவலுடன் திரும்பி வந்தார்.

ஆனால் அவருக்கு ஒரு பெரிய ஏமாற்றம் காத்திருந்தது. குழந்தை பாலு முகத்தைத் திருப்பிக் கொண்டான். 'இதுதான் உன் அப்பா' என்று அவர் மனைவி விமலா சொன்ன போது 'இது ஒண்ணும் அப்பா இல்லே! அப்பா இதோ இருக்கா, பாரு' என்று சொல்லி விட்டுக் கை ஒடிந்து போயிருந்த ஒரு பொம்மையைக் கொண்டு வந்து நீட்டினான் பாலு!

சிவராமன் குளித்து விட்டு வந்து பார்த்த போது பாலு அவருடைய க்ஷவர செட்டை எடுத்து உபயோகிக்க முயற்சி செய்து கொண்டிருந்தான். புத்தம் புதிய சில்க் ஷர்ட்டுகள் நான்கு கிழிந்து கிடந்தன.

சிவராமனுக்கு வந்த கோபத்தில் குழந்தையை நன்றாக அடித்துவிட்டார். தடுப்பதற்கு வந்த விமலாவை, குழந்தையைச் சரியாக வளர்க்காததற்காகத் திட்டி அனுப்பினார்.

சிவராமன் மத்தியானம் களைத்துப் போய்த் தூங்கிக் கொண்டிருந்த போது பாலு வஞ்சம் தீர்த்துக் கொண்டான்.



துணி உலர்த்தும் கொம்பை எடுத்துக் கொண்டு வந்து சிவராமன் மண்டையில் இரண்டு அடி கொடுத்தான். விமலாவுக்கும் பாலுவுக்கும் மறுபடியும் பிரமாதமாக அர்ச்சனை நடந்தது!

மறு நாள் காலையில் சிவராமன் தூங்கி எழுந்து கீழே இறங்கி வந்தார். வாசலில் ஏதோ ரகளை நடந்து கொண்டிருந்தது. 'இந்தப் பையன் மறுபடியும் ரகளை செய்கிறானே! அடியாத மாடு படியாது!' என்று எண்ணிக் கொண்டே வாசலுக்கு வந்தார்.

தம்முடைய பெயர் அடிபடுவதைக் கேட்டுத் தயங்கி நின்றார் அவர். பக்கத்து வீட்டுப் பையன் கோபுவும் பாலுவும் பேசிக் கொண்டிருந்தார்கள்.

"உங்க அப்பா அடிப்பாரா?" என்று கோபு கேட்டான்.

"ஓ அடிப்பாரே" என்றான் பாலு.

"ஐய! எங்கப்பா அடிக்கவே மாட்டார். அவர்தான் நல்லவர், உங்கப்பா கெட்டவர்!" என்றான் கோபு.

உடனே பாலு அவன் மீது பாய்ந்து கீழே தள்ளினான். அவன் மீது உட்கார்ந்து கொண்டு, 'என் அப்பாதான் நல்லவர் என்று சொல்லு' என்று உரக்கக் கத்தினான். கோபுவும் அப்படிச் சொல்லி விட்டு வேகமாக ஓடி விட்டான்.

இதை யெல்லாம் கேட்டுக் கொண்டிருந்த சிவராமனுக்கு ஆனந்தம் பொங்கியது. அப்படியே பாலுவை அணைத்துக் கொண்டார். 'என்னைத் தொடாதே. நான் உன்னோடே டூ' என்று சொல்லி விட்டுப் பாலு அவர் காலில் ஓங்கி ஒரு உதை கொடுத்தான். சிவராமன் அந்த உதையைப் பொருட்படுத்தவில்லை. மறுபடியும் பாலுவைக் கட்டிக் கொண்டு முத்தமிட்டார். — தம்பி



ஜூன் 29ம் முதல்

சென்னை மற்றும்
தென்னாடெங்கும்

பத்மினி பிக்சர்ஸாரின்

# தங்கமலை ரகசியம்

வேடிக்கை, விநோதம், வியப்பு
அத்தனையும் நிறைந்த
நற்போதனைச் சித்திரம்



வசனம் ப.நீலகண்டன் ☆ தயாரிப்பு & டைரக்ஷன் B.R.பந்துலு ☆ கதை சின்ன அண்ணாமலை லட்சுமணன் ☆ ஸ்டூடியோ ரேவதி

# மாயப் பந்து

பாலர் தொடர் கதை

ராஜி

## 13. அவர்கள் தப்பினர்!

மலைக் குகைக்கு அருகில் மால்கோஷ் சென்றதும், சிறிய வாசலில் ஒரு பளபளப்பான கத்தி ஒன்று மலையின் மீது சாத்தப் பட்டிருந்தது. அதைப் பார்த்த மால்கோஷ் குகைக்குள் செல்லாமல் சற்றுப் பயந்து மெதவாக, "ரூபியா! ரூபியா!" என்று கூப்பிட்டான். அந்த இருட்டுக் குகையில் தனியாக நடுக்கத்துடன் உட்கார்ந்துகொண்டிருந்த ரூபியாவுக்குப் பாதி ராத்திரியிலே, தன்னை ஒரு புதிய குரல் பெயரைச்சொல்லிக் கூப்பிட்டதும் தூக்கிவாரிப் போட்டது போல் எழுந்திருந்து எட்டிப் பார்த்தாள். நிலா வெளிச்சத்தில் அவளது அழகான முகத்தைப் பார்த்த மால்கோஷ் சற்று வியந்து நின்றான். பிறகு அவன் "ரூபியா! உன்னை மந்திரவாதியிடமிருந்து திருப்பி அழைத்துப் போகவே மகாராஜு பட்டணத்திலிருந்து வந்திருக்கிறேன். என்னை நீ நம்பி என்னுடன் புறப்பட்டு வா" என்றான்.

முதலில் மந்திரவாதியே ஒரு அழகிய வாலிபனைப் போல மாறுவேஷத்தில் வந்திருப்பானோ என்ற சந்தேகம் ரூபியாவுக்கு வந்தது. பிறகு 'எதற்காக அவன் மாறுவேஷத்தில் வரவேண்டும்? நான்தான் அவன் அதிகாரத்துக்குள் இருக்கிறேனே. உண்மையாக இந்த வாலிபன் என்னைக் காப்பாற்றத்தான் வந்திருக்க வேண்டும்' என்று அவள் நினைத்தாள்.

பிறகு மால்கோஷ், "ரூபியா! நீ ஒன்றும் யோசிக்காமல் உடனே புறப்படு. மந்திரவாதி இங்கு இல்லையே?" என்றான்.

"ஐயா, நீங்கள் என்னைக் காப்பாற்ற வந்ததற்கு மிகவும் சந்தோஷம். மந்திர



வாதி இப்பொழுது இங்கு இல்லை. எந்தச் சமயத்திலும் அவன் வந்து வேறு எங்கேயாவது ஒரு இடத்துக்கு அழைத்துச் செல்வான். என் இருப்பிடத்தை ஒவ்வொரு நாளும் ஒவ்வொரு இடத்தில் மனத்துக்குத் தோன்றியபடி மாற்றி வைத்து விடுகிறான். நான் இங்கே வந்து கொஞ்ச நேரம்தான் ஆகிறது. ஒருவரிடத்திலும் நான் அகப்படக் கூடாது என்பது அவன் எண்ணம். ஆனால் நீங்கள் எப்படி என் இருப்பிடத்தைக் கண்டு பிடித்தீர்கள்?" என்று ரூபியா கேட்டாள்.

உடனே மால்கோஷ், "ராஜகுமாரி! அதைப்பற்றி நான் பிறகு சொல்லுகிறேன். உடனே புறப்பட்டு என்னுடன் வா" என்று கூறினான்.

"ஐயா! உங்களைப் பார்த்தால் மிகவும் நல்லவர் போலத் தோன்றுகிறது. நான் உங்களுடன் வர முடியாது. உங்களுக்கும் எனக்கும் நடுவிலே ஒரு பளபளப்பான பெரிய வாள் இருக்கிறது, பார்த்தீர்களா? அதன் மந்திர சக்தி பிரமாதமானது. மற்ற மந்திரவாதிகள் தங்கள் மந்திரங்களை உபயோகிக்க மந்திரக் கோலை அல்லவா வைத்துக் கொள்ளுவார்கள்? என்னைக் கொண்டு வந்திருக்கும் இந்த மந்திரவாதியோ இந்தக் கத்தியைத்தான் உபயோகிப்பான். இது வரையிலும் இந்தக் கத்தி செய்திருக்கும் மாயாஜால வேலைகள் பல. இக் கத்திதான் மந்திரவாதியின் உயிர் நிலை. இந்தக் கத்தியையே என் பொருட்டு இங்கு வைத்து விட்டுப் போயிருக்கிறான் என்றால் என்னைப் பற்றி எவ்வளவு ஜாக்கிரதையாக இருக்கிறான் என்பதைத் தெரிந்து கொள்ளுங்கள். தனது மந்திர சக்திக்குப் பயன் படுத்தக் கூடிய கத்தியை எனக்குக் காவலாக வைத்து விட்டு என்னை என் தகப்பனாரிடம் சேராதபடி செய்து கொண்டு வருகிறான். என்னுடைய மந்திரக் கோலாகிய இந்தக் கத்தியைக் குகையின் வாசலில் வைத்து விட்டுப் போகிறேன். இந்தக் கத்தியைத் தாண்டி நீ குகைக்கு வெளியே போனாலும் சரி, அல்லது வெளியிலிருந்து குகைக்குள் யாராவது வந்தாலும் சரி, அவர்கள் இந்தக் கத்தியின் மந்திர சக்தியினால் காட்டுப் பன்றியாக மாறி இந்தக் காட்டில் திரியவேண்டியதுதான். நான் வெளியே போயிருந்த சமயத்தில் இந்தக் கத்தியை யாராவது தொட்டார்களென்றால் உடனே கத்தியிலுள்ள மந்திர சக்தியினால் நான் அறிந்து உடனே இங்கே வந்து விடுவேன். ஆகையால் மிகவும் ஜாக்கிரதையாக இரு. இல்லாவிட்டால் உனக்கும், இக் குகைக்கு அருகில் வந்து என் விஷயத்தில் தலையிடுகிறவர்களுக்கும் ஆபத்து நேரிடும்' என்று எச்சரிக்கை செய்திருக்கிறான் மந்திரவாதி!" என்றாள் ராஜகுமாரி ரூபியா.

ரூபியா சொல்லியதைக் கேட்ட மால்கோஷ் 'ஹாஹா' என்று சிரித்தான்.

"ஒரு பயங்கரமான சமாசாரத்தைச் சொன்னால் நீங்கள் எதற்காக இப்படிச் சிரிக்கிறீர்கள்?"

"பயங்கரமான விஷயமா? யாருக்கு? எனக்கல்ல. எனது தகப்பனாரின் ஆசீர்வாதமாக இந்த மாயப் பந்து என் கையில் இருக்கும் வரையில் என்னை ஒரு மந்திரவாதியும் வேறுஉருவமாக மாற்றமுடியாது. உன்னுடைய மந்திரவாதியின் சூழ்ச்சி என்னிடம் பலிக்காது. உன்னிடமும் பலிக்காதபடி செய்யப் போகிறேன்.

"சொல்கிறேன் கேள். குகைக்குள் வராமல் வெளியில் இருந்தபடியே என் வலது கையை உன் பக்கம் நீட்டுகிறேன். நீ தயங்காமல் என் கையைப் பிடித்துக் கொண்டு குகைக்கு வெளியே வா. என்னிடம் மந்திரப் பந்து இருப்பதாலும் நீயும் என் கையைப் பிடித்துக் கொண்டிருப்பதாலும் நாம் இரண்டு பேரும் மந்திரவாதி நினைப்பதுபோல் வேறு உருவமாக மாறாமல் தப்பித்துக் கொள்ளலாம்" என்று கூறி மால்கோஷ் தன் வலதுகையை நீட்டினான்.

ரூபியா மால்கோஷின் கையைப் பிடித்துக் கொண்டு வெளியே மிகவும் ஜாக்கிரதையாகக் கத்தியின்மீதுபடாமல் வந்தாள். மால்கோஷ் சொன்னபடியே, மாயப் பந்தின் மகிமையினால் இருவரும் உருவம் மாறவில்லை.

உடனே மால்கோஷ் குகையின் மீது சாத்தியிருந்த கத்தியை எடுக்கப் போனான். உடனே ரூபியா அவனைத்



தடுத்து. 'அந்தக் கத்தியை எடுக்க வேண்டாம். நீங்கள் கத்தியைத் தொட்ட மறு கணம் மந்திரவாதி ஓடி வந்து விடுவான். பிறகு நாம் தப்புவது முடியாத காரியம் ஆகிவிடும். அதுவுமல்லாமல் பிறகு நம் இரண்டு பேரையும் உயிரோடு வைக்க மாட்டான்'' என்றாள்.

'' இதற்காகவா நீ பயப்பட வேண்டும்? இவ்வளவு பிரயாசைப்பட்டு இங்கே வந்த பிறகு நான் இங்கு வந்ததற்கு அடையாளமாக அந்தக் கத்தியை எடுத்துக்கொண்டு தான் போவேன். மந்திரவாதி வந்தால் அவனுடன் நின்று போராடுவேன்'' என்று சொல்லி விட்டுக் கத்தியைத் தனது ஒரு கையில் வைத்துக் கொண்டு மற்றொரு கையால் ரூபியாவைப் பிடித்துக் கொண்டான் மால்கோஷ்.

"ரூபியா! என்னைப் பின்தொடர்ந்து கொண்டே இந்த மரத்தின்மீது வா. இது ஒரு மந்திர மரம். இந்த மரம் செய்த உதவியால்தான் நான் இங்கே வந்தேன். இந்த மரத்தைத் தொடர்ந்து போனால் நேராக உன் தகப்பனார் இருக்கும் அரண்மனை வாசலுக்குச் செல்லுவோம்'' என்றான் மால்கோஷ். அவன் சொல்லியதைக் கேட்க ரூபியாவுக்கு மிகவும் சந்தோஷம் தான். ஆனால் அவளுக்கு மரத்தின் வழியாகப் போய்க் கொண்டிருக்கும் பொழுது எங்கே மந்திரவாதி வந்துவிடப் போகிறானோ என்ற பயம்.

மால்கோஷ் கத்தியை எடுத்த உடன் யாரோ கத்தியிடம் நெருங்கினார்கள் என்பதை மந்திர சக்தியினால் அறிந்த மந்திரவாதி வேகமாக ஓடி வந்தான். அப்பொழுது குகையின் வாசலில் இருந்த கத்தியைக் காணவில்லை; அவசரமாகக் குகைக்குள் இருந்த ரூபியா இருக்கிறாளா என்று பார்த்தான். அவளும் அங்கு இல்லை. ஆத்திரமடைந்து கத்தினான். கத்தி என்ன பிரயோசனம்? மாலகோஷும், ரூபியாவும் தான் மரத்தின் உதவியைக் கொண்டு அரண்மனையை நோக்கிக் கத்தியுடன் போய்க் கொண்டிருக்கிறார்களே?

ரூபியா குகைக்கு வெளியில் இருக்கிறாளா என்று நாலா பக்கமும் ஓடிப் பார்த்தான். ஒருவரும் அவன் கண்களில் தென்படவில்லை. கோபமடைந்தான். 'என் மந்திர சக்தி வாய்ந்த கத்தியினால் அவர்கள் காட்டுப் பன்றியாகத்தான் போயிருக்க வேண்டும்' என்று எண்ணி இங்கும் அங்குமாகப் போய் ஏதேனும் பன்றிகள் போகின்றனவா என்று பார்த்தான். தூரத்தில் குறவன் பல பன்றிகளை மேய்த்துக் கொண்டிருந்தான். அங்கு போய் ஒவ்வொரு பன்றியாகப் பார்க்கத் தொடங்கித் தோல்வியுடன் திரும்பினான். குகைக்கு எதிரில் புதியதாக வளர்ந்த மரத்தை அவன் பார்த்தான். புதிதாகத் திடீரென்று இங்கே ஏது மரம்? இது ஏதோ மந்திர மரமாகத்தான் இருக்க வேண்டும் என்று நினைத்து, மரம் எவ்வளவு தூரம் வளர்ந்திருக்கிறது என்று பார்த்தான். அவனால் அதன் வளர்ச்சியை அப்பொழுது கண்டு பிடிக்க முடியவில்லை. ஆனால் வெகு தூரத்தில் அந்த மரத்தைப் பற்றிக் கொண்டு வேகமாகப் போகும் ரூபியாவையும், மால்கோஷையும் பார்த்தான். அவனுடைய பளபளப்பான மந்திரக் கத்தி மால்கோஷிடம் இருப்பதையும் கண்டான்.

'என் மந்திர சக்தி வாய்ந்த கத்தியிடம் தப்பினார்கள்? இவர்கள் இருவரும் எப்படிக் காட்டுப் பன்றிகளாக மாறாமல் இருந்தார்கள்?' என்று மிகவும் அதிசயப்பட்டான் அந்த மந்திரவாதி. (தொடரும்)



# காலமானுர்



● அம்மையப்பன் & சென்னே கே. எஸ். பி. பாலகிருஷ்ணன் & கோ., திருவாரூர் - சரஸ்வதி ஜவுளி ஸ்டோர்ஸ் பங்குதாரரான **ஸ்ரீ என். வி. ஆர். சௌரிராஜன்** சென்ற 15-6-57-ந் தேதி சனிக்கிழமை காலமானுர் என்பதை வருத்தத்துடன் தெரிவித்துக் கொள்ளுகிறேம். அவருக்கு வயது 45.

அவர் சென்னே மாகாண கைத்தறி ஜவுளி வியாபாரிகள் சங்க கௌரவ காரியதரிசியாகவும் தென் இந்திய வர்த்தக சபை கமிட்டி மெம்பராகவும் சௌராஷ்டிர மத்ய சபை உபதலேவராகவும் இருந்தார்.

அவருடைய மனேவியும் 4 குமாரர்களும் 1 குமாரத்தியும் எண்ணற்ற உறவினர்களும் நண்பர்களும் இவரது மறைவினுல் துக்கத்தில் ஆழ்ந்திருக்கின்றனர்.

K. S. லெக்ஷ்மண செட்டியார்
அண்டு
K. S. P. பாலகிருஷ்ணன் & கோ.,
அம்மையப்பன் & சென்னே

# மலைச்சாரல் மாதவி

## அத்தியாயம் 31

## கருணாகரனின் ராஜினாமா




கருணாகரன் செய்த தவறுகளில் அன்று வேலாயுதத்தை வேலையை விட்டு நீக்கியது போன்ற தவறு வேறு ஒன்றும் கிடையாது.

அதிலிருந்துதான் எத்தனை அனர்த்தங்கள் முளைக்க ஆரம்பித்தன?

அடிபட்ட வேலாயுதம் சும்மா இருக்கவில்லை. ஆத்திரத்தோடு தொழிலாளர் சங்கத் தலைவரிடம் போய் முறையிட்டான். அவர் பொறுமையாகக் கேட்டுவிட்டு, வேலாயுதத்துடன் பேசிக் கொண்டிருந்தவனையும் விசாரித்தார். கருணாகரன் அடித்தது தவறுதான் என்பதை ஊர்ஜிதம் செய்து கொண்ட பிறகு மேலே செய்ய வேண்டிய காரியங்களைச் செய்யத் தொடங்கினார்.

தொழிலாளர் சங்கத்தில் அன்று காரசாரமான விவாதங்கள் நடைபெற்றன. சிலர் ஆவேசப் பிரசங்கம் செய்தார்கள். சிலர் வேலாயுதத்துக்குப் பரிந்து பேசினார்கள். இப்படியெல்லாம் வெகு நேரம் பொழுது போக்கிய பிறகு கருணாகரனுக்கு ஒரு கடிதம் எழுத வேண்டும் என்று தீர்மானிக்கப்பட்டது.

அதில் உடனே வேலாயுதத்தைத் திரும்ப வேலையில் எடுத்துக் கொள்ள வேண்டும் என்றும், ஹிம்சை செய்ததற்காக நஷ்டஈடு கொடுக்க வேண்டும் என்றும், இல்லாவிட்டால் வழக்கு தொடரப்படுமென்றும் எழுதியிருந்தது.

கருணாகரனுக்கு இந்தக் கடிதத்தைப் பார்த்ததும் ரௌத்திராகாரமான கோபம் வந்தது. ஆனால் வழக்குப் போட்டால் தான் ஜெயிப்பது சந்தேகந்தான் என்ற உண்மையும் தெரிந்திருந்தது. அதனாலேயே அவனுடைய கோபம் அதிகரித்தது. ஆனால் இப்பொழுது பின்வாங்கினால் தன்னுடைய கௌரவம் என்ன ஆகுமோ என்று பயந்தான். தொழிலாளர்களிடம் ஒரு முறை தோற்றால் பிறகு அவர்கள் மிஞ்சிக் கொண்டே இருப்பார்கள்; தலை தூக்க விடமாட்டார்கள். இதெல்லாம் கிடக்க, எப்படி இந்தக் கடிதத்தை விஜயராகவனிடம் காட்டுவது என்று வேறு தயக்கமாக இருந்தது. அதே

சமயத்தில் வழக்கு நடந்தாலும் சிவசங்கரன் தனக்குப் பாதகமாகத் தீர்ப்பு சொல்ல மாட்டார் என்ற நம்பிக்கையும் எழுந்தது.

கடைசியாக விஜயராகவனிடம் கடிதத்தைக் காட்டினான். அதைப் பார்த்து அவர் மிகவும் வருத்தப்பட்டார். ''நீ ஏன் அனாவசியமாக வேலாயுதத்துடன் சண்டைக்குப் போனாய்?'' என்று கேட்டார்.

''என் நிலையில் நீங்கள் இருந்திருந்தால் அதையேதான் செய்திருப்பீர்கள். கூசாமல் அவன் அப்படிப் பேசியதை யாரும் பொறுத்துக் கொண்டிருந்திருக்க முடியாது.''

''இருந்த போதும் நீ அவனை அடித்திருக்க வேண்டாம். வேலையில் பழுது இருந்தால்தான்



நாம் கண்டிக்கலாமே தவிர அவன் பேசும் வம்புகளை யெல்லாம் நாம் கண்டித்துச் சாத்தியப்படுமா? வேலாயுதத்தைத் திரும்ப வேலையில் எடுத்துக் கொண்டு விடலாம். அதனால் பல குழப்பங்கள் தீர்ந்து போகும். கலவரத்தை வளர்த்துக் கொண்டே போவதில் எனக்கு விருப்பம் இல்லை'' என்றார் விஜயராகவன்.

''அப்படியானால் நான் இப்பொழுதே ராஜினமா செய்து விடுகிறேன். வேலாயுதத்தின் முகத்தில் இனிமேல் என்னால் விழிக்க முடியாது!'' என்று கூறிவிட்டு வெளியே போய் விட்டான் கருணாகரன்.

விஜயராகவன் திகைத்துப் போனார். இந்த முன்கோபக்காரனை ஜயந்தியின்



கணவனாகத் தேர்ந்தெடுத்தோமே என்று கூட வருந்தினார்.

பதினைந்து நிமிஷத்துக்கெல்லாம் ஒரு ஆள் கருணாகரனின் ராஜினமாக் கடிதத்தைக் கொண்டு வந்து கொடுக்கவே அவருக்கு ரொம்பக் கவலையாகப் போயிற்று.

தன் தந்தைக்கு மருந்து கொடுக்க வந்த ஜயந்தி அவர் கவலையோடு இருப்பதைப் பார்த்து விட்டு, ''என்ன அப்பா சமாசாரம்? ஏன் கவலையாக இருக்கிறீர்கள்?'' என்று விசாரித்தாள். அப்பொழுது கோவிந்தனும் அங்கே வந்தார். இருவரிடமும் நடந்ததைக் கூறினார் விஜயராகவன். கருணாகரனின் ராஜினமாக் கடிதத்தையும் காட்டினார்.

தன் தகப்பனார் கூறியதைக் கேட்டு ஜயந்தி மிகவும் துயரமடைந்தாள். தான் போய்க் கருணாகரனைச் சமாதானப்படுத்தி அழைத்து வருவதாகச் சொன்னாள்.

கோவிந்தனையும் ஜயந்தியின் கூடப் போகச் சொல்லிவிட்டு விஜயராகவன் சிறிது நேரம் சிந்தனை செய்தார். பிறகு தொழிலாளர் சங்கத் தலைவரையும் வேலாயுதத்தையும் தம் இல்லத்துக்கு அழைத்து வரச் சொல்லி அவர்களுடன் சமரசமாகப் பேசினார்.

வேலாயுதத்திடம் ''ஆயிரம் ரூபாய் நஷ்ட ஈடு கொடுக்கிறேன். வழக்கு போட வேண்டாம். உனக்கு வேறு எங்கேயாவது வேலையும் செய்து வைக்கிறேன்'' என்று பரிவுடன் சொல்லிப் பார்த்தார்.

வேலாயுதம் இதற்குச் சம்மதித்திருப்பான். ஆயிரம் ரூபாய் தருவதாகச் சொன்னவுடனேயே அவனுக்கு உச்சி குளிர்ந்து போய்விட்டது.

ஆனால் சங்கத் தலைவர் குறுக்கிட்டு, ''அது எப்படி ஒப்புக் கொள்ள முடியும்? நீங்கள் இழைத்த அநீதிக்குப் பரிகாரம் வேண்டுமே தவிர நாங்கள் பணம் கேட்கவில்லை. நேர்மையாக உழைத்து நாங்கள் சம்பாதித்துக் கொள்கிறோம். உங்களைப் போன்ற பெரிய மனிதர்கள் ஏழைகளை லஞ்சம் வாங்கப் பழக்குவது மிகவும் தவறு'' என்றார்.

இதைக் கேட்ட வேலாயுதத்தின் முகம் தொங்கிப் போய்விட்டது. 'இவரை எதற்காக அழைத்து வந்தோம்?' என்று கூட வருந்தினான். ஆனால் சங்கத்துக்கு விரோதமாக அவனால் என்ன செய்ய முடியும்?

ஆயினும், ''எஜமானிடம் நாம் சமாதானமாகப் போய் விடலாமே. இவர் நமக்கு ஒரு கெடுதலும் செய்யவில்லையே?'' என்று அவன் சொல்லிப் பார்த்தான்.

சங்கத் தலைவர் அவனை முறைத்துப் பார்த்து விட்டு, ''வேலாயுதம்! பணம் பெற்றுக் கொண்டால் தொழிலாளிகள் குலத்தையே நீ அவமதித்தவனாவாய். அத்தனை தொழிலாளர்களும் அதனால் வருத்தமடைவார்கள்'' என்று தீர்மானமாகக் கூறி விட்டார்.

கடைசியில் இருவரும் விடைபெற்றுக் கொண்டு போனார்கள். விஜயராகவன் தம் முயற்சி வீணானது குறித்து அதிக ஏமாற்றமடையவில்லை. அவர் ஒருவாறு இதை எதிர்பார்த்துத்தான் இருந்தார்.

கருணாகரன் விட்டுக் கொடுக்க மாட்டேன் என்று பிடிவாதம் பிடித்தது தான் அவரைக் கொஞ்சம் வருந்தச் செய்தது. சாதாரணமாகப் பிறருக்குச் செய்த உதவியை நினைத்துப் பார்த்து, அவர்கள் தம்மிடம் நன்றியோடு இல்

லேயே என்று வருத்தப்படும் சுபாவம் விஜயராகவனுக்குக் கிடையாது. உதவி செய்வதோடு தம் கடமை தீர்ந்தது என்று எண்ணும் உன்னத குணமுடைய வர் அவர். ஆனால் அவர் கூட இன்று கருணாகரனுக்குத் தாம் செய்திருக்கும் பல உதவிகளையும், தம் மகளையே அவனுக்குக் கொடுக்கத் தயாராக இருப் பதையும், அவன் துடுக்காகப் பதில் சொல்லி விட்டுப் போனதையும் சேர்த்து நினைத்துப் பார்த்தார்.

ஆனால் உடனேயே தம் மனத்தைச் சமாதானமும் செய்து கொண்டார். 'ஜயந்தியின் மனத்துக்கு ஒத்தவனாக இருக்க வேண்டுமென்றுதானே ஆசைப் பட்டேன். அவரவர்களுடைய சொந்த விருப்பு வெறுப்புக்களை ஆராய எனக்கு என்ன உரிமை இருக்கிறது? ஜயந்தி அவனைவிரும்புகிறாள்: மணந்துகொள்ளப் போகிறாள். நான் என்னுடைய ஆசை களை அவர்கள் மூலம் நிறைவேற்றிக் கொள்ள எண்ணுவது தவறு' என்று பலவாறு யோசனை செய்து கொண்டே கண்ணயர்ந்தார்.

கோவிந்தனும் ஜயந்தியும் கருணா கரனைத் தேடிக் கொண்டு மலைச்சாரல் பங்களாவுக்குச் சென்றார்கள். போகும் போதே ஜயந்தி கோவிந்தனிடம் கருணா கரனின் தங்கமான சுபாவத்தைப் பற்றி யும், முன்கோபத்தில் அது பிரகாசிக் காமல் போய் விடுவது பற்றியும் சொல்லிக் கொண்டு வந்தாள்.

"அப்பாவுக்கு வேறு உடம்பு சரி யில்லை. இந்தச் சமயத்தில் இவர் இப்படி ராஜினாமாக் கடிதம் அனுப்பி விட்டாரே என்றுதான் வருத்தமாக இருக்கிறது. அப்பாவின் மனம் எவ்வளவு நோகும் என்பதை நினைத்துப் பார்த்தாலே எனக்கு வருத்தமாக இருக்கிறது. இன் னும் சின்னம்மாவுக்கு விஷயம் தெரி யாது. தெரிந்தால் அவள் வேறு திட்டத் தொடங்குவாள். 'நான் முன்னமேயே சொன்னேனே? கேட்டாயா?' என்று சொல்லிப் பிராணனை வாங்கிவிடுவாள்" என்றாள் ஜயந்தி அழமாட்டாத குறை யாக. அவளுக்குத் தன் மனத்தில் உள்ளதை யாரிடமாவது சொன்னால் தான் ஆறுதலாக இருக்கும் போலத் தோன்றியது.

கோவிந்தனும் அவளுக்கு ஆறுதலாக நாலு வார்த்தைகள் சொன்னார். "இம் மாதிரியெல்லாம் சண்டை பூசல்கள் நடப்பது உலகத்தில் சர்வசாதாரணம் அம்மா! நீ கவலைப்படாதே. எல்லாம் தானாகச் சரியாகி விடும். இளம் வயதில் வாலிபர்கள் அப்படித்தான் இருப்பார் கள். உலக அனுபவம் உண்டாக உண் டாகத் தானாக அடங்கிப் போய் விடு வார்கள்" என்றார்.

"நீங்கள் அவருக்குச் சொல்லிப் பாருங்கள். ராஜினாமாவை வாபஸ் வாங்கிக் கொண்டு, நாளையிலிருந்து ஆலைக்குக் கட்டாயம் வரவேண்டும் என்று சொல்லுங்கள். நானும் சொல் கிறேன். வேலாயுதத்தை வேலைக்கு வைத்துக் கொள்ளப் பிடிக்கவில்லை யென்றால் அதற்கு இவர் ராஜினாமா செய்ய வேண்டுமா?" என்றாள் ஜயந்தி.

"பொதுவாகவே மற்றவர்கள் பேசும் வம்புப் பேச்சுக்களை நாம் காதில் வாங் கிக் கொள்ளக் கூடாது. அதனால் நமக்குத்தான் வேதனையும் துன்பமும் உண்டாகும். இந்த உண்மையை இன்



னும் கருணாகரன் தெரிந்து கொள்ள வில்லை" என்று அவர் சொல்லிக் கொண்டிருக்கும்போது கார்மலைச்சாரல் பங்களாவின் முகப்பில் போய் நின்றது.

வண்டியிலிருந்து கோவிந்தனும், ஜயந்தியும் இறங்குவதைப் பார்த்த உட னேயே கருணாகரனுக்கு முகம் சுண்டைக் காயாகச் சுருங்கிப் போய் விட்டது. இரு வரும் அருகில் வந்த பிறகு கூட அவன் 'வாருங்கள்' என்று சொல்லவில்லை.

மாதவி அப்போது வீட்டில் இல்லை. வீடு வெறிச்சென்று இருந்தது.

கோவிந்தன் கருணாகரன் முகத்தில் இருந்த கடுகடுப்பைச் சிறிதும் பொருட் படுத்தவில்லை. கருணாகரனின் தோளில் கையைப் போட்டு உள்ளே இழுத்துக்

**1934** சரியான போக்குவரத்து சாதனங்கள் இல்லாத ஊர். அருகே கடைகளும் கிடையாததால், கோவிந்தனின் வாழ்க்கை கடினமாயிருந்தது. அவன் ஒரு ஹெர்குலிஸ் சைக்கிள் வாங்கியவுடன் அவனுடைய கஷ்டங்கள் மாயமாய் மறைந்தன.

# ஹெர்குலிஸ் ஓர் ஸைக்கிள் மட்டும் அல்ல, வாழ்நாள் முழுதும் உழைக்கும் ஓர் நற்துணை



இந்தியாவில் தயாரிப்பவர்கள்

டி. ஐ. ஸைக்கிள்ஸ் ஆப் இந்தியா லிமிடெட், சென்னை.

TIC 52



## இன்று

ஊர் வெகு முன்னேற்றமடைந்துவிட்டது. நாள்முழுதும் டிராமும், பஸ்ஸும் ஓடுகின்றன. ஆனால், [illegible] "க்யூ" வரிசையில் நின்று காத்திருக்கவேண்டிய அவசியமில்லை. [illegible] அந்த பழைய நம்பகமான ஹெர்குலிஸ் சைக்கிள் தயாராயிருக்கிறது.

ஹெர்குலிஸ் சைக்கிள் வைத்திருப்பவரைக் கேளுங்கள். வாழ்நாள் முழுதும் உழைப்பதற்கென்று அமைக்கப்பட்ட உன்னத சைக்கிள் அது என்று கூறுவார். சுமார் 50 வருஷங்களாக உயர்தர சைக்கிள்களைத் தயாரித்துவரும் அநுபவ மிகுந்தவர்களால், இப்பொழுது இந்த நுட்ப வேலைப்பாடமைந்த ஹெர்குலிஸ் சைக்கிள் டி. ஐ. சைக்கிள்ஸாரின் நவீன தொழிற்சாலையில் தயாரிக்கப்படுகிறது. அதன் உயர்தர அமைப்பையும், அதிகப் பிரயாசையில்லாமல் ஓடும் தன்மையையும் கண்டு நீங்கள் ஆச்சரியமடைவீர்கள். சைக்கிள்களில் மிகச்சிறந்தது ஹெர்குலிஸ். ஆயினும் மிதமான விலையில் கிடைக்கிறது.

**உங்கள் சைக்கிள் ஒரு சிறந்த மூலதனம்—**

**ஹெர்குலிஸ்** உங்கள் பணத்திற்கு சிறந்த பெறுமானம்.

கொண்டு போனார். இதைக் கருணாகரன் எதிர்பார்க்காதபடியால் பேசாமல் அவர் கூடச் சென்றான்.

''என்ன கருணாகரன்? நீங்கள் கூட இப்படிக் குழந்தை மாதிரி கோபித்துக் கொண்டு வரலாமா? விஜயராகவன் ரொம்ப வருத்தப்படுகிறார். ராஜினாமாவை அவர் ஒப்புக் கொள்ளவில்லை. பேசாமல் நாளை ஆலைக்கு நீங்கள் வர வேண்டும்'' என்றார் கோவிந்தன் மிகவும் சகஜமாக.

ஜயந்திக்கே அவர் அப்படிப் பேசியது சற்று வியப்பை அளித்தது. ரொம்ப நாள் பழகியவர் போலப் பேசுகிறாரே என்று ஆச்சரியப்பட்டாள்.

''நீங்கள் இப்படிச் செய்தது உங்களுக்கே நியாயமாகப் படுகிறதா? அப்பாவுக்கு உடம்பு வேறு சரியாக இல்லாமலிருக்கும் போது ராஜினாமாக் கடிதம் எழுதியனுப்பி இருக்கிறீர்களே? இது சரியா?'' என்று கேட்டாள் ஜயந்தி.

''எனக்கு நியாய அநியாயத்தைப் பற்றி யாரும் உபதேசம் செய்ய வேண்டியதில்லை. மானேஜரான என்னை விடத் தொழிலாளி வேலாயுதம் உயர்வாகப் போய் விட்ட பிறகு அந்த இடத்தில் என்னால் ஒரு கணம் கூட வேலையில் இருக்கமுடியாது'' என்றான் கருணாகரன்.

''வேலாயுதம் உங்களைவிட உயர்வாகப் போய்விட முடியுமா, கருணாகரன்? ஏன் அர்த்தமில்லாமல் பேசுகிறீர்கள்? வீண் சச்சரவுகளுக்கு இடம் கொடுக்க வேண்டாம் என்று விஜயராகவன் முயற்சி செய்தார். உங்களுக்கு விருப்பமில்லை என்றால் நேரிடையாகச் சொல்வதை விட்டு விட்டு இப்படிக் கோபித்துக் கொள்வது கொஞ்சம்கூட நியாயமல்ல'' என்றார் கோவிந்தன்.

கருணாகரனின் முகத்திலிருந்த கடுகடுப்பு சிறிது குறைந்தது. ஜயந்தி அவனைப் பார்த்து, ''தயவு செய்து நான் சொல்வதைக் கேளுங்கள். அப்பாவிடம் நான் போய்ப் பதில் சொல்ல வேண்டும். நாளை நீங்கள் ஆலைக்கு வருவீர்கள் அல்லவா?'' என்றாள்.

''வருகிறேன்'' என்று தலையை ஆட்டினான் கருணாகரன்.

இருவரும் கருணாகரனிடம் விடைபெற்றுக் கொண்டு புறப்பட்டார்கள். காரில் ஏறிக் கொஞ்ச தூரம் போனதும், ''கருணாகரன் ஒரு வேடிக்கையான மனிதன்தான்'' என்றார் கோவிந்தன்.

மற்றவர்களுக்கு எதிரில் ஒரு மாதிரியும், தன்னிடம் தனியே பேசும்போது வேறு மாதிரியும் கருணாகரனைப் பற்றிக் கோவிந்தன் பேசுவதைப் பார்த்து ஜயந்தி வருத்தமடைந்தாள்.

## அத்தியாயம் 32

## வழக்கின் முடிவு

கடைசியில் தொழிலாளர் சங்கம் வழக்கு தொடர்ந்தது.

வழக்கு மாஜிஸ்திரேட் சிவசங்கரன் முன்னால் விசாரணைக்கு வந்தது.

சிவசங்கரனின் நிலைமை மிகவும் தர்மசங்கடமாக ஆயிற்று. மாதவியோ கருணாகரனோ அவரிடம் நேரிடையாக எதுவும் கூறவில்லை. ஆனாலும் இருவரும் கருணாகரனுக்குச் சாதகமாகத் தான் வழக்கு முடியும் என்று நம்புகிறார்கள் என்பது அவருக்குத் தெரிந்தது. ஆகவே கூடியவரையில் வழக்கு முடியும் வரை அவர்களைப் பார்க்கப் போவதில்லை என்றும், வழக்கு சம்பந்தமாக யாராவது பேசினால் அதைக் காதில் வாங்கிக் கொள்வதில்லை என்றும் தீர்மானித்துக் கொண்டார்.

மாதவி தீர்ப்பு தன் தம்பியின் பக்கம்தான் இருக்கும் என்று திடமாக நம்பினாள். வேலாயுதம் அன்று அவதூறாகப் பேசியது ரொம்பத் தவறு என்பது அவள் அபிப்பிராயம். கருணாகரனின் நிலையில் வேறு யார் இருந்தாலும் அப்படித்தான் செய்திருப்பார்கள் என்று நினைத்தாள். வம்பு பேசுதல், மற்றவர்களைப் பற்றிக் குறை கூறுதல் முதலியவைகள் எல்லாம் அவளுடைய எண்ணத்தின்படி மகத்தான தவறுகள்; மன்னிக்க முடியாத குற்றங்கள். ஆகவே வேலாயுதத்தை வேலையை விட்டு நீக்கியது அவளுக்குத் தவறாகப் படவில்லை. கருணாகரன் நடந்ததையெல்லாம் சற்று மிகைப்படுத்தி அவளிடம் கூறியபோது அவளுக்கே வேலாயுதத்தின் மீது அளவற்ற கோபம் வந்தது.

மேலும் அவளுக்குக் கோர்ட்டு விவகாரங்கள் எதுவும் தெரியாது. குற்றம் ருசு ஆவதற்குச் சாட்சிகள் வேண்டும் என்பதும், வழக்கின் போக்கே சாட்சியத்தில்தான் இருக்கிறதென்பதும் அவளுக்குத் தெரியாது.

'சிவசங்கரனுக்குத்தான் தன் தம்பியைப் பற்றி நன்றாகத் தெரியுமே. நடந்த விஷயங்களும் தெரியும். தம்பியின் பக்கம் தீர்ப்புக் கூற என்ன தடை?' என்று மாதவி நினைத்தாள்.

கருணாகரனுக்குத் தான் செய்த காரியம் சரியானது என்பதில் சந்தேகம் இருக்கவில்லை. அவ்வப்போது வழக்கு ஜயிக்குமா என்ற கவலை ஏற்பட்டாலும், சிவசங்கரன் ஒருநாளும் தன்னைக் கைவிட மாட்டார் என்று திடமாக நம்பிக் கொண்டிருந்தான்.

வழக்கு மிகத் துரிதமாக நடைபெற்றது. கருணாகரன் வேலாயுதத்தை அடித்து நொறுக்கியதைக் கண்ணால் பார்த்ததாக ஏழெட்டுப் பேர்கள் சாட்சி சொன்னார்கள். ஆனால் வேலாயுதம் அவதூறாகப் பேசியதாகச் சாட்சி கூற யாருமே இல்லை.

வேலாயுதத்தின் நண்பன் சாட்சி கூறியபோது, தன்னிடம் வேலாயுதம் கருணாகரனுக்கு மானேஜர் பதவி கொடுத்தது சரியல்ல என்றும் அவனுக்கு மேல் ஸீனியர்களாக இரண்டு பேர்கள் இருக்கும் போது கருணாகரனை மானேஜராக்கியது தவறென்றும் கூறியதாகச் சொன்னான். மற்றப்படி வேலாயுதம் கூறியது எதையும் அவன் சொல்லவில்லை. இதை ஒட்டுக் கேட்டுக் கொண்டிருந்து விட்டுக் கருணாகரன் ஓடி வந்து அடித்ததாகவும் யாரும் தடுப்பதற்கு முன்னால் பல அடிகள் அடித்து விட்டதாகவும் சொன்னான்.

தொழிலாளர் சங்கத்தின் சார்பில் வக்கீல் மிகவும் சாமர்த்தியமாக வாதாடினார். தொழிலாளர்கள் தங்கள் மானேஜரைப் பற்றியும், முதலாளியைப் பற்றியும், தங்களுக்குத் தோன்றியவாறு பேசிக் கொள்ளத்தான் செய்வார்கள். அவரவர்களுடைய அபிப்பிராயத்தை வெளியிடத் தான் செய்வார்கள். அதற்காகக் கருணாகரன் அவனை அடித்தோ அல்லது டிஸ்மிஸ் செய்தோ இருக்கக் கூடாது என்றும், அது மிகவும் தவறு என்றும் கூறினார்.

கருணாகரனுடைய வக்கீலுக்கு வேலாயுதம் கூறிய அவதூறுகளை நிரூபிக்க வழியில்லை. அவர்கள் பேசிக் கொண்டிருந்ததைக் கருணாகரனைத் தவிர வேறு யாரும் கேட்கவில்லை. ஆகவே வழக்கு ஜயித்தால் தம்முடைய அதிர்ஷ்டம்தான் என்ற எண்ணத்துடனேயே அவர் வழக்கை நடத்தினார்.

கடைசியில் சிவசங்கரன் தீர்ப்புக்கூறும் கட்டம் வந்தது. வேலாயுதத்துக்கு உடனே வேலையைத் திரும்பத் தர வேண்டும் என்றும் வழக்கு நடத்த ஆன செலவைத் தொழிலாளர் சங்கத்துக்குக் கருணாகரன் கொடுத்துவிட வேண்டும் என்றும், சிவசங்கரன் தீர்ப்புக் கூறி விட்டார்.

இவ்வளவு சாதகமான முடிவைத் தொழிலாளிகளே எதிர்பார்க்கவில்லை. ஒருவாறு எல்லாருக்குமே சிவசங்கரனுக்கும் மாதவிக்கும் இடையே இருந்த தொடர்பு பற்றித் தெரிந்து போயிருந்தது. ஆகவே வழக்கை அவர் நிச்சயம் டிஸ்மிஸ் செய்துவிடுவார் என்றுதான் எதிர்பார்த்தார்கள்.

ஆதலால் சிவசங்கரனின் கண்ணியத்தையும், நேர்மையையும் பற்றி அன்று கழகமே முழுவதும் மனமாரப் பாராட்டிப் பேசினார்கள்.

வழக்கு முடிந்ததும் தொழிலாளர் சங்கத் தலைவர் சிவசங்கரனிடம் தம்முடைய நன்றியைத் தெரிவித்துக் கொண்டார். சிவசங்கரனுடைய மனம் மிகவும் வேதனையில் ஆழ்ந்திருந்தது. "என் கடமையைத்தானே நான் செய்தேன்? யாருடைய நன்றியையும், வந்தனத்தையும் நான் எதிர்பார்க்கவில்லை" என்று கூறிவிட்டு வேகமாக வீட்டுக்குப் போய் விட்டார்.

வழக்கின் முடிவு தெரிந்ததும் கருணாகரனால் அசையவே முடியவில்லை. "சிவசங்கரன் துரோகம் செய்து விட்டார்" என்ற எண்ணம்தான் அவன் மனத்தில் திரும்பத் திரும்பத் தோன்றியது. அவன் உள்ளத்தை அந்த வழக்கின் முடிவு பெரிதும் பாதித்து விட்டது.

ஜயந்தியின் முகத்தில் என்னமாய் விழிப்பது என்று வேதனைப்பட்டான். தொழிலாளர் சங்கத்துக்குக் கொடுக்க வேண்டிய பணம் கூடத் தன்னிடம் இல்லை என்பதையும், அதை விஜயராகவன்தான் கட்ட வேண்டும் என்பதையும் நினைத்தபோது அவனுக்கு ஒரே அவமானமாக இருந்தது. ஐந்து நிமிஷம் மலைத்துப் போய் உட்கார்ந்திருந்தவன், பிறகு வாசலில் நின்ற விஜயராகவன் காரில் ஏறிக் கொண்டான். கார் அவனை மலைச்சாரல் பங்களாவுக்குக் கொண்டு போய் விட்டு விட்டுச் சென்றது.

மாதவி வாசலில் நின்று கொண்டிருந்தாள். அவனைப் பார்த்ததும் அவளுக்குத் திக்கென்றது. ஒன்றும் பேசவே நா எழவில்லை. அவன் அவளை ஏறிட்டுக் கூடப் பார்க்காமல் நேரே உள்ளே சென்று தன் கட்டிலின் மீது பொத்தென்று விழுந்தான். மாதவியின் கண்களில் நீர் துளித்தது. தன் தம்பி படும் வேதனையைக் கண்டு அவள் வருத்தமடைந்தாள்.

சிவசங்கரன் எவ்வாறு தன் தம்பிக்கு விரோதமாகத் தீர்ப்பு கூறியிருக்க முடியும் என்பது அவளுக்குப் புரியவே இல்லை. கருணாகரனிடம் போய்க் கேட்கவும் மனம் வரவில்லை. அவனுகைப் பேச



அழகப்ப செட்டியார் கல்வி டிரஸ்டின் மானேஜர் திரு டி. வி. எஸ். மணியன் அவர்களின் சகோதரர் திரு கிருஷ்ணமூர்த்திக்கும் திருமதி மங்களத்துக்கும் சென்னையில் சமீபத்தில் திருமணம் நடந்தேறியது.



சென்னை போலீஸ் இன்ஸ்பெக்டர் ஜெனரல் ஆபீஸ் சூபரிண்டெண்ட் திரு சுந்தரேசய்யரின் குமாரி திருமதி பத்மாவதி திரு விசுவநாதனை மே மாதம் ஆறாந் தேதி மணம் புரிந்து கொண்டார்.

வான், அப்போது தெரிந்து கொள்ளலாம் என்று பேசாமல் இருந்தாள்.

சிவசங்கரனாவது வரக்கூடாதா என்று அவள் மனம் ஏங்கியது.

* * *

சிவசங்கரனும் மிகவும் வேதனைப் பட்டுக் கொண்டிருந்தார். 'இது என்ன உத்தியோகம்?' என்று அவருக்குத் தம் வேலையின் மீதே கோபமும் வெறுப்பும் ஏற்பட்டன. ஆனாலும் கடமையைச் செய்தோம் என்ற திருப்தியும் அவருக்குக் கொஞ்சம் ஏற்பட்டது.

மாதவியின் மனம் புண்பட்டிருக்கும் என்று நினைத்தபோது அவருக்குக் கஷ்டமாக இருந்தது. நாளைக்குப் போய் அவளுக்கு விஷயத்தை எடுத்துச் சொல்லிச் சமாதானம் செய்து கொள்ளலாம் என்று நினைத்துக் கொண்டார். அன்றிரவு அவருக்கு சாப்பிட முடியவில்லை. தம் அன்னையிடம் பசியில்லை என்று கூறிவிட்டு, மொட்டை மாடியில் போய்ப் படுத்துக் கொண்டார்.

மாதவி அவர் முன் விதம் விதமான உருவங்களில் வந்தாள். ஒரு சமயம் புன்னகையுடன் தோன்றினாள், ஒரு சமயம் கோபமாக முகத்தை வைத்துக் கொண்டாள். ஒரு சமயம் கண்களில் கண்ணீருடன் ''இப்படிச் செய்து விட்டீர்களே! நியாயமா?'' என்று கேட்டாள்.

இவ்வாறெல்லாம் மாதவியைப் பல வாறு பல தோற்றங்களில் கற்பனை செய்து கொண்டே இருந்தார் சிவசங்கரன். மாதவியைப் பற்றி நினைக்கும்போதே தம் இதயம் அப்படித் தேனாகத் தித்திப்பதை உணர்ந்து வியப்படைந்தார். அவளிடம் தமக்கு உண்டாகியிருக்கும் அன்பும், பாசமும் என்றென்றும் அழியாமல் நிலைத்து நிற்கும் என்ற நம்பிக்கை அவருக்கு ஏற்பட்டது. அவளும் தம்மிடம் அத்தகைய அன்பு வைத்திருப்பதால் இந்தச் சர்தாரண உலக விவகாரங்களையெல்லாம் அவ்வளவாகப் பொருட்படுத்த மாட்டாள் என்று நம்பினார்.

அவளைப் பார்த்துக் கொஞ்ச நாட்களாகி விட்டதென்பது அவருக்கு ஞாபகம் வந்தது. அவளை உடனே பார்க்க வேண்டும் என்ற தாபம் ஏற்பட்டது.

கண்ணயர்வதற்கு முன்னால் 'நாளைக் காலையில் போய் மாதவியைப்பார்த்து விட்டுப் பிறகு மலை மீது ஏறிப் போக வேண்டும். மலையேறி ரொம்ப நாளாகி விட்டது' என்று தீர்மானம் செய்து கொண்டு தூங்கிப் போனார்.

காலையில் எழுந்தவுடனே அவருக்கு முதல் நாள் தாம் நினைத்துக் கொண்டதுதான் ஞாபகம் வந்தது. மாதவியைப் போய்ப் பார்க்க வேண்டும் என்ற ஆவல் கட்டு மீறிக்கொண்டு எழுந்தது. உடனே ஸ்நானம் செய்து விட்டுத் துப்பாக்கியையும் கையோடு எடுத்துக் கொண்டு அவர் கிளம்பினார்.

அன்று அப்படியெல்லாம் நடக்கும் என்று அவர் எதிர்பார்த்திருந்தால் கிளம்பியிருப்பாரா? **(தொடரும்)**

# எமது வியாபாரம் பெற்ற பேறு தங்கமான மனிதர்களின் ஆதரவே...

இத்தகைய தங்கமான மனிதர்களிடம்—ஆம், உங்களிடம் எமக்கு இதயபூர்வமான பற்றுதல் உண்டு. நீங்கள் எதை விரும்புகிறீர்கள், எதை விரும்புவதில்லை, வாங்குவதன் காரணம் என்ன — அல்லது, வாங்காத காரணம் என்ன என்பனவற்றை அறிந்து கொள்ளும் நோக்கத்தோடு எமது மார்க்கெட் ரிஸர்ச் இலாகா தீவிரமாக முனைந்திருக்கிறது.

எமது பேட்டியாளர்களின் குழுக்கள் நாடெங்கும் சுற்றுப்பிரயாணம் செய்கின்றன. ஆங்காங்கு நகரங்களிலும் கிராமங்களிலும் உள்ள குடும்பங்களைப் பேட்டி காண்கின்றன; பெருகிவரும் உங்கள் தேவைகளையும் மாறிவரும் உங்கள் ரசனையையும் குறித்துக் கொள்கின்றன. ஏற்கனவே எமது சரக்குகள் பற்பலவும் உங்கள் குடும்ப நண்பர்களாக ஆகியிருக்கக்கூடும்; எமது பேட்டியாளர்கள் தொகுத்து வரும் புள்ளிவிவரப் படங்களிலும் அறிக்கைகளிலும் ஏற்கனவே நீங்கள் இடம் பெற்றுவருகிறீர்கள். புள்ளிவிவர ஏடுகள் ஒருபுறமிருக்கட்டும். எங்களுக்கு அவற்றைவிட முக்கியம், பன்மடங்கு முக்கியம் நீங்களல்லவா? எவ்வித சிரமத்தையும் பொருட்படுத்தாமல் உங்கள் தேவைக்கேற்ற சேவை செய்வதே குறிக்கோளாக, தரத்திலுயர்ந்த சரக்குகளையே தவறாமல் வழங்கி, நீங்கள் கொடுக்கும் பணத்திற்கு உன்னதமான முறையில் ஈடுசெய்ய என்றென்றும் பாடுபடுவோம்.

குடும்பந்தோறும் தழைத்தோங்க
ஊழியம் புரிவது

**ஹிந்துஸ்தான் லீவர்**





HLL. 4-X29 TM

# தமிழ் கூறும் நல்லுலகம்

## திருவள்ளுவர் திருநாள்

ஜூன் மாதம் 8-ந் தேதி கல்கத்தா பாரதி தமிழ்ச் சங்கத்தில் திருவள்ளுவர் திருநாள் சங்கத் தலைவர் திரு டி. வி. ராஜன் அவர்கள் தலைமையில் வெகு சிறப்பாகக் கொண்டாடப் பட்டது.

வள்ளுவர் தந்த வான்புகழ் திருக்குறளின் தெய்விகச் சிறப்பைத் தமிழரல்லாதோரும் புரிந்து கொள்ளும் வகையில் திரு கே. எஸ். ராமன் அவர்கள் ஆங்கிலத்தில் சொற்பொழிவாற்றினர்.

பேராசிரியர் திரு ராதாகிருஷ்ண ஐயர் அவர்கள் பேசுகையில் " வாழ்வில் எழும் எந்த ஐயத்துக்கும் விடையளித்து வாழ்வுக்கு வழி காட்டும் பெரு நூல் திருக்குறள் " என்று குறிப்பிட்டார்.

சங்கக் காரியதரிசி நன்றி கூறக் கூட்டம் இனிது முடிவுற்றது.

★

ஜூன் மாதம் 11-ம் தேதி ஹௌப்ளி தமிழர் கழகத்தின் சார்பில் திரு சி. எம். ராஜாஜெகதீசன் அவர்கள் தலைமையில் " திருவள்ளுவர் திருநாள் " கொண்டாடப் பட்டது. அவ்வமயம் திருவாளர்கள், நடராஜன், இரா. கிருஷ்ணமூர்த்தி, துரைராஜ், ராமகிருஷ்ணன், கி. சீனிவாசன் ஆகியோர் " வள்ளுவரும் குறளும் " என்ற பொருள் பற்றிச் சிறந்த முறையில் சொற்பொழிவாற்றினார்கள். தலைவர் தம்முடிவுரையில் தமிழர்கள் அனைவரும் திருவள்ளுவரை இறைவனாகவும், அவர் அருளிச் செய்த திருக்குறளைத் தெய்வ நூலாகவும் போற்றுவதோடு ஒவ்வொரு நாளும் ஒவ்வொரு குறளாவது கற்றறிய வேண்டுமெனக் கேட்டுக் கொண்டார்.

பின்னர் விழாவில் கலந்து கொண்ட அனைவருக்கும் தேநீர் வழங்கப்பட்டது. செயலாளர் நன்றி கூறலுக்குப் பின் நாட்டுப் பாடலுடன் விழா இனிது முடிவுற்றது.

★

வள்ளுவப் பெருந்தகை அருளிய தெய்வத் திருக்குறள் விழாவை ஜூன் மாதம் 11ம் தேதி டெல்கோ தமிழ்ச் சங்கத்தினர் ஸ்ரீ கோவிந்தராஜன் தலைமையில் வெகு சிறப்பாகக் கொண்டாடினர். குறளின் கால வரையறை பற்றியும், மேன்மை, நூல் நயம் பற்றியும் பல அன்பர்கள் பேசினர்.

## மாணவர் மன்ற விழா

கங்கைக் கரையில் காசினித் தமிழை வளர்த்து வரும் கல்கத்தா தமிழ் மாணவர் மன்றத்தினர் கடந்த 24-5-57 முதல் 1-6-57 முடிய நான்காவது ஆண்டு விழாவினைச் சிறந்த முறையில் கொண்டாடினார்கள்.

பேராசிரியர் திரு இ. க. இளவழகனார் அவர்கள் சிறப்பு விருந்தினராக விழாவில் கலந்துகொண்டு பத்து நாட்கள் தித்திக்கும் செந்தமிழில் தேன் பாகாய்ச் சொற்பொழிவாற்றி வங்கம்வாழ் தமிழன்பர்களைத் தமிழ்க் கடலில் திளைக்கச் செய்தார்.

கல்கத்தா பல்கலைக் கழகத் துணைவேந்தர் திரு என். கே. சித்தாந்தா அவர்கள் விழாவைத் துவக்கி வைத்தார். வங்க மொழியில் அன்னாருக்கு வரவேற்பிதழ் வாசித்தளிக்கப் பட்டது. சித்தாந்தா தமது உரையில் " தமிழர்கள் எம் மொழியினையும் சுலபமாகக் கற்றுக் கொள்ளும் ஆற்றலை எடுத்துக் காட்டியது உங்கள் வரவேற்பிதழ் " என்று பாராட்டினார். ஏ. வி. எம். ஸ்டூடியோ உரிமையாளராகிய திரு ஏ. வி. மெய்யப்பன் அவர்கள் மன்ற உறுப்பினர்களுக்குப் புலமை வளர் நல்நிதி (Scholarship) வழங்கியது குறித்துப் பாராட்டிப் பேசினார். அவர்போல மற்றவரும் இந்தத் துறையில் பணி செய்யக் கேட்டுக் கொண்டார்.

விழாவில் மேற்கு வங்கத்தில் இருக்கும் தேசிய நூல் நிலையத் தலைவர் திரு பி. என். கேசவன் அவர்களும், கிழக்கு பிராந்திய ரயில்வேயைச் சேர்ந்த திரு எஸ். சாரங்கபாணி அவர்களும் கலந்து கொண்டு விழா வுரையும், போற்றி உரையும் நிகழ்த்தினார்கள்.

விழாவில் நான்கு நாட்கள் பேராசிரியர் இளவழகனார் அவர்கள் தமிழ் முதுபெரும் புலவர்கள் யாழ்ப்பாணம் திரு சி. வை. தாமோதரனார், பண்டிதமணி கதிரேசனார், ஆராய்ச்சி மன்னர் திரு எஸ். வையாபுரியார், பெரும் புலவர் திரு பரிதிமாற் கலைஞர் முதலியோரின் திருவுருவப் படங்களைத் திறந்து வைத்து அவர்கள் ஆற்றிய தமிழ்த் தொண்டுகளை விளக்கினார்.

விழாவில் முதல் இரண்டு நாட்கள் திரு கே. கே. கோஷ், திரு லோக மித்ரா, திரு பிரதாப் குமார், திரு நிர்மல்குமார் குழுவினர்களின் வங்க இசையும், வாத்திய இசையும், திரு என். எஸ். வைத்தியநாதன் குழுவினரின் தமிழிசையும் போற்றத்தக்க முறையிலே அமைந்தன.

## ராமாயண உபன்யாசம்

பம்பாயை அடுத்துள்ள கல்யாணில் வாழும் தென்னிந்திய மக்கள் சென்ற 27 ஆண்டுகளாக வளர்த்து வருகிற தென் இந்திய சங்கத்தின் சார்பில், ஸ்ரீ வாணி வித்தியா சாலையில் 15-5-57 முதல் 2-6-57 வரை ஸ்ரீவில்லிப்புத்தூர் ஸ்ரீ இராமானுஜ அய்யங்கார் செய்தருளிய ஸ்ரீ ராமாயணப் பிரவசனம், இங்குள்ள மக்களைப் பரவசப் படுத்தியது. மேற்படி சுவாமிகள், வடமொழி தென்மொழிகளில், சைவ, வைஷ்ணவ நூல்களிலிருந்து மேற்கோள் கூறி ராமாயண தத்துவார்த்தங்களை உணர்த்தியது, மெச்சத்தக்கது. கல்யாண் பகுதி வாசிகள், இதுவரையில் கண்டிராதபடி குழுமி, உத்ஸாகத்துடன் 2-6-57 ஸ்ரீ ராம பட்டாபிஷேகத்தில் கலந்து கொண்டு உள்ளம் மகிழ்ந்தனர்.

ஒரு இன்ஷ்யூரன்ஸ் ஏஜெண்டின் டயரியிலிருந்து

# பஸ் நேரங் கழித்து வந்தது...

அவன் நிமிர்ந்து பார்த்தான். சுற்றிலும் எங்கும் இருண்ட மேகங்கள் கவிந்துகொண்டிருந்தன. மரத்தடியில் நின்று கொண்டிருந்த வழிப்போக்கர்கள் மீது மின்னொளி பளீரென்று வீசியது. "இன்றைக்கு பஸ் வந்துதான் சேருமா?" என்று அலுத்துக்கொண்டே அவன் கத்தினான்.

கோபால் என்னுடன் கூறிய கடைசி வார்த்தைகள் இவைதாம். கடைசியில் பஸ் வந்துசேர்ந்தபொழுது, மரத்தின் மீது மின்னல் தாக்கியிருந்தது. பலர் விபத்துக்குள்ளாகி ஒருவர் இறந்தார்.

சில மாதங்களுக்குப்பின், கோபாலின் தகப்பனார் என்னைப் பார்க்க வந்தார். "எங்கள் குடும்பத்தில் கோபால் ஒருவன் தான் சம்பாதித்துக்கொண்டிருந்தான். அவன் இன்ஷ்யூரன்ஸ் பாலிஸிகூட இப்பொழுது உபயோகமற்றுவிட்டது" என்று மிகுந்த மனச்சோர்வுடன் கூறினார் கிழவர். கொடுத்த தஸ்தாவேஜுகளைப் புரட்டிப்பார்த்ததும், கடைசி இரு பிரீமியங்கள் கட்டப்படவில்லையென்பது தெரியவந்தது. ஆகவே, பாலிஸி நிச்சயமாகக் காலாவதியாகி யிருக்கவேண்டும்.

இவ்வாறு எண்ணமிட்டவாறு அவரிடம் திரும்பக் காகிதங்களைக் கொடுக்க இருக்கையில், எனக்கு ஒரு யோசனை புலப்பட்டது. அந்தப் பாலிஸியை மீண்டும் அலசி ஆராய்ந்தேன். ஆம்! உண்மைதான்! அதில் 'ஆட்டோமாடிக் நான்-பர்பீச்சர்' ஷரத்து அடங்கியிருந்தது. அதன்படி சிலகாலத்திற்குப் பிரீமியங்கள் கட்டப்படவில்லையென்றாலும், வழக்கம்போல் பாலிஸி அமுலில் இருந்துவரும்.

ஆகவே தாமதமின்றி அந்தப் பாலிஸி தொகையை பைசல் செய்ய ஏற்பாடு செய்தேன். வறுமையில் உழலும் கோபாலின் குடும்பத்தினருக்கு உடனடியாக பாலிஸித் தொகை வழங்கப்பட்டது. ஒருவர் இன்ஷ்யூரன்ஸ் ஏஜண்டாக இருப்பதால், உதவி தேவையாயிருப்பவர்களுக்கு ஆலோசனை சொல்லவும், ஒத்தாசை புரியவும் முடியும். அது ஒரு தனி உரிமையும் கடமையும் ஆகும்.

* இந்த சம்பவத்தில் சம்பந்தப்பட்டவர்களின் பெயர்கள் யாவும் கற்பனைப் பெயர்களே. ஆனால் இந்த சம்பவம் உண்மையில் நடந்தது.



**லைப் இன்ஷ்யூரன்ஸ் கார்ப்பொரேஷன் ஆப் இந்தியா**

ASP/LIC 14

# அபிவிருத்தி செய்யப்பட்ட

# அம்பர் சர்க்காவுக்குப் பரிசு

○ ● ○

இந்திய சர்க்கார் முன்பிருந்த அகில இந்திய கதர், கிராமக் கைத்தொழில்கள் போர்டுடன் கலந்து ஆலோசனை செய்து, குடிசை நூற்பு இயந்திரம் யூனிட்டு கண்டு பிடிப்பதில் வெற்றி பெறுவோருக்கு ரூ. 1,00,000 பரிசு அளிப்பதென்ற தங்களுடைய தீர்மானத்தைச் சென்ற ஜனவரி மாதம் வெளியிட்டனர். அப்போது அறிவிக்கப் பட்ட அந்தப் பரிசு அளிப்பதன் சம்பந்தமான முக்கிய நிபந்தனைகளாவன:

1. கண்டு பிடிக்கப்படும் இயந்திரத்தில் நான்கு அல்லது மேற்பட்ட கதிர்கள் கூடிய சர்க்கா இருப்பதுடன் திறம்படத் திறப்பதற்கும் சுத்தம் செய்வதற்கும், கற்றுவதற்குமான உபகரணங்கள் இருக்க வேண்டும்.

2. நூற்பு இயந்திர செட்டு கிராமப் பகுதிகளில் மிகச் சிறிய குடிசைகளிலும் கையால் அல்லது காலால் வேலை செய்யக்கூடியதாக இருக்கவேண்டும்.

3. முழு செட்டின் விலை பெருவாரியாகத் தயாரிக்கப்படுமாயின் ரூ. 150/-க்கு மேல் போகக் கூடாது.

4. இந்திய பஞ்சு வகைகளான வகட், விஜய், புரோச் விஜய் (கொட்டைப் பஞ்சு) அல்லது நாட்டில் வழக்கமாகப் பயிராகும் இதர பஞ்சு வகைகளைக் கொண்டு செட்டில் நூல் நூற்கக்கூடிய வசதி யிருக்க வேண்டும்.

5. 12 முதல் 16 நெம்பர், 18 முதல் 20 நெம்பர், 20 முதல் 32 நெம்பர், 32 முதல் 40 நெம்பர் மற்றும் 40 முதல் 60 நெம்பர் நூல் வகைகளை செட்டு நூற்கக் கூடியதாக இருக்க வேண்டும். ஒரே மாதிரியான கனமும் முறுக்கும் கொண்டு நூற்கக் கூடியதாயும் அதைத் தவிர புரு இழை நெம்பர் மாறுதல், உறுதியில் வித்தியாசம், மற்றும் நிர்ணயிக்கப்படக் கூடிய இதர சோதனைகளிலும் தேர்வு பெறக்கூடியதா யிருக்க வேண்டும்.

6. செட்டு மொத்தத்தில் 8 மணி நேர வேலை தினத்தில் குறைந்த பக்ஷம் (பருத்தியிலிருந்து நூல்வரை) கார்டிங் வேலையில் மணி ஒன்றுக்கு 14 முதல் 15 தோலா முடிக்கக் கூடியதாயும் கற்றுவதில் மணி ஒன்றுக்கு 5 முதல் 8 தோலா முடிக்கக் கூடியதாயும் 12 கண்டு நூல் உற்பத்தி செய்யக்கூடிய திறன் வாய்க்கப் பெற்றிருக்க வேண்டும். மற்றும்,

7. செட்டு, கிராமங்களில் குறிப்பாக அதில் வேலை செய்பவர்களாலேயே அல்லது கிராமத் தொழிலாளர்களால், பூட்டக்கூடியதாயும், பழுது பார்க்கக் கூடியதாயும், சர்விஸ் செய்யக்கூடியதாயும் இருக்க வேண்டும்.

குடிசை நூற்பு இயந்திரயூனிட்டின் விரும்பப்படும் திலுசின் காகிதச் சித்திரங்கள், அது பற்றிய விளக்கக் குறிப்புகள், அதன் சம்பந்தமான திட்டமான விவரங்கள், அதன் திறமைச் சோதனைகள் பற்றிய குறிப்புகள், அதன் உற்பத்திக்கு அவசியமான மூலப் பொருள்கள் கிடைக்குமிடம், அதன் உறுப்புகளை உருவாக்குவதற்குள்ள வசதிகள் முதலிய விவரங்கள் அதைக் கண்டு பிடிப்பவர்களிடமிருந்து வரவேற்கப்பட்டன. மாடல்கள், டிஸைன்கள், குறிப்புகள், மற்றும் அவசியமான தகவல்களைச் சமர்ப்பிக்கும், தேதி 1957 ஜூன் 30-ம் தேதியாக இருந்தது. ஏற்கெனவே, பன்னிரண்டு பேர்களுக்கு மேல் பரிசுக்கான தங்கள் விண்ணப்பங்களை அனுப்பிவிட்டார்கள். தாங்கள் கண்டு பிடித்துள்ள மாடல்கள், டிஸைன்கள், குறிப்புகள், மற்றும் அவசியமான தகவல்களை அனுப்ப விரும்புவோருக்குப் போதிய வசதி அளிப்பதற்காக மேற்படி தேதி 1957 ஜூலை மாதம் 31-ந் தேதியாக நீடிக்கப்பட்டிருக்கிறது. பரிசுத் திட்டம் சம்பந்தமான விவரமான விதிகள் வேண்டுபவர், Chief Executive Officer, Khadi and Village Industries Commission (Prize Scheme), Mistry Bhavan, Dinshaw Wacha Road, Bombay—1. என்ற விலாசத்துக்கு எட்டு அணா அனுப்பி எழுத்து மூலம் விண்ணப்பம் செய்து கொள்ளலாம்.

DA - 924 (1)

# இருளன் கைத்தாலி

துரோணன்

"தாத்தா...!"

"......."

"ஏ, தாத்தாவ்...!"

இருளனின் உரத்த கூப்பாடுகளுக்குப் பதில் கிடைக்கவில்லை. தலைக்கு நேர்மரத்திலிருந்த பறவைகள்தாம் படபடவெனச் சிறகடித்த வண்ணம் 'கிறீச்'சிட்டன. அப்பொழுது அந்திப் பொழுது முடிந்து அரைநாழிகையாகியிருந்தது. நீட்டிய கையின் ரேகை மறைந்து விட்டது. அது பயங்கரமான வேளை. சற்று நேரத்துக்கொருதரம் வெளியாகும் கோட்டானின் உறுமலையும், ஆந்தையின் சிறலையும் தவிர்த்து எப்பொழுதும் நிசப்தம் தான். ஆனால், இருளனுக்கு இதை யெல்லாம் பற்றி என்ன பயம்? அவனே ஒரு மயான ருத்திரன்தானே!

மூன்றும் முறையாகத் தாத்தாவைக்கூப்பிட வாயெடுத்தவன் நிறுத்திக் கொண்டான். அவன் நினைத்தபடி அவனது தாத்தா சுமைதாங்கியினில்லையென்பதைத் தெரிந்து கொண்டான். நேர்ப்பாதையைத் தாண்டித் திரும்பியதும், அங்கிருந்த நிலைமைகள் அவனுக்குத் தெரிந்தன. படுகை சமீபமாக இருந்த ஒட்டுக் கட்டடத்தினுள் ஒரு சிதை எரிந்து கொண்டிருந்தது. சற்றுத் தூரத்திலிருந்த வெறும் வெளியினிலும் — மற்றொரு சிதை எரிய மனமில்லாமல் இலேசான புகை விடுத்துக் கொண்டிருந்தது! அவனது தாத்தாவும் அங்கேதான் காணப்பட்டான். பரவிக்கிடந்த எரி முட்டைகளை முறித்து, சிதையின் மேலும் கிழமாகச் செருகுவதில் அவன் ஈடுபட்டிருந்தான்.

இருளன் சமீபித்து விட்டான். "என்ன, தாத்தாவுக்கு வரவரக் காதுகூட மந்தமாப் பூடிச்சா? நூறு வாட்டிக் கூப்பிட்டேனே தாத்தா—?" என்றான் சிறு நகைப்புடன்.

கிழவன் சட்டென்று எழுந்தபடியே, "வாடாப்பா மகாராசா! நல்லவேளையாக இப்போதாவது வந்து சேர்ந்தாயே. எங்கே பயாகோப்பு பார்க்கப் பூட்டியோன்னு நினைச்சுட்டேன். இந்தா — உன் ராஜாங்கத்தை நீயே ஏற்றுக்கோப்பா—எனக்குப் போதும்! இதை வாங்கிக் கொள்!" என்று கூறித் தன் மடியை அவிழ்த்து, அதிலிருந்த நாணயங்களை அள்ளி இருளனின் கரங்களில் போட்டான்.

அவன் அதை எண்ணிப் பார்த்துவிட்டு, "ஏயப்பா! ஏது தாத்தா ஏழு ரூபாய்?"— என்றான் ஆச்சரியத்துடன்.

"எனக்குத்தான் தொழிலு மறந்து பூடிச்சின்னியே! அதோ — கட்டடத்துலே எரியுதே—அதுக்கு அடிச்ச அடியிலே ஆறு ரூபாய் கறந்துவிட்டேன். இதற்குத்தான், ஆயிரத்தெட்டு வழக்கெல்லாம் பேசி, விராட்டிக் காசு வாங்கறத்துக்குள்ளே நாயாக் குலைச்சேன்!"

"அதுதான், அதைப் பணக்காரப் பிணம்னு சொன்னியோ? அது விலாசம் யாரு—இது யாரு?" என்று கேட்டான் இருளன்.

"அது யாரோ—வடக்குத் தெருவு மிராசுதாராம். இது—" கிழவன் செய்தியை முடிப்பதற்கு முன் இருமத் தொடங்கி விட்டான். முடிவாக, "இது வளையல்காரங்க வீட்டுப் பெண்ணாம். அது போகட்டும், இப்போ நான் வந்திருக்கிற சேதிக்கு முடிவாக என்ன சொல்லுறே?" என்றான்.

"நீ வந்த சேதிக்கு என்ன? இப்பொழுதே எட்டரை மணி வண்டிக்கு நீ ஊருக்குப் போய் விடு. சந்தையிலேயிருந்து பாட்டிக்குப் பிடித்த சாமான்களெல்லாம் வாங்கியாந்திருக்கேன். சேட்டுக்கடைப் பலகாரம், வெட்டிவேரு, மருக்கொழுந்து—"

"எலே! எம்மாம் கிருத்திருமம்டா உனக்கு. இப்போ எல்லாத்தையும் விட்டுக் கிழவிக்குத்தான் வாழ்வு வந்திருக்குதோ? நான் வந்த சங்கதி — கண்ணாலச் சங்கதிக்கு; நீ என்னடாண்ணா, என்னமோ அரட்டைக் கல்வியெல்லாம் படிக்கிறாயே? இதோடு உன்னிடம் நாலாவது தடவை வந்திருக்கேன்!"

"தாத்தா—நீ நாலாவது வாட்டி என்ன? நாலாயிரம் தடவை வேணுமானாலும் வந்து போயிக்கிட்டிரு. உனக்கு வேண்டியதெல்லாம் நான் செய்து வைக்கிறேன். ஆனால், மூக்கன் மகளை எனக்குக் கட்டி வைக்கிற பேச்சை மாத்திரம் விட்டுவிடு—"

"அவங்க யாரு, நாம்ப யாரு? உன் அத்தை மகளைப் பற்றித் தானேடா பேசறேன்? உனக்கும் அவர்களுக்கும் இதோடு விட்டுப் போய் விட்டதா? ஏதோ, அப்போயிருந்த காகத்திமிரு அவர்களுக்குப் புத்தி மாறிவிட்டது. அதற்கேற்றாற் போலே, சிங்கப்பூரானும் வந்து சேர்ந்தான். காசும் காசும் ஒன்றாகச் சேரவே பெற்றவனுக்குப் போதை ஏறி விட்டது. இவ்வளவுதானே?"

"தாத்தா, எனக்கு வேணும், அவர்கள் உறவு. அத்தை, அத்தை புருசன். ஆனால், உனக்கு மகள், மருமகன்தானே? நீ அப்போ இந்த நீதி, நியாயமெல்லாம் எடுத்துச் சொன்னியா?"

"ஏண்டா மடப்பயலே! நான் சொல்லாமே இருப்பேனாடா? அந்தக் குட்டி—அழகாயியும் நீயும் எப்படி யிருந்தீங்கன்னு எனக்குத் தெரியாது? காசுப் போதையிலே முழுகிக் கிடந்தவர்களுக்கு யார் வார்த்தைதான் ஏறிச்சு? ஏதோ கிழட்டுப் பொணம் பிதற்றுகிறது என்றுதானே என்னை அவர்கள் நினைச்சாங்க?"

"ஏன், இப்போ மாத்திரம்?"

"இப்போதான் போதை யெல்லாம் தெளிந்து விட்டதே! நல்லவேளையா, அந்தப் பெண்ணுக்குக் கழுத்திலே தாலி யேறுகிற



தற்கு முன்னாடியே, அந்தச் சிங்கப்பூர் கேடிப் பயலைக் கொண்டு போய் விட்டார்கள்! இதுவும் நம்ப குலதெய்வம் இருளன்தான் காப்பாற்றினான். இல்லாட்டிப் போனால், அது—கட்டின தாலியோட கன்னியாகத் தான் நிற்கும் இப்போ...?''

''இதெல்லாம் சொல்கிறாயே, அந்தப் பெண்ணுக்குத்தான் அறிவு எங்கே போயிருந்தது? அதுக்கு மனச்சாட்சி இல்லே? சிங்கப்பூர் சோப்புக் கட்டியைக் கண்டதும் மதிமயங்கிப் போய் விட்டாளே!''

''ஏய்! அந்தமாதிரி மாத்திரம்—இன்னொரு தடவை நினைக்கடாதே. அந்தப் பொண்ணுக்கு அடி, அடிக்குமேலே அடி, திட்டுன்னு இருந்திச்சின்னு, பாவம்-அது என்னதாண்டா செய்யும்? ஏதோ, பூவு கசங்கிட்டாலும், வாசம் போகாமல் இருக்கிறப்பிலே—அந்தப் பொண்ணு மனசு இன்றைய வரைக்கும் கட்டுக்கோப்பா இருந்திருக்குது பாரு—அதைத்தான் நினைக்கப் பார்க்க வேணும். வருசம் இப்போ அருகி விட்டது—''

''தாத்தா, நீ எவ்வளவு சமாதானம் சொன்னாலும் என் மனசு ஒத்துக்காது. என்னயிருந்தாலும், பரிசம் போட்ட பொண்ணு படைச்செடுத்த பணியாரம்தானே? நீ உன் மருமவனை மூக்கன்னு மட்டிலும் நினைக்காதே. அவன் மூர்க்கன்! அவனுக்குப் பிறந்த மகள் எப்படியிருக்கும்? செவ்வந்திக்குக் கட்டின தாலியை இப்போ இவளுக்குக் கட்டுகிறதானால்...'' இருளன் தன் வார்த்தையை முடிக்க முடியாமல் பெருமூச்செறிந்தான். அவனது தொண்டைக்குள் அடைபோலு ஏதோவொன்று சிக்கிக்கொண்டு விட்டது போலும்! ஆனால், கிழவனுக்கும் அதே சமயத்தில் விழிகளில் அரும்பு கட்டிவிட்ட கசிவுகளை அவ்விருள் இரகசியமாகவே மறைத்து வைத்து விட்டது.

சற்று நேரத்துக்குப் பின், கிழவன் தொண்டையைக் கனைத்து விட்டுக் கொண்டான். ''அதையெல்லாம் பற்றி இப்போ ஏன் தம்பி நினைக்கணும்? அது ஏதோ — உன்னிடம் மூணேமுக்கால் நாழிகை வாழ்ந்துவிட்டு, மஞ்சக் கயிற்றோடு தெய்வமாயிடுச்சு. இனிமேல் பட்டு—இருளன் கைத்தாலி இரும்புத் தாலிதான்! நீ மனசைப் போட்டு அலட்டிக்காதே'' அவனது வார்த்தைகளில் பரிவு நிறைந்திருந்தது.

சிலைபோல் நின்று கொண்டிருந்த இருளன், அப்பொழுது திடீரென்று ஆவேசம் வந்தவன் போன்று துள்ளினான். அவன் உள்ளத்தினுள் ஏதேதோ புதியதாக ஊறிவிட்டன! ''தாத்தா! நீ எப்படி வேணும்னு னும் நினைச்சுக்க. அவர்கள் சங்காத்தியமே எனக்கு வேண்டாம். அவர்கள் வைக்கிற மதிப்பெல்லாம் எனக்கில்லே, என்னிடம் உள்ள காசுக்குத்தான்! இனி, இதைப்பற்றிப் பேசிக்கிட்டு இன்னொரு தடவை வராதே. இப்போ எட்டரை மணி வண்டிக்கு உனக்கு நேரமாயிடுச்சு. எனக்கு எப்போ கண்ணாலம் பண்ணிக்கணும்னு தோணுதோ, அப்போ பேசிக்கலாம்'' என்றான். சடசடவென்று கையிலிருந்த பொட்டலங்களையும் பூவையும் அவனிடம் நீட்டினான்.

பாவம்! கிழவன் ஸ்தம்பித்தபடியே நின்றுவிட்டான். இருளனின் வார்த்தைகளும் செய்கையும் அவன் மனத்தில் பலவித விகாரங்களையும் தாண்டிவிட்டன. அவன் பெரிதாக மதித்து வந்த பேரன் அவனை மதிக்கவில்லை. கையிலுள்ள பொட்டலத்தைக் குட்டைச் சுவரில் வைத்தபடியே, ''ஏய் இருளா! ஏதோ, குடும்பத்துக்கு நான் ஒரு பெரிய கட்டை இருக்கேனென்னுட்டுத்தான், நாலாம் தடவை உன்னை மதிச்சு வந்தேன். உனக்கு இப்போ வயசு இருபத்தெட்டு பிறக்கப் போவுது. அந்தக் குட்டிக்கு வயசு இருபத்தி நாலாவுது. போனதெல்லாம் போக, இனியாவது இந்த வாலிபக் காலத்திலே சந்தோசமா இருக்கட்டும்னு ஆசைப்பட்டுத்தான் ஓடி வந்தேன். இப்போ அங்கேயிருக்கிற நிலவரம் அந்தப் பொண்ணு அழுது அழுது கட்டெறும்பாகத் தேய்ந்து போய் நிற்குது. அது உன் காசையும், பணத்தையும் பற்றி அன்றைக்குப் நினைக்கில்லே, இன்றைக்கும் நினைக்கில்லே. உனக்குக் கஞ்சி கொண்டு வந்து கொடுக்க வேணும்னு நினைக்குது. உன் அரைத் துணியைத் தன் கையாலேயே துவைச்சுக் கொடுக்க வேணும்னு ஆசைப்படுது—இவ்வளவுதான். இதைக் கேட்டாலுங்கேளு, விட்டாலும் விடு. நாளைக்குக் காலம் போவும் — வார்த்தை நிற்கும்!'' என்றான். அவனே தொடர்ந்து பேசினான்: ''நம்ப வழக்கப்படி, நாம்தான் பெண்ணைக் கொடுக்கிறியா என்று கேட்டுப் பரிசம் போடணுமே தவிர, பெண்ணைப் பெத்தவங்களுக்கு ஏதடா அக்கறை? உன் விசயமா அங்கே எடுத்துப் பேச, என்னைத் தவிர உனக்கு நாதியுமில்லே. இதையெல்லாம் மறந்துவிட்டு, நீயென்னை விரட்டி விரட்டி

யடிக்கிறாய். நான் போகிறேன்—இனி இது விசயமா நானும் உன்னிடம் வருவேன்னு கனவுகூடக் காணாதே! அப்புறம் ஏதாச்சும் பெண் பாவம் வந்திருச்சின்னா நான் பொறுப்பில்லே!'' என்று மிருந்த மிடுக்காகக் கூறிவிட்டு, மறு வார்த்தை எதிர்பாராமலே கிளம்பி விட்டான் கிழவன். அவனது நடையின் வேகத்தில் என்றுமில்லாத பதற்றமும், துடிப்பும் நிறைந்திருந்தன.

★

ஆறு வருஷம்! ஆறு வருஷ வாழ்க்கையும் இன்றைக்கு இருளனின் மனத்துக்கு ஆறு நிமிடங்கள் போல் கழிந்தவை. ஊரைவிட்டு ஊர் வந்து, இந்த மயானத்துக்கு மன்னனாக முடி சூட்டிக் கொண்டது முதல் ஓய்ச்சல் ஒழிவில்லை. நாளொன்றுக்குச் சராசரி இரண்டோ மூன்றோ—அவனுக்குக் கிராக்கிகள். வரும்படியிலும் குறைவில்லை. ஒண்டிக்கட்டை. மார்வாரி பாங்கியிலே அவனது பொக்கிஷமெல்லாம் முடங்கிக் கிடந்தது. இதுதவிர, வள்ளுவச்சேரி தவணைச் சீட்டுகளுக்கு அவன் முதலாளி. இவ்வளவுமிருந்தும் ஒரு நல்ல நாளும் கிழமையும் அவனுக்கேது? 'பொழுது விடிந்தால் பொழுது போனால் இந்தக் கடைசிக் கல்யாணங்கள்தான்' அவன் கண்ட வாழ்வு!

இத்தகைய வாழ்க்கையைப் பற்றி இருளனுக்குச் சலிப்புமில்லை, சந்துஷ்டியுமில்லை, விருப்புமில்லை, வெறுப்புமில்லை. எதையாவது நினைத்துக் கொண்டால் தானே இப்படி ஏதாவது ஏற்படும்? கிழவன்வீரப்பனுக்கு இருளன் மகன் வயிற்றுப் பேரன். அழகாயி மகள் வயிற்றுப் பேத்தி - அதாவது, இருளனுக்கு அவள் அத்தை மகள். இந்த நிலையில் மாமன் மகனுக்கும், அத்தை மகளுக்கும் முடி போட்டுப் பேசுவது சர்வ சகஜம்தானே?

அழகாயி பளபளவென்ற பொன்மேனியுடன் பதினேழு வயதுக் குமரியாகப் பூத்துக் குலுங்கினாள். பழைய நட்புகளும், ஞாபகங்களும் ஒன்றாகக் கூடி, அவர்களது கனவை வலுவடையச் செய்து கொண்டிருந்தன. இப்படிச் சில மாதங்கள்தான். அதன் பின்னர்தான் சிங்கப்பூர் மாடன் காதலுக்கு இடையூறாக வந்து சேர்ந்தான்!

மாடனின் பாட்டன் முப்பாட்டன் காலமெல்லாம் மயானத்து வெட்டிப் பிழைப்பிலேயே கழிந்த போதிலும், அவனது தகப்பனுடன் சிங்கப்பூரிலிருந்து விட்டு வந்த வாழ்வுதான் அவனைப் பெரிய மனிதனாகவும், காசுக்காரனாகவும் மதிப்பிடும்படி செய்தது. அவனுடைய நடையுடைகளும், வகை வகையான நாகரிகச் சாமான்களும் சேர்ந்து மூக்கனையும் அவன் பெண்சாதியையும் மதி மயக்கி வைத்து விட்டன. ஏறக்குறைய இரண்டு மாதப் பழக்கங்களுக்குள்ளாகவே மாடனுக்கு அழகாயியைக் கட்டிக் கொடுத்து அவனை மருமகனாக்கிக் கொண்டு விடுமளவுக்கு அவர்கள் தீர்மானித்து விட்டார்கள். ஆனால் அத்தகைய மதிப்பு வாய்ந்த மாடன், போலீஸ்காரன் தலையைக் காணும்போதெல்லாம் பதுங்கிக் கொண்டிருந்தான் என்பதை அவர்கள் எப்படி அறிவார்கள்?

கடைசியாக, அநேக வம்பு தும்புகளெல்லாம் நடந்து ஒருவாறாக ஓய்ந்தன. வீரப்பனின் மிரட்டு உபதேசங்களுக்கோ, அழகாயியின் அழுகுரலுக்கோ யார் மதிப்பு வைத்தார்கள்? குல தெய்வமான வீரபத்திரன், காட்டேரி சாட்சியாக அழகாயியை மாடனுக்குக் கட்டிக் கொடுத்து விடுவதற்குப் பாக்கு வெற்றிலை வைத்துப் பலர்முன்னிலையில் பரிசமும் போட்டு விட்டார்கள்.

காலமெல்லாம் காத்துக் கிடந்த இருளன், கலக்கத்துடன் கிளம்பினான். அன்றிரவே பக்கத்து ஊருக்குச் சென்று அங்கிருந்த செவ்வந்தியைக் கட்டிக் கொள்ளுவதற்குப் பரிச



றும் போட்டு, மறு எட்டாம் நாளே அவனுக்குத் தாலியும் முடிந்து விட்டான். அவளும் அவனுக்கொரு விதத்தில் முறைமைப் பெண்ணான அத்தை மகள்தான். தாயும் தந்தையுமற்ற அவள், மாமன் வீட்டில் அநேகம் கொடுமைகளுக்கிடையில் வளர்க்கப்பட்டு வந்தாள். இருளனுக்கு வாழ்க்கைப்பட்ட அவள், மகா பாக்கியசாலி தான். ஆனால் பாவம்! அவள் வாழ்வுக்கேற்பட்ட மலர்ச்சியை அனுபவிக்க முடியாதவாறு செய்து விட்டார் கபடம் மிகுந்த கடவுள். அவனுக்கு வாழ்க்கைப்பட்டபின் அவள், பத்தே தினங்களுக்குள் விஷம் தீண்டிய தன் வினையாக மரித்து விட்டாள். இதன் பின்னர்—இருளனுக்கு வேறு என்ன அதிர்ச்சி வேண்டும்? ஊரையும் வாழ்க்கையையும் வெறுத்து விட்டு ஓடினவன் தான். எவ்வளவோ ஊர்களை யெல்லாம் சுற்றிவிட்டு, கடைசியாகத் தன் பழைய ஊருக்கே வந்து சேர்ந்து விட்டான்.

இவற்றுக்கிடையில், அழகாயியின் கழுத்தில் மஞ்சள் சரடு ஏறுவதற்கு நான்கு நாட்கள் முன்பாகவே, மாடனைப் போலீசார் தேடி வந்து அழைத்துப்போய் விட்டனர்! அவன், எங்கேயோ பட்டணத்துப் புறத்தில் நடந்த கொலையில் சம்பந்தப்பட்டவனென்றும், பல மாதங்களாக இங்கு வந்து பதுங்கியிருந்தவனென்பதும் வெட்ட வெளிச்சமாகி விட்டன. இதன் விளைவாகவே, வழக்கு, வியாச்சியங்களெல்லாம் ஏற்பட்டு, மூக்கனின் காசு பணங்கள் கரைந்ததுடன் அவன் மட்டும் தப்பினான்.

இப்பொழுது ஆறு வருஷங்கள் ஓடிவிட்டன.



கிழவன் இருளிடையே மறைந்து வெகு நேரம் வரையில் இருளன் அத்திசையையே நோக்கியபடி நின்று கொண்டிருந்தான். எதேச்சையாகத் திரும்பியவன் — சற்றே திடுக்குற்று விட்டான். கிழவனிடம் கொடுத்த பொட்டணங்களெல்லாம் குட்டைச் சுவரின் மீது வைத்தபடியே யிருந்தன. பாட்டன் கூறிய இரண்டொரு வார்த்தைகள் அவன் நெஞ்சில் முள்ளாக உறுத்தத் தொடங்கின. "பெண் பாவம்—பெண் பாவம்" என்று அவனது வெளி யுதடுகள் தாமாகவே முணு முணுத்தன. கைப் பொட்டணங்களினிடையே யிருந்த மரிக்கொழுந்தின் மணம்—ஆறு வருஷங்களையும் கடந்து அவனது நினைவுகளைப் பின் பக்கத்துக்கு இழுத்தது.

அப்பொழுது பத்து வருஷங்களுக்குப் பின், இரண்டாம் தடவையாக, அவன் காட்டுப் புத்தூருக்கு வந்து கொண்டிருந்தான். தகப்பனும் தாயும் மறைந்து விட்ட துயரங்கள் ஒரு புறத்திலிருந்த போதிலும், ஒரு அலாதியான உணர்ச்சி அவன் உள்ளத்துக்குள் ஏற்பட்டிருந்தது. கட்டுக் கொள்ளாக் கனவுகளைக் காணும் காளைப் பருவமல்லவா அது?

பாட்டனைத் தொடர்ந்து வந்த இருளனுக்கு மயானத்துக் குடிசையை நெருங்க நெருங்க வகையறியாத கூச்சமெடுத்தது. கிழவன் மட்டிலும் சற்று வேகமாகவே நடந்து, அநேக திருப்பங்களையும் தாண்டிக் குடிசையைச் சமீபித்து விட்டான். அவனுக்குக் குடலில் பசி!

கப்பிச் சாலையைக் கடந்து மயானக் காட்டுக்குத் திரும்பும் குறுக்குப் பாதையில்—அடர்த்தியான இலுப்பைத் தோப்பு. மரத்துக் கிளையிலிருந்து கட்டிவிடப் பெற்றிருந்த ஒரு கயிற்றூஞ்சலில் உட்கார்ந்து ஒரு பெண் வீசி வீசி யாடிக்கொண்டிருந்தாள். அவளது அவிழ்த்துவிடப் பெற்றிருந்த அளகபாரம் மயில் தோகைபோல் நீண்டு, பூமியையும் தொட்டுக் கொண்டிருந்தது.

இருளனின் விழிகளில் திகைப்பு நிறைந்து விட்டது. "அட! அளகாயி?" என்றான் குளறிய நாக்குடன்.

அவள் அவனை விழுங்கி விடுவது போன்று ஒருகணம் நோக்கினாள். அடுத்தகணம் அவள் முகம் ஆலம் பழமாகச் சிவந்து விட்டது.

அவன் நெருங்கி வந்து நின்று, "அளகாயி தானா நீ? நான் மோகினிப் பெண்ணென்று மிரண்டு விட்டேன்! ஏ, அப்பா ஆளே மாறி விட்டாயே!" என்றான்.

"நீ கூடத்தான் ரொம்ப மாறி, அடையாளமே தெரியவில்லையே?" என்றாள் நெடுங் கூச்சத்துக்கிடையில் அவள். அப்பொழுது தான், காற்றுவாக்கில் அவளது அடிக்கொண்டையினுள் செருகியிருந்த மருக் கொழுந்தின் மணம் அவனது நாசிக்கேறி நிலைத்துவிட்டது!

அவள் ஏதோ நினைத்துக் கொண்டவள் போன்று நாலாபுறங்களையும் நோட்டமிட்டு விட்டு, "என்—அண்—ணே" எனப் பெருங் குழப்பத்துடன் தொடங்கினாள். அவன் சட்டென இடைமறித்து, "என்னது வென்னது? அண்ணேயாவது, வெண்ணேயாவது?" என்றான் பரபரப்பான குரலில்.

அவள் முகத்தில் குறுநகை கூத்தாடிற்று! "இல்லே யில்லே.. நீங்கள்—அத்தான்!" எனக் கூறிவிட்டு, அவள் அங்கிருந்து ஓட்டம் பிடித்து விட்டாள்.

இதுதான் அவர்களுக்கேற்பட்ட முதல் சந்திப்பின் அனுபவம். அப்புறம், நாளடைவில் அநேக சம்பவங்கள்.

ஒருநாள் அந்திநேரம். எங்கேயோ போய்ச் சுற்றிவிட்டு, இருளன் வீட்டுக்குத் திரும்பிக் கொண்டிருந்தான். இலுப்பைத் தோப்புக்குள் நுழைகையில்—அப்பொழுதும் அவள் அக் கயிற்றூஞ்சலில் தான் இருந்தாள். அச்சமயம் அவன் அங்கு வருவானென்பதை அவள் எதிர்பார்க்கவில்லை. வெகுதூரத்திலிருந்து கவனித்த இருளனின் உள்ளம் குறுகுறுத்தது! அவளது பின் பக்கமாகவே அவன் சந்தடியின்றி வந்து, பின்னேறுக்கி வந்த ஊஞ்சலை அப்படியே கைப்பற்றி விட்டான். அடுத்த கணம், அவள் சிறு கூச்சலை விடுத்தபடியே மிரண்டு விட்டாள். அவள் உடல் சிலிர்த்தது. அவன் 'கடகட' வென்று நகைத்தான்!

'அளகாயி, நீ பயந்துட்டியா? ஆமாம்... இவ்வளவு பயந்தாங் கொள்ளிப் பெண்ணைக் கட்டிக்கிட்டு நான் எப்படிக் காலந் தள்ளுறது? ஹூம்?"

"ஏன், வேணுமே!" அவளது முகத்தில் லச்சையும் குறும்புத்தனமும் அப்பியிருந்தன. அவள் 'வெடுக்'கென நகைத்தாள்.

''ஆமாம்! நான்பாட்டிலே ராவோ, பகலோ அரிச்சந்திரன் கணக்கா, கோலுங் கையுமாகச் சுடலேயைக் காத்துக்கிட்டு நிற்பேன். நீ வந்து...''

''நான் ஒண்ணும் பயந்துக்கிட்டு ஓடிவிட மாட்டேன்! சந்திரமதி கணக்கா பக்கத்தில் வந்து நிற்பேன்!'' இவ்வாறு கூறிக் கொண்டே, நாணத்தினால் அவள் தம் கரங்களால் முகத்தை மூடிக் கொண்டாள். இருளனின் உள்ளம் மகிழ்ச்சியின் போதையில் மூழ்கியது. அவளது கரங்களைப் பற்றித் தொங்கிக் கொண்டிருந்த கயிற்றூஞ்சலில் அமர்த்தி வைத்து விட்டுத் தானும் உட்கார்ந்து கொண்டான்.

''அளகாயி, நான் அரிச்சந்திரன்; நீ சந்திரமதி. சரிதானே?'' என்றான் இருளன் கொஞ்சலாக.

அவள், முகத்தில் பதித்த கரங்களை எடுக்கவுமில்லே, அவனுக்கு மறுமொழி புகலவுமில்லே. அதற்கு முன் அந்தக் கயிற்றூஞ்சல் அறுந்தது! ஆனால், பாவம்—அவர்களது எண்ணங்களும் இவ்வாறே அறுந்து விடக் கூடுமென்பதை அவர்கள் எங்கே நினைத்தனர்? அவ்விருவரும் அப்போது 'கலகல'வென நகைத்தபடியே சமாளித்துக் கொண்டனர்.

இந்தச் சம்பவத்துக்குப் பின் அழகாயியை அவன் தனிமையில் சந்திக்கவேயில்லே. மறு தினம் தான்—எங்கிருந்தோ வந்த சிங்கப்பூர் மாடன் அவர்களது இதயக் கயிற்றையே அறுத்து விட்டானே!

இருளனின் கண்களுக்கு எதிரில் அவ்விரு சம்பவங்களும் இப்போது 'பயாகோப்புப் படம்' போன்று தோன்றின.

இருளன் பெருமூச் செறிந்தபடியே திரும்பினான். எதிரே வெறுவெளியில் வைக்கப் பெற்றிருந்த சிதை வைத்தபடியே யிருப்பது தெரிந்தது. அவன் அதை நெருங்கிச்சென்று, நடுப்பாகத்தின் விராட்டிகளை விலக்கிவிட்டு அந்தப் பெண்ணின் முகத்தை உற்றுப் பார்த்தபடியே இருந்தான்.

இருளனின் உள்ளத்துக்குள்ளும் ஒரு சிதை எரியத் தொடங்கி விட்டது. கீழே கிடந்த பெருங்கோலே யெடுத்து ஊன்றிய வண்ணம் எழுந்து நின்றான். அவன் கண்களுக்கு இருளும் ஒளியும்—மின்னல்போல் மாறி மாறிப் பளிச்சிட்டன.

ஆறு வருஷங்களுக்கு முன், அவன் கழுத்தில் மாலேயிட்ட செவ்வந்தியும் இப்படித்தானே—பாவி மகள்!

அவன் விழிகளுக்கெதிரே திடீரென்று இருள் கவிந்து விட்டது. மையிருட்டு! உறுத்து உறுத்துப் பார்த்தான். நீட்டிய கையும் தெரியவில்லே. ஆனால்—

''அத்தான்!'' கனிவு மிகுந்த மெல்லிய குரல் கேட்டது.

இருளனுக்கு மீண்டும் அதிர்ச்சி! கணத்துக்குள் அவன் உடல் வெட்டிய வாழைபோல் நீரைச் சொரிந்தது. 'இதென்ன, பிணமா பேசுகிறது?'

அவன் விழிகள் துழாவின. வாயைத் திறந்து திறந்து மூடினான். வார்த்தை யெழும்பவில்லே. நாக்கு மேலண்ணத்தில் பசையாக ஒட்டிக் கொண்டு விட்டது.



பம்பாய் எம். ஆர். கிருஷ்ணய்யர் அவர்களின் புதல்வர் திரு எம். கே. ராமனுக்கும், சென்ட்ரல் ரயில்வே பிரதம கண்ட்ரோலர் திரு கே. ஆர். அகிலேஸ்வரய்யரின் புதல்வி திருமதி எ. சாரதாவுக்கும் மாதுங்காவில் மே மாதம் 10ந் தேதி வெகு சிறப்பாகத் திருமணம் நடந்தேறியது. திருமணத்துக்கு ஏராளமான நண்பர்களும் உறவினர்களும் விஜயம் செய்து மணமக்களை ஆசீர்வதித்தனர்.

---

'களுக்' கென்ற சிரிப்பொலி எழுந்தது. ''என்ன அத்தான், செவ்வந்தியை நீங்கள் மறந்து விட்டீங்களா?''

இருளனின் சுவாசமே ஒருகணம் நின்று போய் விட்டது!

''நீங்கள் பேசாவிட்டால் போங்க! ஆனால் காலமெல்லாம் வாழ்ந்து விட்டுப் பிரிந்தவர்களே நொடியிலே மறந்துவிடுறீங்க! கனவுகண்டதுமாதிரியா கண்ணாலங் கட்டிக் கிட்டவங்களுக்கு—''

இருளனின் பற்கள் 'நற நற' வென உராய்ந்து கொண்டன.

''அத்தான்! எனக்கு நீங்க தாலிகட்டினதிலே சந்தோசமில்லே—அதை நான் உங்களிடம் திருப்பிக் கொடுத்ததிலே தான் சந்தோசம்! காலமெல்லாம் காத்துக் கிடந்த தங்கச்சிக்கு ஏன் துரோகம் செய்யணும்?''

'கடகட' வென்ற வெடிப்புச் சிரிப்பு திடீரென எழுந்தது. வெறுப்பும், ஏளனமும் அப்பெண்ணின் குரலில் ஒன்றாகப்பொழிந்தன! அதையொட்டி, பச்சை மரிக்கொழுந்தின் மணம் வீசியது.

''அத்தான்!''

''......''

''ஏ...அத்தான்!''

அட! இது யாருடைய குரல்?—

நல்ல வேளேயாக, அவனது நாக்கைப் பற்றிக் கொண்டிருந்த பசை விடுபட்டு விட்டது. ''யாரு—? அளகாயி குரலாட்டம் இருக்குதே. அளகாயி தானா? இந்தக் கும்மிருட்டிலே எங்கே யிருக்கிறாய்?''

''இருட்டா? இருட்டு எங்கே யிருக்குது? நீங்கதான் கண்ணே இறுக்கி மூடிக்கிட்டு நிற்கிறீங்க!'' மீண்டும் அந்த நகைப்பு!

''அளகாயி, நீ இப்போ எங்கேயிருந்து—எங்கே வந்திருக்கிறே?—''

''எங்கே வரணுமோ அங்கேதான் வந்திருக்கிறேன். முதல்லேயும் உங்களைத் தேடிக்கிட்டுத்தான் வந்தேன். இப்போவும் — ஊர்ச் சனங்களைப்போல உங்களைத் தேடிக்கிட்டுத் தான் வந்தேன்!''

'' ஊர்ச் சனங்களைப் போலேயா?''

''ஆமாம்! பணம் படைச்சவங்களும், பவுசு நிறைஞ்சவங்களும் கூடக் கடைசியாக உங்களிடம்தானே வந்து சேரணும்?''

''அளகாயி! நீ என்ன சொல்லுறே? ஒண்ணுமே விளங்கல்லியே?''

'' விளங்கல்லியா? சரிதான்! இப்பொழுதாவது நீங்கள் மனம் மாறி என்னை ஏற்றுக் கொள்ள வருவீங்கன்னு காத்திருந்தேன். உங்கள் கைத்தாலி எனக்குத்தான் கிடைக்கும்னு காத்திருந்தேன். அது எனக்குக் கிடையாதென்ற பிறகு, ஊர்ச் சனங்களைப் போல, ஒரு கொத்து விராட்டியும், ஒருபொறி நெருப்பும்தானே எனக்கும் முடிவு?''

''அளகாயி! அளகாயி...!''

'' ஆமாம்! ஊரான் தாலி எனக்கு ஏன்? என் கழுத்துத்தாலி ஒருத்தருக்கும் தெரியாது. நான் சந்திரமதி!

திடீரென்று எங்கிருந்தோ வெளிச்சம் வந்து விட்டது! அச்சிதையிலிருந்த பெண்ணின் சடலம் கண் விழித்துப் புன்னகை புரிந்தது!

இதென்ன? செவ்வந்தியா? இல்லே யில்லே— அழகாயிதான்! அவளுக்கா இந்தக் கோலம்?

'' ஐயோ அளகாயி! அளகாயி! வேணும், வேணும்—பெண் பாவம் எனக்கு வேணும்! அளகாயி!''

அவனது தொண்டையைப் பிளந்து கொண்டு ஒலி வெளியாகி விட்டது. அவனது கால்கள் தட்டி உராய்ந்த வண்ணம் பின்ன விட்டன. உடல் 'கிறுகிறு' வென்று ரங்கராட்டினமாகச் சுழன்றது. ஒரு இமைப்பின் நேரத்துக்குள்ளாக, ஆதாரமற்ற நெடுஞ் சுவராகச் சாய்ந்தான்! அடுத்த மின்னல் பொழுதில், அவனுடலைத் தாங்கிப் பிடிக்க, மற்றொரு பூதவுடல் எங்கிருந்தோ வந்து சேர்ந்தது!

ஜில்லென்ற நீர் முகத்தில் வழிந்தோடக் கண்களைத் திறந்தான் இருளன். அவனெதிரே செவ்வந்தியுமில்லே, அழகாயியு மில்லே! கட்டையான ஆண் குரல் தான் ஒலித்தது.

''அட பாவி மகனே! நான் வந்திருக்காவிட்டால் இந்நேரம்—அந்த எரிகிற பிணத்து மேலே விழுந்திருப்பாயே—'' இவ்வார்த்தைகளைக் கூறிக் கொண்டே கையிலிருந்த சிறு குவளை நீரை அவன் வாயில் வடித்தான்— அவனது பாட்டன் வீரப்பன்.

''தாத்தா! நீ இப்போ எப்படி, எங்கேயிருந்து வந்தே? அளகாயிக்கு—'' வார்த்தையை முடிக்கத் தெரியாமல் பெருமூச்சுடன் திணறினான் இருளன்.

''எலே! நீதான் ஏதோ—வாலிப இரத்தத்திலே தாறுமாறாகப் பேசிவிட்டாலும், என் மனசு கேட்குமாடா? ரயிலுக்கு டிக்கட்டு வாங்குகிறவரைக்கும், எனக்கும் ரோஷமாகத் தான் இருந்தது. அதற்காக—?''

இருளனுக்குப் பெரும் பரபரப்பு ஏற்பட்டு விட்டது. '' தாத்தா! நீ இப்போ என்ன சொல்லறே? அளகாயி எங்கே யிருக்குது?'' என்றான் பாட்டனின் தோளை உலுக்கிய படியே. கிழவனிடமிருந்து 'ஊம்' காரத்துடன் நமுட்டு நகை வெளியாயிற்று.

''ஏய்! இப்போ உனக்குச் சொல்லுகிறேன் விசயத்தை. அவர்கள் ஏதோ—அளகாயியை உனக்குக் கட்டிக் கொடுக்கக் கெஞ்சிக்கிட்டிருக்கிறது போலவும், உன்னையே நம்பிக்கிட்டிருக்கிறது போலவும் நீ எண்ணிக்கிட்டிருக்கிறாய். விசயம் அப்படியில்லே தம்பி! அவர்களுக்கு உன்னைப் பற்றிய கருத்தே கிடையாது! எத்தனை பயலுங்க—வெளியூரானுங்க அவளையடையப் போட்டியா வந்து காத்துக்கிட்டிருக்கானுங்க தெரியுமா? அதற்குத் தகுந்தாப்பிலேதான் அவள் அப்பனும் நடந்து கொண்டு வருகிறான். சும்மாவாவது நான் உன்னிடம் நாலாவது தடவையாக வந்துடவில்லே. அந்தப் பெண்ணின் மனசும், பரிதாபமும்தாண்டா என்னை இங்கே இழுத்துக் கொண்டு வந்தது. உன் வார்த்தைக்கு ரோஷப்பட்டு, நான் ஊருக்குத் திரும்பியிருந்தால் என்ன ஆகும்தெரியுமா? நாளைக்குக் காலையிலேயே அந்தப் பெண்ணு உசிரை மாய்ச்சிருக்கும்.''

இருளன் பதைத்த வண்ணம், ''ஐயோ!-'' எனக் கூறிக் கொண்டே காதுகளைப் பொத்திக் கொண்டான். சற்று நேரத்துக்குப் பின், ''தாத்தா! இந்தக் கட்டை இருக்கிற மட்டும் ஒரு பயல் நெஞ்சு துணிந்து வந்து அளகாயியைத் தொட்டுத் தாலி கட்டிடுவானு? **இருளன் கைத்தாலி தான் அவள் கழுத்துக்கு இரும்புத்தாலி!**'' என்றான் ஆவேசமான உணர்ச்சிப் பெருக்குடன்.

''எலே! இந்த மயான வைராக்கியம் இப்போதில்லேடா வந்திருக்குது? அதுவும்— செவ்வந்தி வந்து உனக்குப் புத்தி சொல்லியிருக்காவிட்டால்..'' கிழவன் தன் வார்த்தைகளை முடிக்காமலே நகைத்தான்.

''தாத்தா, தாத்தா! அதெல்லாம் உனக்கு எப்படித் தெரிந்தது?—'' அவனது அவசரக் கேள்வியில் வியப்பும் வெட்கமும் ஒன்றாகப் பிணைந்து வெளியாயின.

''எனக்கு எப்படித் தெரிஞ்சதா? அதையெல்லாம் அப்புறமாகச் சொல்லுகிறேன்—'' என்று கூறிக் கொண்டே கிழவன் பரபரப்பாக எழுந்து, அச்சிதையினருகே வந்தான்.

ஒரு பாக்குக் கடிக்கும் நேரம்—கிழவன் கரங்கள்பம்பரமாகச்சுழன்றன. தாறுமாறாகக் கிடந்த எரி முட்டைகள் ஒன்றாகக் குவிந்தன. வெறும் வெளியிற் கிடந்த அப்பெண் சடலம் சிதைக்குள் மறைந்து கோட்டைத் தீயாக எரிந்தது!

பாவம்! அவ்வேழைப் பிணம்—இருளன் முரட்டு உள்ளத்துக்கு மட்டிலும் மாறுதலையும், புதுமையுணர்ச்சியையும் அளித்து விடவில்லை. அவனது பாட்டனின் முதுமை உள்ளத்துக்கும் அவள்—செவ்வந்தியாகவே தோன்றி, பெருத்த சோதனைகளையளித்ததையும், அதன் விளைவாகவே ஆரம்பத்தில் அவனும் மயங்கிக் கிடந்தானென்பதையும் இருளன் எப்படி யறிவான்? கிழவனுக்கு அதைக் கூற விருப்பமில்லை! ஆனால், நான்கு தடவைகளாகப் பேரனிடம் சாதிக்க முடியாத செயலை அவ்வேழைப்பிணம் சாதித்துவிட்டது பற்றி அவனுடைய இதயம் நிறைவைக் கொண்டிருந்தது!

# நான்தான் அடிபோஸர்

# சௌக்கியமா?

நீங்கள் என்னைப்பற்றி ஒருபொழுதும் கேள்விப்பட்டதில்லை அதனால் உங்களுக்கு என் வரலாற்றை எடுத்துச் சொல்லு கிறேன். லக்ஷக்கணக்கான வருஷங்களுக்குமுன் நான் பிறந்தேன். தங்குதண்ணீரில் அழுகிப்போகும் எண்ணிக்கையற்ற ஜீவராசிகளும், பூண்டுவர்க்கங்களும்தான் எனது முன்னோர்கள் இப்படி அழுகிப்போனவைகள், இறுதியில் மெழுகுபோன்ற பொருள்களாக மாறின. அதுதான் நான்—அடிபோஸர்

அபரிமிதமான அம்சங்கள் என்னிடத்திலுண்டு. உருவோ, ஆகிருதியோ எனக்கில்லை. நீங்களோ அல்லது என்னை சதா தாக்கிக்கொண்டே இருக்கும் பாக்டீரியாவோ, அத்தியாவசியமான பொருளாகிய நான் இல்லாமல், இருக்கவே முடியாது. பாக்டீரியா என்னைத் தாக்கும் பொழுது, என் தேகத்திலிருந்து, இலேசு, நடுத்தரம், கன மான ஹைட்ரோகார்பன்கள் வெளியாகிறது. இவை களையே வாயு, (GAS) பெட்ரோலியம், மெழுகு என்று சாதாரண மாக சொல்லுகிறோம். இதில் பெட்ரோலிய பகுதிகள் கண்கள் நிறைந்த பொருள்களில்—சாதாரணமாக மண் அல்லது சுக்கான் கல்களில் சிக்கிக்கொள்கிறது. பூகர்ப சாஸ்திரி என்னை கண்டுபிடிக்கும்வரை இந்த நிலையில் நான் இருக் கிறேன்.

சுவாரஸ்யம் நிறைந்து தொடர்ந்து வரும் வர லாற்றை இந்தப் பத்திரிகையில் படியுங்கள்.

**ஸ்டான்வாக்** — வளர்ச்சிக்கென்றே நிற்கும் பெயர்.



ஸ்டாண்டர்ட் வாக்குவம் ஆயில் கம்பெனி-யு. எஸ். ஏ.-வில் இணைக்கப்பெற்றது
கம்பெனி அங்கத்தினர்களின் பொறுப்பு வரையறுக்கப்பட்டது.

SSVOC-57-U








BRASSO









LICHENSA




முருகன் படத்துக்குப் பனிச்சென்று துடைத்துச் சந்தனப் பொட்டிட்டு, அதன் மேல் குங்குமப் பொட்டிடப் பட்டிருந்தது. அதன்கீழ கோலம் போடப் பட்டிருந்தது. காவியிடப் பட்ட அந்தக் கோலத்தின் நடுவே குத்து விளக்கு ஏற்றி வைக்கப்பட்டிருந்தது. ஒரு தட்டில் மூன்று ரோஜா மாலைகள். ஒன்றை எடுத்து முருகன் படத்துக்கு அணி வித்தாள் தங்கம். ஒன்றைத் தன் எதிரே நிற்கும் சந்திர வின் கழுத்தில் சூட்டினாள். மற்றொன்றை அவள் நோக் கியபோது சந்திரன் நொடி யில் எடுத்து அணிவித்த வுடன் அவள் தலையைக் குனிந்துகொண்டாள். தட்டி லிருந்த மாங்கல்யச் சரட்டை எடுத்து அவள் கழுத் தில் அணிவித்தான் சந்திரன்.

எங்கிருந்தோ கோயில் மணியோசை 'ஜாம் ஜாம்' என முழங்கியது.

அடுத்த தெருவில் வாசித் துக் கொண்டிருந்த மேளம் 'டும், டும்' என முழங்கியது. சந்திரனும் தங்கமும் முருகன் படத்துக்கு நமஸ்காரம் செய்தார்கள். சந்திரனும் தங்கமும் கணவன்—மனைவி யாகி விட்டனர்.

தங்கத்தின் கண்களில் ஆனந்தக் கண்ணீர் துளித் தது. குத்து விளக்கொளியில் இரு முத்துக்களாக அவை மினிர்ந்தன. சந்திரனின் கரங்கள் அவள் கண்களைத் துடைத்தன. அந்தக் கரங்களின் இதமான ஸ்பரிசம் அவளது இதய வேதனையைத் துடைக்கும் என்பதை அவன் அறிவான்.

தங்கத்துக்கு என்ன குறைவு? அவள் குறை வாகவே எண்ணியிருந்தாள். அநாதையான தனக்குக் கிடைத்த அந்தஸ்து அதிகமென்று அவள் மனத்தில் ஒலித்துக் கொண்டிருந்தது.

சந்திரன் அந்த எண்ணத்தைப் போக்கப் பலதடவைகள் முயன்றான். எல்லோரும் அறிய மணம் புரிந்து கொண்டால் சம அந்தஸ்தை அவள் அடைந்து விடுவாள் என்று பலர் அறிய மணந்து கொண்டான். எனினும் தங்கத்துக் குப் பழைய நினைவு மாறவில்லை.

* * *

பொங்கல் கழிந்த மறுநாள். கடினமான உழைப்புக்குப் பிறகு அன்று ஒரு தினம் சந்திரனுக்கு அவன் வேலை செய்து வந்த ஜவுளிக்கடை முதலாளி விடுமுறை அளித்தார். தனியனான அவனுக்கு நித்திரையைத் தவிர வேறு பொழுது போக்கில்லை. அன்று தூங்கித் தூங்கிப் பார்த்தும் பொழுது போகவில்லை. இரவு எட்டரை மணிக்கு மேல் இரண்டாவது காட்சி யொன்றுக்குக் கிளம்பினான். இருபதாயிரம் அடிகள் கொண்ட அந்தப் படம் முடிவடைந்து அவன் வீடு திரும்பும்போது மணி இரண்டாகி விட்டது. திரும்பும்போது தங்கத்தை அவன் கண்டெடுப்பான் என்று நினைக்கவேயில்லை. இரண்டு குறுகலான தெருக்கள் சேரும் இடத்தில் அவன் வந்து கொண்டிருந்தான். எல்லோருடைய வீட் டிலும் இருள் அப்பியிருக்கது. ஒரு மரத்தினடி யிலிருந்து 'அம்மா, ஐயோ, ஐயோ' என்று யாரோ அபயக் குரல் எழுப்புவது அரை குறையாகச் சந்திரனின் காதில் விழுந்தது. பெண்குரலாக அது தென்படவே சத்தம் வந்த திக்கை நோக்கி விரைந்தான்.

தங்கம் முரடர்கள் பிடியில் சிக்கியிருந் தாள். அவள் கண்டத்திலிருந்து குரல் எழா வண்ணம் முரடன் ஒருவன் துணியை அடைக்க முயன்று கொண்டிருந்தான். சந்திரன் விரைந்து வருவதைக் கண்ட அந்த முரடர்கள் வேகமாக ஓடி விட்டனர். தங்கம் விசித்து விசித்து அழுத வண்ணம் உடல் நடுங்க நின்று கொண்டிருந்தாள்.

அந்த மங்கிய விளக்கொளியில் தங்கத்தைச் சந்திரன் ஒரு முறை நோக்கினான். வறுமையின் சின்னமாக அவள் திகழ்ந்தாலும், அழகும் பருவத்துக்கேற்ற தோற்றமும் அவளிடம் நிறைந்திருந்தன. தொலைவில் 'டக் டக்' என்று பூட்ஸ் ஒலியுடன் ஊதல் சத்தத்துடன் கூர்க்கா ஒருவன் வந்து கொண்டிருந்தான்.

''சரி, சரி! இங்கே நிற்க வேண்டாம். எங்கே நீ போகணும்? உன்னை அங்கே கொண்டு விட்டுச் செல்கிறேன். கூர்க்கா இங்கே வந்தால் என்னையும் சந்தேகிக்கப் போகிறான்'' என்று அவசரப்பட்டான் சந்திரன்.

''அப்படியெல்லாம் சொல்லாதீங்க. உங்களைப் போல் நல்லவர்களை ஏன் சந்தேகிக்கப் போகிறான்?'' என்று கூறிச் சந்திரனைப் பின் தொடர்ந்தாள் தங்கம்.

நடந்து செல்லும்போது தன் வரலாற்றைக் கூறி வரலானாள் தங்கம்.

''நான் ஒரு அனாதைங்க. எனக்கு அப்பா, அம்மா யாருமில்லை. இப்படியேதான் நான் இரவும் பகலும் பிச்சையெடுத்துச் சாப்பிடுகிறேன். இரவு பத்து மணிவரையில் பிச்சை எடுத்த பிறகு இந்தப் பக்கமாகக் கொஞ்ச தூரம் போனால் ஒரு குளம் இருக்கிறதே, அங்கே ஒரு ஆயா இருக்கிறாள். அங்கேதான் போய்ப் படுத்துக் கொள்வேன். அந்த ஆயாதான் எனக்குத் தாயும், தந்தையும். அவள் எனக்கு ஆறுதல் கூறிக் காப்பாற்றாவிட்டால் நான் என்றைக்கோ செத்துப் போயிருப்பேன். இன்றைக்கு எனக்குக் காலணாக் காசுகூடக் கிடைக்கவில்லை. எங்கெங்கோ அலைந்து விட்டு வருகிற போதுதான் இப்படி நேர்ந்து விட்டது'' என்று தங்கம் கூறிவரும் போது சந்திரன் இடையே குறுக்கிட்டான்:

''ஆமாம்; இப்படியே நீ எவ்வளவு நாட்களுக்கு இருக்க முடியும்? ஹூம்.... எங்கே இருக்கேன்னு சொன்னே? அந்தக் குளத்துக்கு அருகிலா?'' — சந்திரன் எங்கோ யோசனையாகக் கேட்டான். அவன் வீடும் அங்கேயேதான் இருந்தது.

தங்கத்தை அந்தக் குடிசையில் விட்டுவிட்டுச் சந்திரன் போய் விட்டான். சந்திரனுக்கு இரவெல்லாம் உறக்கமில்லை.

* * *

தங்கத்தை அதற்குப் பிறகு இரண்டு மூன்று முறைகள் சந்தித்து விட்டான். அவனுடைய பிடிவாதமான யோசனையின்பேரில் தங்கம் பிச்சை எடுக்கப் போவதை விட்டு விட்டாள். சந்திரனின் அறையைச் சுத்தம் செய்வது, தண்ணீர் இழுத்துக் கொடுப்பது, ஹோட்டலில் போய்ச் சாப்பாடு, காப்பி வாங்கி வருவது போன்ற வேலைகளைச் செய்து வரலானாள்.

தங்கத்தை இரண்டு தினங்களாகக் காணவில்லை. சந்திரன் அவளைத் தேடிக் கொண்டு சென்றான். தங்கம் துக்கமே வடிவமாக உட்கார்ந்திருந்தாள். அவளை இதுவரை காப்பாற்றி வந்த ஆயா இறந்துவிட்டாள்.

தங்கம் விம்மினாள்:

''இனி நான் என்ன செய்வேன்? இதுவரை என்னைக் குழந்தைபோலக் காப்பாற்றின ஆயா செத்துப் போய் விட்டாள். எங்கம்மாவையும் ஆயாதான் கடைசிக் காலத்தில் காப்பாற்றினாள். அவள் செத்துப் போகிறப்போ என்னை ஆயாவிடம்தான் அம்மா கைப்பிடித்துக் கொடுத்தாள். இனிமேல் நான் என்ன செய்வேன்!'' என்று தங்கம் அழுதாள்.

சந்திரன் பலவிதங்களில் ஆறுதல் கூறினான். கடைசியாகக் கூறினான்: ''தங்கம்! நீ ஒன்றும் தப்பாக நினைக்காமல் இருந்தால் ஒன்று சொல்கிறேன். கேட்கிறாயா?'' என்று.

தங்கம் அவனை நிமிர்ந்து நோக்கினாள். ''தங்கா! எனக்கும் ஆதரவு இல்லை. ஏன் நாம் இரண்டு பேரும் கலியாணம் செய்து கொள்ளக் கூடாது?''

தங்கத்தின் முகம் குபீரெனச் சிவந்தது. அவள் தலையைக் குனிந்து கொண்டாள். பேச்சே அவள் தொண்டையிலிருந்து வெளி வரவில்லை. வெகுநேரம் வரையில் இருவரும் மௌனமாயிருந்தார்கள். தங்கம் சரியென்பதற்கு அடையாளமாகத் தலையை அசைத்தாள். நல்ல நாளில் அவர்கள் இருவரும் மணந்து கொண்டனர்.

சந்திரன் காமினி மில்க் ஹௌஸில் கணக்கெழுதும் வேலை பார்த்து வந்தான். அந்தக் கடையின் முதலாளிக்குக் கடை அருகிலேயே வீடு. சந்திரனை அவருக்கு மிகவும் பிடித்திருந்தது. தன் வீட்டிலேயே ஒரு அறை கொடுப்பதாக அவர் பல தடவைகள் கூறியும் சந்திரன் சரிவரப் பதில் கூறவில்லை. முதலாளி காரணத்தோடுதான் சந்திரன்மேல் பிரியமாயிருந்தார். அவருடைய மூன்றாவது பெண் நீலா பிறவியிலேயே ஒரு கால் ஊனமடைந்தவள். சந்திரனுக்கு வேறு ஆதரவு இல்லாதபடியால் நீலாவைச் சந்திர



னுக்கு மணம் புரிந்துவிட அவர் திட்டமிட்டார். பல முறை அவர் தம் எண்ணத்தைச் சந்திரனிடம் வெளியிட எண்ணியும் அந்தப் பேச்சை அவர் எடுக்கமுடியாதபடி சந்தர்ப்பம் ஏற்பட்டு வந்தது.

அன்று முதலாளி சந்திரனை வீட்டுக்குச் சாப்பிட அழைத்திருந்தார். பிரமாதமான விருந்து. விருந்துக்கு வேறு எவரும் அழைக்கப்படவில்லை. சந்திரனுக்கு ஆச்சர்யமாக இருந்தது. சந்திரன் திகைப்பை முதலாளி தெளிய வைத்தார். அசட்டுச் சிரிப்புடன், "இன்றைக்கு நீலாவின் பிறந்த நாள். அந்தச் சாக்கை வைத்துக்கொண்டு உன்னைச் சாப்பிட அழைத்தேன். மனம் விட்டுக் கூறுகிறேனே, ரொம்ப நாட்களாக, உன்னை என்னுடைய மருமகனுக்கிக் கொள்ள வேண்டுமென்று எண்ணம்" என்றார்.

சந்திரன் திடுக்கிட்டான். எப்படியோ மென்று விழுங்கி, "சார்! என்னை மன்னிக்கணும். எனக்கு முன்பே கல்யாணமாகி விட்டது" என்று கூறினன்.

முதலாளியின் முகம் கன்டியது. சந்திரன் யாருக்கும் தெரியாமல் கலியாணம் செய்து கொண்டான் என்ற செய்தி அவரைத் திடுக்கிடச் செய்தது. தம் மன விகாரத்தை வெளிக்குக் காட்ட விரும்பாமல் அசட்டுச்




சிரிப்பு சிரித்த வண்ணம் நிலைமையைச் சரி செய்து கொண்டார். என்றாலும் அவருக்கு ஏற்பட்ட அதிர்ச்சி அடங்கவில்லை.

அவருக்கு இரவெல்லாம் உறக்கமேயில்லை. மறு நாள் சந்திரன் கடைக்கு வந்ததும் அவனைத் தனியே அழைத்துப் போய் உபதேசம் செய்ய ஆரம்பித்தார்.

"சந்திரா! உன்மேல் எனக்கு அலாதியான பிரியம் ஏற்பட்டுவிட்டது. அதனால்தான் என் மகளை உனக்குக் கல்யாணம் செய்து கொடுக்கத் திட்டமிட்டேன். நீ ஒரு ஊர் பேர் தெரியாதவளைக் கலியாணம் செய்து கொண்டு விட்டேன் என்கிறாய். அதெல்லாம் கல்யாணமாகுமா? ஏதோ சந்தித்தாய் — ஆசைப்

பட்டாய். அவ்வளவுதான். நானும்தான் உன்னைப்போல் இருக்கும்போது ஒரு பெண்ணைக் காதலித்தேன். தகப்பனாருக்கு விவரம் தெரிந்தது. அவர் புத்திமதி எனக்குச் சிறந்ததாகப் பட்டது. நல்ல சொத்துள்ள இடத்தில் வரன் கிடைத்தது. காதலை மறந்தேன். காதலாவது காதல்? எல்லாம் பருவத்தின் சேஷ்டைதான். இவற்றை யெல்லாம் மறந்து விடு. அந்தப் பெண்ணுக்கு வேண்டுமானால் ரூபாய் கொடுத்துவிடலாம். அப்படித்தான் நான் காதலித்த பெண் ரொம்பக் கோபமாக வாதாட வந்தாள். ரூபாய் நோட்டை வீசினேன். என்ன நினைத்தாளோ என்னவோ, அவள் அதையும் திரும்பிப் பார்க்காமல் போய் விட்டாள். நீயும்....'' அவர் முடிக்கவில்லை.

''ஸார்!'' என்று கூவினான் சந்திரன். ''எனக்கு உங்கள் உபதேசம் தேவையில்லை. நீங்கள் ஒரு அபலையை ஏமாற்றியிருக்கலாம். அதனால் நானும் செய்ய வேண்டும் என்பது நியாயமல்ல. இப்படி யெல்லாம் நீங்கள் சொல்வது அழகுமல்ல. என்னிடம் இனிமேல் இந்த விஷயமாகப் பேசவேண்டாம்'' என்று கூறிவிட்டு வேகமாகச் சென்று விட்டான்.

அவமானமும், ஆத்திரமும் நிறைந்து மனவேதனையுடன் சென்ற முதலாளிக்கு யோசனை ஒன்று தோன்றியது. சந்திரனை மயக்கிய அந்தப் பிச்சைக்காரப் பெண்ணிடமே போய் அவள் மனத்தைத மாற்றி அல்லது மிரட்டி ஓட்டி விட்டால்...

நினைத்ததை உடனே முடிக்கக் கிளம்பினார்.

தங்கம் படத்துக்குப் பூ தொடுத்துக் கொண்டிருந்தாள். யாரோ கதவைத் தட்டுவதைக் கேட்டுக் கதவைத் திறந்தாள். முதலாளி தம்மை இன்னார் என்று அறிமுகப் படுத்திக் கொண்டவுடன் தங்கத்தின் பரபரப்பு அதிகமாயிற்று. ''வாங்க வாங்க, உட்காருங்க!'' என்று படபடப்புடன் பேச ஆரம்பித்தாள்.

முதலாளி முதலில் அமைதியுடன் பேசத் தொடங்கினார்: ''சந்திரனை நீ சந்தித்து அவனை உன்னுடையவனாக ஆக்கிக் கொண்டு விட்டாய். சந்திரனுக்குக் கிடைக்க இருந்த அதிர்ஷ்டத்தை இதன் மூலம் நீ கெடுத்து விட்டாய். அவன் என் மகளை மணப்பதாக முன்பே வாக்குக் கொடுத்துவிட்டான். உன்னுடைய போதனையின் பேரில்தான் இப்போது மறுக்கிறான். பிச்சைக்காரப் பெண்ணை உன் கல்யாணம் செல்லாது என்று அவனுக்கு விளக்க எனக்கு அதிக நேரமாகாது. என்றாலும் உன்னிடம் சொல்லி விட்டுச் சிலவற்றைச் செய்ய வந்தேன்....'' என்ற பீடிகையுடன் தொடங்கிய வார்த்தையைக் கேட்டுத் தங்கம் திடுக்கிட்டாள்.

''ஐயா, இங்கு நீர் வந்து தனியே இருக்கும் பெண்ணிடம் பேசியிருக்கவே கூடாது. என் கணவரின் முதலாளி என்கிறபடியால் மரியாதை அளிக்கிறேன். நீங்கள் எண்ணுகிறபடி நான் பிச்சைக்காரியல்ல. நடுவில் விதிவசமாக ஏற்பட்டது அது. நீங்கள் இப்பொழுது கூறும் யோசனையைப் போல் என் தாயாரைக் காதலித்தவனுக்கும் யாரோ கூறியிருக்கிறீர்கள். என் தாயாரை மயக்கிப் பேசி, என்னென்னவோ கூறி நான் வயிற்றில் இருக்கும்போது விட்டு விட்டு ஓடிவிட்டான். அவன் குழந்தை குட்டிகளுடன் எங்கோ நன்றாகவே வாழ்கிறானாம். ஆனால் என்றாவது தெய்வம் அவனுக்குத் தண்டனை தராமல் இராது. அதைப்போல் என் கணவர் மனதையும் நீங்கள் மாற்றி என்னை மறந்து விட்டுவிட யோசனை கூறினால் நான் இந்த உலகில் வாழ்வேன் என்று எண்ண வேண்டாம். என் வாழ்வையே முடித்துக் கொள்வேன். அந்தப் பாபமே உங்களையும், என் கணவரையும் சூழ்ந்து கொள்ளும்'' என்று ஆவேசம் வந்தவள் போல் கூவினாள் தங்கம்.

முதலாளி பதில் கூறவில்லை. மௌனமாகத் திரும்பி விட்டார்.

தங்கம் ஒன்றும் புரியாமல் உட்கார்ந்து விட்டாள். அவள் கண்ணெதிரே இருள்தான் காட்சியளித்தது. சந்திரன் வந்து அவள் எதிரே நின்று 'தங்கம்! தங்கம்! என்று பல முறைகூப்பிட்ட பிறகுதான் அவளுக்கு நினைவு வந்தது. சந்திரனைக் கண்டவுடன் அவள் விம்மி விம்மி யழுதாள். நடந்தவற்றைக் கூறினாள். சந்திரன் சிரித்தான். ''எது நேர்ந்தாலும் நீ அஞ்ச வேண்டாம். இதோ பார் என் ராஜினாமாக் கடிதம். முதலாளியின் மிரட்டலுக்குப் பயப்பட மாட்டேன்'' என்று கூறிக் கொண்டே வரும்போது 'டப்' பென்று ஜன்னல் வழியே கடிதமொன்று வந்து விழுந்தது. சந்திரன் திடுக்கிட்டு அதை எடுத்துப் பிரித்துப் படித்தான்.

அன்புள்ள தங்கத்துக்கு,

ஒருமணி நேரத்தில் எப்படியெல்லாம் மனம் மாறி விட்டது என்று ஆச்சர்யப் படுவாய். உன்னை வந்து சந்தித்தபோது உன் மனசைச் சமாதான முறையில் மாற்ற முயன்றேன். பலாத்காரத்தையும் உபயோகிக்க எண்ணமிருந்தது. ஆனால் உன்னைக் கண்டவுடனேயே நான் திடுக்கிட்டேன். நீ உன் தாயார் மரகதத்தையே உருவெடுத்துப் பிறந்திருக்கிறாய். அந்தக் காலத்தில் மரகதம் எப்படியிருந்தாளோ, அப்படியே நீ காட்சியளித்தவுடன் திடுக்கிட்டேன். அதற்கு ஏற்றாற் போல் நீ கூறிய வரலாறு என் சந்தேகத்தை ஊர்ஜிதம் செய்து விட்டது. நீ மரகதத்தின் மகள். என்னால் கைவிடப்பட்ட மரகதத்தின் மகள். என் மகள். உன் வாழ்வில் குறுக்கிட நான் வந்தது எவ்வளவு மகத்தான தவறு; என் மகளின் வாழ்வைக் கெடுக்க முயன்ற நான் பாபியல்லவா? என்னை மன்னித்து விடு. நீயும் சந்திரனும் சௌக்கியமாக வாழுங்கள். சந்திரனுக்குத் தனியே ஜவுளிக்கடை வைத்துக் கொடுக்க ஏற்பாடு செய்துள்ளேன்! உன் தாயாரிடம் மன்னிப்புக் கோர முடியவில்லை. என் மகளிடம் மன்னிப்பு கேட்பதன்மூலம் பிராயச்சித்தம் செய்து கொண்டதாகச் சமாதான மடைகிறேன். நீ சௌக்கியமாக வாழ முருகன் அருளட்டும்.

இப்படிக்கு உன் தந்தை,
பரமசிவம்

கடிதத்தைப் படித்து முடித்த தங்கம் 'அப்பா' என்று பாசத்தினால் அலறினாள்.

சந்திரனின் கண்களிலும் நீர் ததும்பியது.

கணவன், மனைவி இருவருக்குமே பொழுது விடிந்து பொழுது போனால் அன்றையப் பொழுதை எப்படிப் போக்குவது என்ற பிரச்னைதான் பெரும் பிரச்னையாக இருக்கும்.

கிராமாந்திரமாக இல்லாதிருக்கும் பட்சத்தில் அவர்கள் பாடு இன்னும் மிகக் கஷ்டமாய்ப் போயிருக்கும். வறுமை மிகுந்தவர்களாய் இருந்தாலும் நன்றியுள்ள சில உழவர்கள், 'ஐயோ, பாவம்! கணக்குப் பிள்ளை ஐயா ரொம்பவும் கஷ்டப்படுகிறார். இருபத்திமூன்று ரூபாய் காசைக் கொண்டு எத்தனை பேர்கள் பசியாறச் சாப்பிட முடியும்?' என்று உள்ளம் இரங்கிக் கர்ணம் பொன்னுசாமியை இதுவரைக்கும் காப்பாற்றி வருகிறார்கள்.

''என்ன மரகதம்! எனக்கு ஒன்றும் புரியவில்லையே. ஆடம்பரமாக மாப்பிள்ளையை ஒரு வாரத்துக்கு முன்னாலேயே வரவழைத்தாகி விட்டது. பண்டிகைக்கு முழுதாக இன்னும் ஐந்து நாட்கள்கூட இல்லையே... ஹும்.. ஏன் மரகதம்! காலையில் சொல்லியபடியே செய்து விடட்டுமா?''

''தாராளமாகச் செய்யுங்களேன். கடைசிக் காலத்தில் குந்துவதற்குக் குச்சிலும், குடிப்பதற்குக் கஞ்சியும்கூடக் கிடைக்காத கதிதான் வரும். இப்படிப் பயந்து பயந்து வாழும்பொழுதே இவ்வளவு வேதனை, இவ்வளவு துன்பமென்றால், இன்னும் இதுபோன்ற காரியங்கள் வேறு செய்தால்....''

''போதும்..போதும்..நிறுத்து.''

வேதனை குமிழியிட விரக்தியோடு கூறிய மனைவியின் பேச்சுக்கு முற்றுப் புள்ளி வைத்தார் பொன்னுசாமி. பாவம்! அவரும்தான் என்ன செய்வார்! அவருக்கு வினை தெரிந்ததிலிருந்து இந்த நாள் வரை ஒருநாளாவது நிம்மதியாக இருந்தார் என்று சொல்ல முடியாது. அவருக்கு மணம் ஆனபின்பு மரகதமும் அவருடைய துன்பத்தில் குறையாது பங்கேற்றுக் கொண்டாள்.

அந்த உழவப் பெருமக்களின் உதவியைப் பொன்னுசாமி மறந்தாரில்லை. ஆனால் சந்தர்ப்பச் சூழ்நிலை அவரை எதுவும் செய்யத் தூண்டியது. ஆழ்கடலில் தத்தளிக்கும் ஒருவன் பக்கத்தில் மிதந்து செல்லும் சிறு துரும்பைக் கூடத் தெப்பமாகப் பயன்படுத்த எண்ணுவான் அல்லவா!

பொன்னுசாமியும் அதுபோன்ற நிலையில் தான் இருந்தார். அவருக்குக் கூறப்பட்ட யோசனை பாவமாக, அநீதியாக இருந்தாலும் அதைத் தவிர அவருக்கு வேறு வழி ஒன்றும் புலப்படவில்லை.

*

பொன்னுசாமிக்குக் குழந்தைச் செல்வத்துக்குக் குறை ஒன்றும் கிடையாது. ஆனால் அத்தனையும், பிறந்து இறந்தது முதற் கொண்டு பெண்ணாகவே இருந்தன.

எவ்வளவோ இன்னல்களுக்கிடையே குழந்தைகளை வளர்த்து வரலானார். வறுமையில் பிறந்தாலும் அந்தக் குழந்தைகளுக்குக் குறை ஒன்றும் சொல்ல முடியாது. எல்லாக் குழந்தைகளுமே மூக்கும் விழியுமாய், கண்ணுக்கு நிறமாய், பார்ப்பதற்குப் பரவசம் அளிக்கக் கூடியவையாக இருந்தன.

மூத்தவள் சகுந்தலா. அழகு அவள் உருவில் அரசு செலுத்தியது. அறிவும் நல்ல பண்பும்




கூட அவளிடம் அபரிமிதமாக நிறைந்திருந்தன. ஆனால், பணம்?...

பருவ வயதை அடைந்து பல ஆண்டுகள் ஆகியும் கொழுகொம்பின்றித் தனித்து நிற்கத்தான் வேண்டி இருந்தது. காரணம் பணம்தான். சாதாரணமானவர்கள் கூட கலெக்டர் மகனாகவும், ஜட்ஜ் மகனாகவும் தேடிக் கொண்டிருக்கும் பொழுது, கேவலம்! கிராமக் கர்ணத்தின் பெண்ணையா சீந்துவார்கள்? 'ஆளிலே ஆடி போனால்' அதை மதிப்பார் யார் இருக்கிறார்கள்?

ஒருவரும் இல்லை என்றுதான் சொல்லத் தோன்றும். ஆனாலும் சில விசித்திரமானவர்கள் இருக்கத்தான் செய்கிறார்கள். பல மூடர்களுக்கு நடுவில் ஒரு அறிஞன் விசித்திரமானவன் தானே. எத்தனையோ பேர்கள் ஒதுக்கித் தள்ளிய பொன்னுசாமியின் மகளை அன்போடு அணைத்து ஆறுதல் கூறுவதற்கு வந்தான் ஒருவன்.

'வந்தான் ஒருவன்' என்றால் அவன் சாமானியப் பட்டவன் அல்ல. அதுதான் பெரிய ஆச்சரியம். ஊரே வியப்பில் ஆழ்ந்தது. மரகதம் மகிழ்ச்சியில் மூழ்கித் தத்தளித்தாள். பொன்னுசாமிக்கு மகிழ்ச்சி ஏற்பட்டாலும் அநுபவம் மிக்க அவரது உள்ளுணர்வு, 'காலுக்குத் தகுந்த செருப்பு அல்லவா அணிய வேண்டும்? நம் தகுதிக்கும் அவர்கள் தகுதிக்கும் ஏணி வைத்தாலும் எட்டாதே...' என்றுதான் எண்ணியது.

ஆனால் அவர்கள் நினைத்தது போல் எதுவும் நடக்கவில்லை. பணத்திலும், படிப்பிலும் மிகுந்த கோபாலன் ஒரு சுபயோக சுபதினத்தில் நல்லோர் வாழ்த்த, பெற்றோர்கள் பெருவகை கொள்ள, மங்கைமார்கள் மலர் மாரி பொழியக் கட்டழகியான சகுந்தலாவின் கழுத்தில் மாலையைச் சூட்டினான்.

கோபாலன் கல்கத்தாவில் உயர்ந்த உத்தியோகம் பார்த்து வந்தான். கல்கத்தாவிலேயே நிரந்தரமாக வேலை ஏற்பட்டு விட்டதால் அவனுடைய பெற்றோர்களும் அவன் கூடவே வசித்து வந்தனர்.

கோபாலனின் தந்தை ஒரு பெரும் போக்கான மனிதர். நடப்பு உலகை நன்கு உணர்ந்தவர். அவருடைய பூர்வீகச் சொத்து முழுவதும் தஞ்சையை அடுத்த லட்சுமிபுரம் கிராமத்தில்தான் இருந்தது. ஆண்டுக்கு ஒரு முறை கல்கத்தாவிலிருந்து லட்சுமிபுரத்துக்கு வந்து குத்தகைத் தொகைகளை வசூலித்துக் கொண்டு போவார். கல்கத்தாவில் சொந்த மாளிகையும் வாங்கி யிருந்தார்.

எப்படியோ அவருக்குப் பொன்னுசாமியின் புத்திரியைப் பற்றிய செய்தி கிடைத்தது. பணத்தைப் பிரதானமாக நினைக்கவில்லை. அறிவும் அடக்கமும் வாய்ந்த குடும்பத்துக்கேற்ற சிறந்த பெண்ணான சகுந்தலாவை அவருக்குப் பிடித்து விட்டது. உடனே மகனின் அபிப்பிராயத்தைக் கேட்டார் தந்தை. தனயனும் தந்தையின் அபிப்பிராயத்தை ஆமோதித்தான்.

'வரதட்சணை' என்ற பேச்சுக்கே இடம் வைக்கவில்லை கோபாலனின் தந்தை. மணமகனுக்கும் எந்தச் சீரும் வரிசையும் வேண்டாம் என்று கூறி விட்டார். ஆனால் பையனின் தாயார் 'பெண்ணுக்கு ஒரு வைர நெக்லேஸ் போட வேண்டும்' என்று கூறினாள். அதுவும் கண்டித்துக் கூறவில்லை. ஒருவித ஆசையோடு கூறினாள். 'மருமகள் கொண்டு வந்தது' என்று பெருமிதத்தோடு பலரிடமும் கூற அவளுக்கு ஆவல்.

சம்பந்தி அம்மாளின் பேச்சைக் கேட்டுக் கண நேரம் அசந்து போனார் பொன்னுசாமி. இருந்தாலும் சமாளித்துக் கொண்டு 'சரி' என்று கூறி விட்டார். அப்பொழுது அவர் அவ்வளவு தொகைக்கு எங்கே போவது என்பதைப் பற்றி எல்லாம் யோசிக்கவே இல்லை.

இப்பொழுதுதான் வருத்தம் தெரிகிறது. கல்யாணத்தில் இரவல் வாங்கிப் போட்டு எப்படியோ ஒப்பேற்றி விட்டார். தலை தீபாவளிக்கு வரும் பொழுது தயாராக வைர மாலை வாங்கி வைத்திருப்பதாக மகளிடம் ரகசியமாகக் கூறி யிருந்தார். சம்பந்திகளிடமும் உறுதி கூறி யிருந்தார்.

தலை தீபாவளியும் வந்து விட்டது. மகளும் மருமகனும் கல்கத்தாவிலிருந்து வந்தும் ஆகி விட்டது. இன்னும் எண்ணி ஐந்து நாட்கள் தான் தீபாவளிக்கு இருக்கின்றன. தீபாவளிக்கு மறுநாளே மருமகன் ஊருக்குப் புறப்பட்டு விடுவான். அதற்குள் வைரமாலை தயாராக வேண்டும்.

பொன்னுசாமி எங்கெங்கோ நாயாக அலைந்தார். குந்தி இருக்கிற வீட்டைத் தவிர, வேறு குழி நிலத்துக்கு வழியற்ற அவரை நம்பி எவருமே கடன் கொடுக்க முன்வரவில்லை. வீட்டை அடகு வைத்துப் பணம் வாங்கலாம் என்றால் அதன் பேரிலும் கல்யாணச் செலவுக்காக ஐந்நூறு ரூபாய் முன்பே வாங்கி இருந்தார்.

அந்த ரூபாயைக் கொடுத்தவர் தயாளன், கொடை வள்ளல் என்ற நல்ல சொற்களின் எதிர்ச் சொற்களை ஒருங்கே பெற்றிருக்கும் நல்லுசாமி கவுண்டராவார். ஈவிரக்கமற்றவர்.

வேறு வழியற்ற பொன்னுசாமி நேற்று இரவு நல்லுசாமி கவுண்டரிடம் சென்றார். அவர் காலில் விழாத குறையாக, ''...கல்யாணத்துக்குப் பெரிய மனம் வைத்து ஐந்நூறு ரூபாய் கொடுத்தீர்கள். அதைக் கொண்டு முடிந்தவரை சிறப்பாக நடத்தினேன். இப்பொழுதும் உங்கள் உதவியை நாடித்தான் வந்திருக்கிறேன். என் மானமும் என் மகளின் வாழ்வும் உங்கள் கையில்தான் இருக்கின்றன. வீட்டு அடைமானத்தின் பேரிலேயே மேற்கொண்டு ஆயிரம் ரூபாய் கொடுத்தால்...'' என்று இழுத்தார்.

அவர் கேட்டதுதான் தாமதம், உடனேயே நல்லுசாமி கவுண்டர், ''ஆயிரம் என்னவேய்? இன்னும் ஆயிரம் வேண்டுமானாலும் இனாமாகவே தருகிறேன். ஆனால்...'' என்றார்.

அந்த 'ஆனால்' தானே அவரைப் பதைக்கச் செய்து விட்டது. ஏதேதோ ரகசியமாய்க் கூறிய நல்லுசாமி கவுண்டர் கடைசியில், ''என்னவேய்! அதைரியப் படுகிறீர்? அவர்கள் என்ன தேடிச் சம்பாதித்ததா! அல்லது பாரம்பரைச் சொத்தா? சர்க்கார் சொத்து. இதுவரைக்கும் அவர்கள் அனுபவித்தது போதும்வேய். இதில் பாவ புண்ணியத்துக்கு இடமேயில்லை. கலெக்டரால் ஆகாதது கர்ணத்தால் ஆகும்வேய். நன்கு யோசித்துப் பாரும். இதை, நான் சொன்னபடி செய்து முடித்துவிட்டால் இனாமாக ஆயிரம் தருகிறேன். பழைய கடனையும் நீர் தர வேணும்வேய்...முழுசா ஆயிரம்!'' என்று ஆசை காட்டினார்.

பொன்னுசாமியின் உள்ளம் பேதலித்தது. அறிவு மயங்கியது. அடுத்த கணம் 'தூ...உன் பணமும் நீயும். பணத்துக்காகப் பாவத்தை மனமுவந்து செய்பவன் என்று என்னையா நினைத்தாய்?' என்றுதான் சொல்ல நினைத்தார். ஆனால் அவர் மனக்கண் முன்னால் அவருடைய அருமை மகள் சகுந்தலாவின் அழகிய வதனம் பரிதாபமாகக் காட்சி அளித்தது.

ஐயோ! அதை நினைக்கும் பொழுதே பொன்னுசாமியின் உடல் நடுங்கியது. உள்ளம் வேதனையுற்றது. 'துன்பம் வந்தால் அடுக்கடுக்காய்த்தான் வரும் போலும். என்னே இறைவா உன் சித்தம்' என்று நினைத்தவராக 'நாளைக்கு வருகிறேன்' என்று நல்லுசாமி கவுண்டரிடம் ஏதோ கூறிவிட்டு அவர் வீடு திரும்பினார்.

இரவு முழுதும் எவ்வளவோ யோசித்தும் அவருக்கு ஒரு வழியும் புலப்படவில்லை. கவுண்டர் சொன்னபடி செய்து விடலாம். அதில் கஷ்டம் இல்லை. ஆனால் மனச்சாட்சி ஒன்று இருக்கிறதே! கடைசியில் மனச்சாட்சிக்கு விரோதமாகவே அவர் நடப்பதற்குத் தீர்மானித்து விட்டார்.

அவர் செய்யப் போகும் காரியம் எத்தனை நன்றி கெட்டது என்பதும் அவருக்குத் தெரியும். நல்லுசாமி கவுண்டரின் கழனிகளை அடுத்து ஐந்து ஏக்கர் அளவுள்ள புறம்போக்கு நிலம் இருந்தது. பொட்டக்கிடலாய் இருந்த அதை வெட்டிச் சீர்திருத்தி, அல்லும் பகலும் அயராது உழைத்துப் பொன் விளையும் பூமியாய்ச் செய்தனர் சில உழவர்கள். இயல்பிலேயே நல்ல மனமும் ஏழைகளிடம் இரக்கமும் கொண்ட பொன்னுசாமி, அந்த உழவர்களுக்கு அரசாங்கத்தாரால் தீங்கு விளையாதபடி பல உதவிகள் செய்து வந்தார். அந்த நன்றி உள்ள உழவப் பெருமக்களும் பொன்னு

## மலர்களைத் தாங்கக் கூந்தல் அவசியம் வேண்டும்

கூந்தலுக்குக் கேசவர்த்தினியின் பராமரிப்பு அவசியம். கேசவர்த்தினியால் உங்கள் கூந்தல் அழகையும், அடர்த்தியையும் அடையட்டும்! சிப்பில் வராமல் தடுங்கள்.



# கேசவர்த்தினி

இந்த நக்ஷத்திரத்தைப்போல் உங்கள் கூந்தலைப் பிரகாசிக்கச் செய்யுங்கள். கூந்தலின் பெருமையை அடைய கேசவர்த்தினியைத் தேர்ந்தெடுங்கள்

ஷாம்புவிலும் தலையை மணமாகவும், சுத்தமாகவும் வைத்துக் கொள்ளுங்கள்.




எங்கள் இதர தயாரிப்புகள் :
அஞ்சன் கண் மை
வேணி சீயக்காய்பவுடர்



## கேசவர்த்தினி

பிராடக்ட்ஸ்,
கோயமுத்தூர்

★

---

இக்கடுங் கோடைக்கு......

# ஓரியன்ட்

பலவிதப் பயனுள்ள மின்சார விசிறி

மேஜை விசிறி
சுவரில் பதிக்கும் விசிறி
காபின் & சீலிங் விசிறி
மற்றும் ஏர் சர்குலேட்டர்

இப்படி எந்தவிதமாக வேண்டுமானாலும் உபயோகிக்கப் புதிய முறையில் தயாரிக்கப்பட்டது




இவையாவும் ரூ. 70/-தான்



ஓரியண்ட் ஜெனரல் இண்டஸ்ட்ரீஸ் லிமிடெட்
6, கோர் பிபி லேன், கல்கத்தா—11

டிஸ்ட்ரிப்யூட்டர்கள் :
M/s ஹிந்துஸ்தான் டீலர்ஸ் லிட். 4, ஸ்டிரிங்கர் தெரு, மதராஸ்
தந்தி : "DEALHIND" - - போன் : 2658

சாமியை இன்றுவரை மறவாமல் தங்களால் இயன்ற அளவு உதவி வருகின்றனர்.

நல்லுசாமி கவுண்டர் தம் கழனிகளைப் பார்வை இடும்பொழுது பக்கத்திலுள்ள உழவர்களின் கழனிகளையும் பார்வையிடுவார். அப்பொழுது அவர் உள்ளத்தில் பொறாமையும் பேராசையும் தலைவிரித்துத் தாண்டவம் புரியும். 'இந்த நிலத்தை எப்படியும் என் நிலத்தோடு இணைத்து விடுகிறேன்' என்று தமக்குள் சபதம் புரிந்து கொள்வார். அதை இன்று நிறைவேற்றவும் முனைந்து விட்டார். அதற்குப் பொன்னுசாமியைக் கைப்பொம்மையாகவும் தயார் செய்து விட்டார்.

விடிந்ததும் மனைவியிடம் விஷயத்தைக் கூறினார் பொன்னுசாமி. மரகதமோ புலியாய்ச் சீறினாள். அவளுக்கு உள்ள பயமெல்லாம் 'பாவ காரியங்களைச் செய்தால் மேலும் மேலும் தெய்வம் வாட்டி வதைக்குமே' என்பதுதான். அதையும் தவிர இன்றுவரையில் நன்றி விசுவாசத்தோடு நடந்து கொள்ளும் ஏழை உழவர்களின் வயிற்றில் மண்ணைப் போடுவதை மாபாதகமாகவும் நினைத்தாள்.

மரகதம் அந்தக் காரியத்தைச் செய்யக் கூடாது என்று கூறினாளே தவிர, வேறு உபாயம் கூற அவளால் முடியவில்லை. பொன்னுசாமியும் ஒன்றும் புரியாது தவியாய்த் தவித்தார். கடைசியில் நல்லுசாமி கவுண்டரின் எண்ணப்படியே புறம்போக்கு நிலத்தை அவர் பெயருக்கு மாற்றி வைத்து விடுவது என்று தீர்க்கமான முடிவு செய்து கொண்டு படுக்கைக்குச் சென்றார். மரகதத்தின் பேச்சை அவர் சட்டை செய்யவில்லை.

கருக்கல் கலைவதற்குள்ளாகவே பொன்னுசாமி நல்லுசாமி கவுண்டரின் வீட்டை அடைந்து அவரைப் படுக்கையில் எழுப்பினார்.

"காரியத்தைக் கச்சிதமாக முடித்துவிடுகிறேன். தீபாவளி போகட்டும். இப்பொழுது பணம் தாருங்கள்..."

பொன்னுசாமி சொல்லி முடிப்பதற்குள்ளாக, "என்னவேய், செவ்வாய்க்கிழமையும் அதுவுமா பணத்தைப் பேசுகிறீர்! நாளைக்கு வாரும்! நீர் கேட்ட கடன் தொகையைத் தருகிறேன்" என்றார்.

"கடன் தொகையா? நான் கேட்டதா?" ஆச்சரியம் கொப்பளிக்கக் கேட்டார் பொன்னுசாமி.

"என்னவேய்! அப்படி வாயைப் பிளக்கிறீர்! காரியம் முடிவதற்குள்ளாக எந்த முட்டாளாவது இனாம் தொகையைத் தருவானா? சரி சரி, நாளை வாரும். வீட்டின் அடைமானத்தின்பேரில் நீர் கேட்ட தொகையைத் தருகிறேன். காரியம் முடிந்து விட்டால் நீர் கடனைத் திருப்பித் தர வேண்டாம்!"

கவுண்டரின் சாமர்த்தியத்தை எண்ணி வியந்தபடியே வீட்டுக்குத் திரும்பினார் பொன்னுசாமி.

பொன்னுசாமி வீட்டு வாசலை அடைவதற்கும், "என்னடி பார்க்கிறே? ஊம்...ஓட்டுடா வண்டியை..." என்ற ஆங்காரமான குரல் ஒலியோடு பக்கத்து வீட்டு முத்தையனின் சத்த வண்டி மின்னல் வேகத்தில் புறப்படுவதற்கும் சரியாக இருந்தது.

'வண்டியில் போவது யார்? யார் போவது? அட பாவிகளா! உங்களுக்கு என்ன



பெரியவர்:— தலை நரைக்கிற அளவுக்கு இந்த வயசிலே என்னடா துக்கம் உனக்கு?...

தலை நரைத்தவர்:— இந்த வயசிலேயே இப்படி நரைக்கிறதே என்கிற துக்கம்தான்!...

---

வந்தது? யார் என்ன செய்தார்கள்?' என்ன பேசுகிறோம், யாரைப் பேசுகிறோம் என்று ஒன்றும் தெரியாதவராய் உள்ளம் படபடக்க, நரம்புகள் புடைக்க உள்ளே நுழைந்தார். "அடியே, அடியே, சீக்கிரம் சொல்லு. என்ன நடந்தது? நான் போய்ச் சமாதானப்படுத்தி அழைத்து வருகிறேன்" என்று இரைந்தார்.

"நான் சொல்கிறேன், அப்பா. அக்காவும் அத்திம்பேரும் ஊருக்குப் போனதைப் பற்றித் தானே கேட்கிறாய்?...." என்று கேட்டாள் காயத்ரி.

"ஆமாம். சீக்கிரம் சொல்லித் தொலை, அம்மா."

"அப்பா! நாம் ஏழைகளா அப்பா?"

"ஆமாம், அதிலும் பரம ஏழைகள்!"

"அப்படி என்றால் நம் வீட்டுப் பலகாரம் எப்படி இருக்கும்?"

"என்ன பதில் வேண்டி இருக்கிறது. நம் வீட்டுப் பலகாரம் நம் நிலைமைக்கேற்பத்தான் இருக்கும்."

"இது ஏன் அத்தானுக்குத் தெரியவில்லை..?"

அதற்குள் அடுக்களையில் அழுது கொண்டிருந்த மரகதம், "ஏழை செய்த பலகாரம் ஏற்குமா? 'பெரிய இடம்' 'பெரிய இடம்' என்று பூரித்தீர்கள். இன்றைக்கு எல்லாம் புரிந்து விட்டது. கம்பையும், கேழ்வரகும் புட்டும் வீடு முழுவதும் சிதறிக் கிடப்பதைப் பார்த்தீர்களா இல்லையா?" என்றாள்.

"என்ன, பார்த்தீர்களா இல்லையா என்கிறாய்? விவரமாகச் சொல்லாமல் நீபாட்டுக்குப் பேசினால்....ஆத்திரம்தான் மூளுகிறது."

"எனக்கும் அதிகம் தெரியாது. சந்தோஷமாகத்தான் பலகாரத்தை எடுத்துக்கொண்டு போனான். சற்று நேரத்தில் அறையில் ஒரே

ரகளை. தட்டும் தாம்பாளமும் கூடத்தில் வந்து விழுந்தன. அதைத் தொடர்ந்து 'பலகாரமும் உன் முகரக் கட்டையும்' என்ற வாக்கியம் என் காதுகளில் விழுந்தன. அவ்வளவு தான். படுக்கையும் பெட்டியும் தெருவுக்கு வந்தன. பக்கத்து வீட்டு முத்தையன் சவாரிக்குக் கிளப்பிக் கொண்டிருந்தான். அது ரொம்பத் தோதாகப் போய்விட்டது. மகளை இழுத்துக் கொண்டு போய்விட்டார்...''

மரகதம் மேற்கொண்டு சொல்ல முடியாது விக்கி விக்கி அழுதாள்.

பொன்னுசாமியின் உள்ளம் கந்தக ஊற்றாய்ப் பொங்கியது. எரிமலையாய்க் குமுறியது. ''சீ! அவனும் ஒரு மனிதனா! பணம் இருந்து படிப்பிருந்து பயன் என்ன? பண்பாடு இல்லாதவன். ஏழைக்கேற்றது எள்ளுருண்டை. ஏழை செய்த பலகாரமென்றால் அவ்வளவு இளக்காரமா? அப்படிப்பட்டவன் அவளையும் அல்லவா வீசிவிட்டுப் போயிருக்க வேண்டும்? அவளும் ஏழை வீட்டுப் பலகாரம்தானே... போய்த் தொலையட்டும். கவலை இல்லை.'' எங்கிருந்துதான் அவ்வளவு ஆத்திரம் வந்ததோ அவருக்கு! வாய்விட்டே பலமாகக் கத்தினார் பொன்னுசாமி.

அந்தச் சமயத்தில் 'ஐயா!' என்ற அடக்கமும் அன்பும் கலந்த பல குரல்கள் தெருவில் கேட்கவே, ''யார் அது?'' என்று கடுமையாகக் கேட்டுக் கொண்டே வெளியே வந்தார்.

பல ஆண்டுகளாக நல்லுசாமி நிலத்துக்குப் பக்கத்தில் இருக்கும் புறம்போக்கு நிலத்தை அனுபவித்து வரும் உழவப் பெருமக்களின் கூட்டம் நின்று கொண்டிருந்தது.

அவர்களைக் கண்ட பொன்னுசாமியின் இரத்தம் நூற்றுநாலு டிகிரி உஷ்ண நிலையை அடைந்ததுபோல் கொதித்தது. 'நல்லுசாமி கவுண்டரோடு சேர்ந்துகொண்டு நான் செய்யும் சதி இவர்களுக்கு எப்படித் தெரிந்தது?' என்று எண்ணிய அவர் உள்ளம் துணுக்குற்றது. ஆத்திரத்தில் ஏதாவதுசெய்து விட்டால்—? இருந்தாலும் சமாளித்துக்கொண்டு, ''என்னப்பா, ஏன் இப்படிக் கூட்டமாய் வந்திருக்கிறீர்கள்? யார் என்ன சொன்னார்கள் அர்த்த மில்லாமல்..?'' என்று கேட்டார்.

''என்னங்க எசமான், இதெல்லாம் சொல்லியா தெரியணும்?'' கூட்டத்தில் ஒருவன் கூறினான்.

பொன்னுசாமியை உயிரோடு பனிப்பாறையில் புதைத்து விட்டதுபோல் இருந்தது. அவருடைய ஒவ்வொரு உரோமக் கால்களும் குத்திட்டு நின்றன.

''சரி அப்படித்தான் இருக்கட்டுமே. என்ன செய்யப் போகிறீர்கள்?'' என்று அவர் கடுகடுப்பாகக் கேட்டார்.

''ஏதோ எங்களால் முடிந்ததைச் செய்வோம். இத்தனை வருஷமும் அனுபவித்ததற்காகச் செய்யத்தானே வேண்டும்.''

''...............''

''நீங்கள் சிரமப்படும் பொழுது நாங்கள் பார்த்துக் கொண்டிருக்க மாட்டோம். நீங்கள் யார் யாரிடமோ சென்று கெஞ்சி இருக்க வேண்டியதில்லை. போனது போகட்டும். இனியும் அதுபோன்ற நிலை இருக்கும் படி நாங்கள் வைக்க மாட்டோம். ஆளுக்குக் கொஞ்சம் போட்டு ஆயிரம் சேர்த்து விட்டோம்...எசமான், பெரிய மனம் வைத்து அதைப் பெற்றுக் கொள்ள வேண்டும்.''

பொன்னுசாமி திகைத்துவிட்டார். வானம் பொன்னை மழையாய்ச் சொரிந்தாலும், ஆழ் கடல் முழுதும் பாற்கடலாய் ஆனாலும், தாரகை எல்லாம் சந்திரனாய் மாறினாலும் அவருக்கு அவ்வளவு திகைப்பாய் இருந்திருக்காது. ஏதோ இயற்கையின் நியதி என்று சாதாரணமாகப் போய் விடுவார். ஆனால் அரும் பெரும் உள்ளம் படைத்த உழவர்களின் செய்கை, நன்றி மறவாத அந்த நல்லவர்களின் செயல் அவரைத் திணறவைத்தது; ஆச்சரியத்தோடு அழுகையையும் அவருக்கு அளித்தது. யாருக்குத் தீராத தீங்கு செய்ய எண்ணினாரோ அவர்களாலேயே அவருக்கு உதவி கிடைத்தது.

★

தீபாவளி கழிந்த மறுநாள் வைரமாலையோடு கல்கத்தாவுக்குச் சென்று, மருமகன் முகத்தில் விழிக்காமல் மகளின் கழுத்தில்

## "கல்கி" ஜூலை மாதச் சிறுகதைப் போட்டி

### பரிசு ரூபாய் நூறு

மாதந்தோறும் நடக்கும் இந்தச் சிறுகதைப் போட்டியில் எழுத்தாளர்கள் எல்லோரும் கலந்து கொள்ளலாம். எழுத்தாளர்கள் சொந்தமாகவே கதைகள் புனைந்து அனுப்ப வேண்டும். போட்டிக்கு ஒருவர் எத்தனை கதைகள் வேண்டுமானாலும் அனுப்பலாம். கதைகள் ''கல்கி''யில் ஆறு பக்கத்திலிருந்து எட்டு பக்கத்துக்குள் இருக்க வேண்டும். ஒவ்வொரு மாதமும் அந்தந்த மாதப்போட்டிக்கு வந்த கதைகளில் சிறந்ததற்கு நூறு ரூபாய் பரிசு வழங்கப்படும்.

முந்திய மாதப் பரிசுக் கதை அடுத்த மாத மூன்றாவது வாரத்தில் வெளியாகும். பிரசுரத்துக்குத் தகுதியுள்ள மற்றக் கதைகளும் ''கல்கி''யில் பிரசுரமாகும். கதைகள் அந்தந்த மாதம் 20-ம் தேதிக்குள் ''கல்கி'' காரியாலயத்துக்கு வந்து விடவேண்டும்.

கதைகளைத் திரும்பப் பெற விரும்பும் எழுத்தாளர்கள் கதைகளுடன் போதிய தபால் தலைகள் வைத்து அனுப்ப வேண்டுமாய்க் கேட்டுக் கொள்கிறோம்.

தேர்ந்தெடுத்த கதைகளைத் திருத்துவதற்கும், குறைத்து வெளியிடுவதற்கும் ஆசிரியருக்குப் பூரண உரிமை உண்டு.



மனைவி:— என்னு!...இந்த மாசச் சம்பளத்திலேயாவது ஒரு நெக்லெஸ்.........

புருஷன்:— போடீ போ......நகையை வாங்கிட்டுப் பிறகு அதற்கு நகை வரி வேறே என்னாலே கொடுக்க முடியாது!

---

ஊட்டி அழகு பார்த்துவிட்டு வருவது என்று தீர்மானித்திருந்தார் பொன்னுசாமி.

ஊருக்குக் கிளம்பிக் கொண்டிருந்த பொன்னுசாமியின் காதில் 'சார்' என்ற தபால்காரரின் குரல் விழவே வெளியே வந்து தபாலை வாங்கினார். அதில் போடப்பட்டிருந்த முத்திரை பம்பாய் என்று தெளிவாகக் காட்டியது. அங்கிருந்து யார் எழுதி இருக்கக்கூடும் என்று எண்ணியவராய் உறையைப் பிரித்துப் படித்தார். ஆரம்பமே அவருக்கு ஆச்சரியத்தை அளித்தது.

"உயர்திரு மாமா அவர்களுக்குக் கோபாலன் கோடி கோடி வணக்கம் புரிந்து எழுதிக் கொண்டது.

பணம் - நீதியையும் நேர்மையையும் அடியோடு அழிக்கும் சக்தி வாய்ந்தது என்பதை நான் அங்கிருந்தபொழுது நன்கு அறிந்து கொண்டேன். நல்லவர்களையும் அது பொல்லாதவர்களாக்கி விடுகிறது.

'வைரமாலையோடு மகளை அனுப்பா விட்டால் என்ன நேருமோ? அவள் வாழ்வு எப்படி ஆகுமோ?' என்று நீங்கள் அஞ்சி அஞ்சிச் சஞ்சலப்பட்டதும் அருமை மாமியோடு ஆலோசனை புரிந்ததும் நான் கேட்காமல் இருந்திருந்தால் எவ்வளவு விபரீதங்கள் நேர்ந்திருக்குமோ!

நான் ஒட்டுக் கேட்டது தவறுதான். ஆனால் அந்தத் தவறு ஒரு நன்மைக்கு உபயோகப் பட்டதென்றால் மன்னித்து விடலாம் அல்லவா? ஆகலின் என்னையும் நீங்கள் மன்னித்து விடுங்கள்.

நான் அங்கிருந்துகொண்டே வைரமாலை வேண்டாம், வீட்டின் மீது மேலும் கடன் வாங்க வேண்டாம், பாவி நல்லுசாமி கவுண்டனுக்காக நல்ல உழவர்களுக்குத் தீங்கிழைக்க வேண்டாம் என்று கூறி இருந்தால் நீங்கள் கேட்டிருப்பீர்களா? கேட்டிருக்கவே மாட்டீர்கள். எப்படியும் கொடுத்த வாக்கை நிறைவேற்ற வைரமாலைக்குப் பணம் திரட்டத்தான் முயன்றிருப்பீர்கள்.

ஆனால் என் மனம் உங்கள் துன்பத்தைக் காணப் பொறுக்கவில்லை. உங்கள் சிரமத்தைக் குறைக்க வேண்டும் என்பதற்காகவே அந்த வழியை நான் கையாண்டேன். உங்கள் உள்ளம் புண்படும் என்று தெரிந்தும் அந்த வழியைத் தவிர வேறு வழி எனக்குப் புலப்படவில்லை. கண நேரத் துன்பத்துக்குப்பின் நீண்ட இன்பம் இருக்கிறது என்பதை அறிந்துதான் சகுந்தலாவை அப்படி அழ அழ அழைத்துக் கொண்டு வந்தேன்.

சகுந்தலாவுக்கும் இங்கு வந்த பிறகுதான் உண்மைக் காரணத்தைக் கூறினேன். அங்கிருக்கும் பொழுதே கூறி இருந்தால் என் திட்டம் தோல்வியுற்றிருக்கும். நாங்கள் ஊருக்குப் புறப்படும்பொழுது நிச்சயம் வைரமாலையோடுதான் புறப்படுவோம். மூத்தவள் மட்டும் என்ன அப்படி உயர்ந்தவள்? அவளுக்குத் தங்கை மூவர் இருப்பதை நீங்கள் மறந்து போய் விட்டீர்களா?

'கொடுத்த வாக்கை நிறைவேற்ற முடியாதபடி இந்தப் பையன் அசட்டுக் காரியம் செய்து விட்டானே' என்று நினைக்க வேண்டாம். உங்கள் வாக்குறுதியை நான் காப்பாற்றிவிடுவேன். உங்களுக்கு ஒரு மகன் இருந்து அவன் சம்பாதித்த பணத்திலிருந்து சகுந்தலாவுக்கு ஒரு வைரமாலை வாங்கிப் போட்டால் நீங்கள் வேறு வாங்கிப் போட வேண்டும்? இப்பொழுது சகுந்தலாவின் கழுத்தை அழகான வைரமாலை ஒன்று பற்றிக் கொண்டிருக்கிறது. நான் சம்பாதித்த பணத்திலிருந்து வாங்கிய மாலை அது. அதை யார் வேண்டுமானாலும் வாங்கியதாக நான் கூறலாம். என் மாமா வாங்கினார் என்றும் கூறலாம்.

என் நண்பனின் வீட்டிலிருந்து கல்கத்தா சென்றதும் கடிதம் எழுதுகிறேன். வருகிற ஆண்டு தீபாவளியை 'ஜாம் ஜாம்' என்று குதூகலமாக எல்லோரும் ஒன்று கூடிக் கொண்டாடி விடுவோம்.

—கோபாலன்."

கடிதத்தை மட மடவென்று படித்து முடித்தார். பொன்னுசாமியின் உள்ளம் பொங்கும் புனலாயிற்று. அவர் அடைந்த ஆனந்தத்தைச் சொல்லும் திறமை மொழிக்குக் கிடையாது; அவர் அப்படிக் குதூகலித்தார்.

கோபாலன் அவர் கண்களுக்கு 'அந்த'க் கோபாலனாகவே தோன்றினான். 'ஆபத்தில் உதவ 'அவன்' நேராக வரமாட்டான். ஆனால் உலகிலேயே உள்ள சில பேராக வருவான்' என்று எண்ணியது அவர் மனம். 'ஆபத்பாந்தவா! நீ யார் யார் உருவில் வந்து எனக்கு உதவி, உண்மைப் பொருளையும் உணர்த்திச் சென்றுள்ளாய்!' என்றும் அவர் உள்ளம் எண்ணி வியந்தது.

Printed and Published by T. Sadasivam at the Kalki Press, Kilpauk, Madras-10
for the Proprietors Messrs Bharathan Publications Private Limited
Managing Editor: T. Sadasivam.

ஆரோக்கியமான குழந்தைகள் தவருமல் லைப்பாய் சோப்
உபயோகித்துக் குளிக்கின்றனர்

*அன்றாட அழுக்கிலுள்ள கிருமிகளை அது
கழுவிக் களைகிறது!

*தினசரி உடம்பில் படியும் அழுக்கிலுள்ள கிருமி
கள் வாயிலாகத்தான் ஒவ்வொருவரும் தொத்து
நோய் ஆபத்துக்கு ஆளாகிறோம். அதன்
காரணமாகவே, ஆரோக்கியமுள்ள பலர்
வழக்கமாக லைப்பாய் சோப் உபயோகித்து
அழுக்குடன் கிருமிகளையும் கழுவிக்
களைந்து தத்தம் ஆரோக்கியத்தைப் பாது
காத்துக் கொள்கின்றனர்— ஆரோக்கிய
மான அத்தகைய புதுமலர்ச்சியை
அது அளிக்கிறது!




L. 232-50 TM

இந்தியாவில் தயாரித்தது

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Ceylon



## உங்கள் மனதிற்குகந்த பவுடர்
## வசீகர நறுமணங் கமழ்வதான...
# பியர்ஸ் டால்கம்



கொள்ளைகொள்ளும் நறுமணம், சருமத்தோடு குலவும் இன்பம், பியர்ஸ் மென்மை — இவ்வனைத்தையும் உங்களுக்கு அளித்திடுவது **பியர்ஸ் டால்கம்!** உன்னதமாக நறுமணமூட்டப் பெற்ற இந்தப் பவுடரை உபயோகித்தால் கோடையின் உச்சநிலையிலும் நீங்கள் மாறாத புது மலர்ச்சியுடன் நாள் முழுவதும் மிளிர முடியும். இள மஞ்சள் நிறமும் பச்சை நிறமும் எடுப்பாக அமையப்பெற்ற டின்களில் வரும் **பியர்ஸ் டால்கம்** பவுடரை வாங்குங்கள்.




---




மேனியின் பராமரிப்புக்கு, கிளிசரின் அடங்கிய **பியர்ஸ் சோப்** உபயோகியுங்கள். தூய்மையே உருவான சிறந்த சோப் பியர்ஸ் தான் என்பது உங்களுக்கே புலப்படும்!

---